தண்டியாசிரியர் அருளிய

# தண்டியலங்காரம்




தெளிவுரை

**புலியூர்க்கேசிகன்**

வர்த்தமானன் பதிப்பகம், சென்னை-34.

55-5

தண்டியாசிரியர் அருளிய

# தண்டியலங்காரம்

தெளிவுரை

புலியூர்க் கேசிகன்




வர்த்தமானன் பதிப்பகம்,
1, மகாலிங்கம் முதல் குறுக்குத் தெரு,
மகாலிங்கபுரம், சென்னை-34.

# முன்னுரை

'அறிவுடையார் எல்லாம் உடையார்' என்பது ஆன்றோர் வாக்கு ஆகும். அறிவை அறிதற்கும் மற்றோர்க்கு அறிவித்தற்கும் கருவியாக விளங்குவது மொழியாகும். உலக மொழிக்குள் செவ்வியதொன்றாகத் திகழ்வது நம் தமிழ்மொழி ஆகும். தமிழ் மொழியைச் செழுமிய முறையில் கற்கவும் சொல்லவும் பயன் படுவனவே, இணையற்றவாய் விளங்கும் தமிழ் இலக்கண நூல்கள் பலவும் ஆகும்.

தமிழ் இலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து பாகுபாடுகளை உடையது. அவற்றுள் அணி என்னும் அலங்கார நெறியை வகுத்துக் கூறுவது இத் தண்டியலங்காரம் ஆகும்.

வடமொழியில் அலங்கார நூல்கள் பல உள்ளன. அவற்றுள் காவியாதர்சம்,சந்திராலோகம்,குவலயானந்தம் என்பனதமிழிலும் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளன. காவியாதர்சத்தைச் செய்தவர் மகாகவி தண்டியாசிரியர் ஆவர். இத்தண்டியலங்காரத்தைச் செய்தவர் பெயரும் 'தண்டி' என்றே வழங்கப்பெற்று வருகின்றது. இவருடைய வரலாறு பற்றிப் பெரிதும் அறிதற்குரிய குறிப்புக்கள் ஏதும் கிடைக்கவில்லை. பழங்காலத் தமிழ்ப் புலவர்களின் தன்டைக்கமே இதற்கும் காரணம் எனலாம்.

இது பொருளியல், பொருளணியியல் சொல்லணியியல், என்னும் மூன்று பகுப்புக்களையுடையது. இந்நூலிற் பயின்றுவரும் உதாரணச் செய்யுட்கள் எல்லாம் சொற்சுவையும் பொருட்சுவையும் மிக்கனவாகத் திகழ்கின்றன.

முத்தகச் செய்யுளுக்கு உதாரணச் செய்யுளாக வருவதில், 'பொன்னேய் அநபாயன் பொன்னெடுந்தோள்' என்றும், வாழ்த்தணியின் உதாரணகவியில், 'காவிரி நாட்டு அண்ணல் அநபாயன் வாழி' என்றும் வருவது

கொண்டு இந்நூலாசிரியரை அவன் காலத்தவராகக் கொள்வர் சிலர்.

தமிழ்ச் செய்யுள் வளர்ச்சிக்கு இத் தண்டியலங்காரத் தின் இன்றியமையாமை அறிந்து, இதனை முறையாக அச்சிட்டு வெளியிடுவதற்கு ஏற்பாடு செய்தவர் மதுரைச் தமிழ்ச் சங்கத்தை நிறுவித் தமிழ்காத்த கோமான் பாண்டித்துரைத்தேவர் அவர்களாவார். யாழ்ப்பாணத் துச் சுன்னாகம் குமார சுவாமிப்பிள்ளையவர்களின் அந்தப் பதிப்பு கி.பி. 1903 ஆம் ஆண்டில் சிறப்பாக வெளிவந்தது. தொடர்ந்து 1926இல் இரண்டாம் பதிப் பாகவும் வெளிவந்தது.

இதனைத் தொடர்ந்து பிற்காலங்களில் வேறு சில அச்சுப் பதிப்புக்களும் வெளிவந்தன. அவற்றுள் பரவ லாக வழக்கில் இருந்து வருவது சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தின் பதிப்பாகும். இதன் பழைய உரை யாசிரியர் இன்னாரென்பதும் அவர் வரலாறும் தெளி வாகப் புலப்படவில்லை எனினும் சிலர் சுப்பிரமணிய தேசிகர் செய்ததென்று கருதுகின்றனர். கழகப் பதிப்பும் அவ்வாறே குறிப்பிட்டுள்ளது. தமிழ் மாணவர்கள் அனை வரும் அவற்றைக் கற்றுப் புலமைப்பயனைப் பெற்று வர லாயினர்.

இந்நிலையில் இக்காலத்திலே தமிழிற் செய்யுள் செய்யும் ஆவல் இளைஞர்கட்கெல்லாம் ஏற்பட்டுள்ளது. தங்கள் செய்யுட்களைப் பலரும் படித்துப் பாராட்ட வேண்டும் என்றும் விரும்புகின்றனர். அலங்காரத்தோடு திகழும் ஒருவரை அனைவரும் வியந்து நோக்கிக் களிப் பது போலவே, அலங்காரத்தோடு பொருந்தச் செய்யப் படும் செய்யுட்களும் பலரையும் கவர்ந்து களிப்பூட்டும் என்பது தெளிவாகும். அவர்கட்கு உதவுகின்ற வகை யில் ஒரு தண்டியலங்காரப் பதிப்பை அமைத்து வழங்கும் விருப்பம் எனக்கு ஏற்பட்டது. தொல்காப்பியம், புறப் பொருள் வெண்பாமாலை என்னும் நான் வழங்கிய

மக்கள் பதிப்பு இலக்கண நூற்கள் பல பதிப்புக்கள்வெளி வந்து பாராட்டிற்குரியவாய் இலங்குகின்றன. அவ்வரிசை யில் இத் தண்டியலங்கார உரைப்பதிப்பும் வரவேற்கப் படும் என்று நம்புகின்றேன்.

இந்நூலின் உதாரணச் செய்யுட்கள் பலவும் இனிமை யும் செழுமையும் மிக்கனவாய்ச் செய்யுள் செய்வார்க்கு நல்ல எடுத்துக்காட்டுக்களாய்த் திகழ்வன. இவற்றை ஏற்புடன் எடுத்துக்காட்டிய பழைய உரையாசிரியரையும் போற்றி மகிழ வேண்டும்.

இந்நூலை அமைக்க இதற்குமுன் வெளிவந்த பல பதிப்புக்கள் எனக்கு உதவியிருந்தன. அறிஞர்கள் பலரின் கருத்துக்களும் எனக்கு ஊக்கமளித்து உதவி யிருக்கின்றன. அவர்கள் அனைவருக்கும் வணக்கத்தோடு நன்றி பாராட்டுகின்றேன்.

இதனைச் சிறப்பாக அச்சிட்டுத் தமிழ் மக்களுக்கு வழங்க முன்வந்த வர்த்தமானன் பதிப்பகத்தார்க்கும், பேராசிரியர் ஸ்ரீ சந்திரனர்ர் அவர்கட்கும் என் நன்றி உரியதாகும்.

தமிழ் ஆர்வமிக்க அன்பர்கட்கு இந் நூலும் ஒரு நல்ல விருந்தாகத் திகழும் என்று நம்புகின்றேன்.

இவ்வகையில் என்னை ஈடுபடுத்தித் தமிழ்ப்பணியை நடத்திவரும், அன்னை பராபரையின் இன்னருளையும் நினைந்து போற்றுகின்றேன்.

வாழ்க தமிழ்! வளர்க தமிழ்நலம்!

**—புலியூர்க் கேசிகன்**

# பொருளடக்கம்

## தண்டியலங்காரம்


தற்சிறப்புப் பாயிரம்

## 1. பொதுவியல்

1. செய்யுள் வகை 9
1. முத்தகம் 10
2. குளகம் 10
3. தொகை நிலை 11
4. தொடர்நிலை 12

1. பொருட்டொடர் நிலை 12
அ. பெருங்காப்பியம் 13
ஆ. காப்பியம்
இ. காப்பிய நடை 15
ஈ. சொற்றொடர் நிலை 15

5. செய்யுள் நெறி 16

வைதருப்பம் 16
கௌடம் 17
செறிவு 17
தெளிவு 18
சமநிலை 20
இன்பம் 20
ஒழுகிசை 22
உதாரம் 26
உய்த்தலில் பொருண்மை 28
காந்தம் 29
வலி 31
சமாதி 32

6. புறநடை 34

## 2. பொருளணியல்

சரசுவதி தேவி துதி 36
பொருளணிகளின் வகை 36

1. தன்மை அணி 38

1. பொருட்டன்மை 39
2. குணத்தன்மை 40

3. சாதித்தன்மை 41
4. தொழிற்றன்மை 42

2. உவமை அணி 44

1. பண்பு 44
2. தொழில் 45
3. பயன் 45

உவமை வகை 50

1. விரி யுவமை 50
2. தொகை யுவமை 51
3. இதரவிதர வுவமை 52
4. சமுச்சய வுவமை 53
5. உண்மை யுவமை 54
6. மறுபொரு ளுவமை 54
7. புகழ்த லுவமை 55
8. நிந்தை யுவமை 56
9. நியம வுவமை 56
10. அநியம வுவமை 57
11. ஐய வுவமை 57
12. தெரிதரு தேற்ற வுவமை 58
13. இன்சொ லுவமை 59
14. விபரீத வுவமை 59
15. இயம்புதல் வேட்கை யுவமை 60
16. பலபொரு ளுவமை 61
17. விகார வுவமை 62
18. மோக வுவமை 62
19. அபூத வுவமை 63
20. பலவயிற்போலி யுவமை 64
21. ஒருவயிற் போலி யுவமை 65
22. கூடா வுவமை 65
23. பொதுநீங் குவமை 66
24. மாலை யுவமை 66
25. அற்புத வுவமை 67

26. சிலேடை யுவமை 68
27. அதிசய வுவமை 70
28. விரோத வுவமை 71
29. ஒப்புமைக் கூட்ட வுவமை 72
30. தற்குறிப்பேற்ற வுவமை 72
31. விலக் குவமை 73
32. ஏது வுவமை 74

உவமவழூவமைதி 75
உவமவுருபு 78
3. உருவகஅணி 79

உருவக வகை 80
1. தொகை யுருவகம் 81
2. விரியுருவகம் 81
3. தொகைவிரி புருவகம் 82
4. இயை புருவகம் 83
5. இயைபிலி யுருவகம் 83
6. வியநிலை யுருவகம் 84
7. சிறப் புருவகம் 84
8. விபேக வுருவகம் 85
9. சமதான வுருவகம் 86
10. உருவக வுருவகம் 87
11. ஏகாங்க வுருவகம் 87
12. அநேகாங்க வுருவகம் 88
13. முற் றுருவகம் 89
14. அவயவ வுருவகம் 89
15. அவயவி யுருவகம் 90
16. உவம வுருவகம் 91
17. ஏது வுருவகம் 91
18. வேற்றுமை யுருவகம் 92
19. விலக் குருவகம் 93
20. அவநுகி யுருவகம் 93
21. சிலேடை யுருவகம் 94

புறனடை 95
1. உருவகம் 95
2. உவமை 99

4. தீவக வணி 105

1. முதனிலைக் குணத் தீவகம் 106
2. முதனிலைத் தொழிற் தீவகம் 106
3. முதனிலை சாதித் தீவகம் 107
4. முதனிலைப் பொருட் டீவகம் 108
5. இடைநிலைக் குணத் தீவகம் 109
6. இடைநிலைத் தொழிற் றீவகம் 109
7. இடைநிலைச் சாதித்தீவகம் 110
8. இடைநிலைப் பொருட் டீவகம் 111
9. கடைநிலைக் குணத் தீவகம் 112
10. கடைநிலைத் தொழிற் றீவகம் 112
11. கடைநிலைப் பொருட் டீவகம் 113
12. கடைநிலைச் சாதித் தீவகம் 114
1. மாலைத் தீவகம் 115
2. விருத்த தீவகம் 116
3. ஒருபொருட் டீவகம் 116
4. சிலேடைத் தீவகம் 117
5. உவமா தீவகம் 118
6. உருவக தீவகம் 119

5. பின்வரு நிலை யணி 119

1. சொற் பின்வரு நிலை 120
2. பொருட் பின்வருநிலை 121
3. சொற்பொருட் பின்வரு நிலை 121
4. உவமப் பொருட் பின்வருநிலை 122

6. முன்ன விலக்கணி 123

1. இறந்தகால விலக்கு 124
2. எதிர்கால விலக்கு 124
3. நிகழ்கால விலக்கு 125
4. பொருள் விலக்கு 125

5. குண விலக்கு 126
6. காரண விலக்கு 126
7. காரிய விலக்கு 127
8. தன்சொல் விலக்கு 128
9. வாழ்த்து விலக்கு 128
10. தலைமை விலக்கு 129
11. இகழ்ச்சி விலக்கு 130
12. துணைசெயல் விலக்கு 131
13. முயற்சி விலக்கு 131
14. பரவச விலக்கு 131
15. உபாய விலக்கு 132
16. கையறல் விலக்கு 133
17. உடன்படல் விலக்கு 133
18. வெகுளி விலக்கு 134
19. இரங்கல் விலக்கு 134
20. ஐய விலக்கு 135
21. வேற்றுமைப் பொருள்வைப்பு விலக்கு 136
22. சிலேடை விலக்கு 136
23. ஏது விலக்கு 137

7. வேற்றுப் பொருள்வைப்பணி 137

1. முழுவதுஞ் சேறல் 138
2. ஒரு வழிச்சேறல் 139
3. முரணித் தோன்றல் 139
4. சிலேடையின் முடித்தல் 140
5. கூடா வியற்கை 141
6. கூடுமியற்கை 141
7. இருமை யியற்கை 142
8. விபரீதப் படுத்தல் 142

8. வேற்றுமை யணி 143

1. ஒருபொருள் வேற்றுமைச் சமம் 143
2. இருபொருள் வேற்றுமைச் சமம் 145
3. உயர்ச்சி வேற்றுமை 146

| | | |
|---|---|---|
| 4. | இருபொருள் வேற்றுமைச் சமம் | 146 |
| 5. | உயர்ச்சி வேற்றுமை | 147 |
| 6. | குணவேற்றுமை | 148 |
| 7. | பொருள் வேற்றுமை | 149 |
| 8. | சாதிவேற்றுமை | 149 |
| 9. | தொழில் வேற்றுமை | 150 |
| 10. | விலக்கியல் வேற்றுமை | 151 |
| 11. | சிலேடை வேற்றுமை | 151 |
| | **9. விபாவனையணி** | 152 |
| 1. | அயற் காரண விபாவனை | 153 |
| 2. | இயல்பு விபாவனை | 154 |
| 3. | வினையெதிர் மறுத்துப் பொருள் புலப்படுத்தல் | 155 |
| 4. | காரணம் விலக்கிக் காரியம் புலப்படுத்தல் | 156 |
| | **10. ஒட்டணி** | 157 |
| 1. | அடையும் பொருளும் அயல்பட மொழிதல் | 158 |
| 2. | அடைபொதுவாக்கிப் பொருள் வேறுபட மொழிதல் | 159 |
| 3. | அடை விரவித் தொடுத்தல் | 159 |
| 4. | அடை விபரீதப் படுத்தல் | 160 |
| | **11. அதிசயவணி** | 161 |
| 1. | பொருளதிசயம் | 161 |
| 2. | குண வதிசயம் | 162 |
| 3. | தொழிலதிசயம் | 162 |
| 4. | ஐயவதிசயம் | 163 |
| 5. | துணிவதிசயம் | 163 |
| 6. | திரிபதிசயம் | 164 |
| | **12. தற்குறிப்பேற்றவணி** | |
| 1. | பெயர் பொருட் டற்குறிப் பேற்றம் | 165 |
| 2. | பெயராத பொருட் டற் குறிப் பேற்றம் | 165 |
| | **13. ஏதுவணி** | 166 |
| | **1. காரகவேது** | 167 |

1. கர்த்தா காரக வேது 167
2. பொருட் காரக வேது 168
3. கரும காரக வேது 168
4. கருவி காரக வேது 169
2. ஞாபகவேது 170
3. அபாவவேது 170
1. என்றுமபாவ வேது 171
2. இன்மையதபாவ வேது 171
3. ஒன்றிறொன்றபாவ வேது 172
4. உள்ளதன பாவ வேது 173
5. அழிவுபாட்டபாவ வேது 173
4. சித்திரவேது 174
1. தூரகாரிய வேது 174
2. ஒருங்குடன்றோற்ற வேது 174
3. காரிய முந்துறூஉங் காரண நிலையேது 175
4. யுத்த வேது 175
5. அயுத்தவேது 176
5. ஐயவேது 176
14 நுட்பவணி 177
1. குறித்த நுட்பம் 177
2. தொழில் நுட்பம் 177
15. இலேசவணி 178
1. புகழ்வது போலப் பழித்தல் 179
2. பழிப்பது போலப் புகழ்தல் 180
16. நிரனிறை யணி 180
17. ஆர்வமொழி யணி 181
18. சுவையணி 182
1. வீரச் சுவை 183
2. அச்சச் சுவை 183
3. இழிப்புச் சுவை 184
4. வியப்புச் சுவை 184
5. காமச் சுவை 185

6. அவலச் சுவை 185
7. உருத்திரச் சுவை 186
8. நகைச் சுவை 186
19. தன்மேம் பாட்டுரை 187
20. பரியாய வணி 188
21. பமாகித வணி 189
22. உதாத்த வணி 189
1. செல்வப் பெருமை 190
2. உள்ளப் பெருமை 190
23. அவநுதி யணி 191
1. சிறப்பவ நுதி 191
2. பொருளவநுதி 191
3. குண வவ நுதி 192
24. சிலேடை யணி 193
1. செம் மொழிச் சிலேடை 193
2. பிரிமொழிச் சிலேடை 194
3. ஒரு வினைச் சிலேடை 195
4. பலவினைச் சிலேடை 196
5. முரண் வினைச் சிலேடை 197
6. நியமச் சிலேடை 198
7. நியமவிலக்குச் சிலேடை 198
8. விரோதச் சிலேடை 199
9. அவிரோதச் சிலேடை 200
25. விசேட வணி 200
1. குணக்குறை விசேடம் 201
2. தொழிற்குறை விசேடம் 201
3. சாதிக்குறை விசேடம் 202
4. பொருட்குறை விசேடம் 203
5. உறுப்புக்குறை விசேடம் 203
26. ஒப்புமைக் கூட்டவணி 204
1. புகழொப்புமைக் கூட்டம் 204
2. பழிப்பொப்புமைக் கூட்டம் 205
27. விரோத வணி 205
1. பொருள் விரோதம் 205
2. சொல் விரோதம் 206
28. மாறுபடு புகழ்நிலை 208
29. புகழாப் புகழ்ச்சியணி 209
30. நிதரிசநவணி 201
1. புகழ்மை நிதரிசநம் 201

2. தீமை நிதரிசநம் 201
31. புணர் நிலை யணி 212
1. வினைப் புணர்நிலை 212
2. பண்புப் புணர்நிலை 213
32. பரிவருத்தனை யணி 213
33. வாழ்த்தணி 214
34. சங்கீர்ண வணி 214
உவம உருவகங்களின் புறநடை 215
35. பாவிக வணி 216
III சொல்லணியியல் 128
1. மடக்கு 218
1. முதலடி முதன் மடக்கு 220
2. இரண்டாமடி முதன் மடக்கு 220
3. மூன்றாமடி முதன் மடக்கு 221
4. நான்காமடி முதன் மடக்கு 222
5. முதலடியும் இரண்டாமடியும் முதன் மடக்கு 222
6. முதலடியும் மூன்றாமடியும் முதன் மடக்கு 223
7. முதலடியும் ஈற்றடியும் முதன் மடக்கு 223
8. மூன்றாமடியும் நான்காமடியும் முதன் மடக்கு 224
9. இரண்டாமடியும் மூன்றாமடியும் முதன் மடக்கு 224
10. இரண்டாமடியும் ஈற்றடியும் முதன் மடக்கு 225
11. முன்னைய மூன்றடியும் முதன் மடக்கு 225
12. இாண்டாமடி யொழிந்த மூன்றடியும் முதன் மடக்கு 226
13. மூன்றாமடி யொழிந்த ஏனைய மூன்றடியும் முதன் மடக்கு 226
14. முதலொழிந்த மூன்றடியும் முதன் மடக்கு 226
15. முற்று மடக்கு 227
16. இடைமுற்று மடக்கு 228
17. இறுதிமுற்று மடக்கு 228
18. முதலுமிடையும் முற்று மடக்கு 229
19. முதலுமிறுதியும் முற்று மடக்கு 229
20. இடையுமிறுதியும் முற்று மடக்கு 230
21. அடிதோறு மூன்றிடத்து மடக்கு 230
22. இடையிட்டு வந்த முதன் முற்று மடக்கு 231
23. இடையிட்டு வந்த இடைமுற்று மடக்கு 232
24. இடையிட்டு வந்த இறுதி முற்று மடக்கு 232

25. இடையிட்டு மிடாதும் வந்த
இடையிறுதிகண் மடக்கு 233
அடி முழுவதும் மடக்கு 233
26. முதலீரடியும் முழுதும் மடக்கு 234
27. முதலடியும் மூன்றாமடியும் முழுதும் மடக்கு 234
28. இடையீரடியும் முழுதும் மடக்கு 235
29. முதலடியும் ஈற்றடியும் முழுதும் மடக்கு 235
30 கடையீரடியும் முழுதும் மடக்கு 236
31. இரண்டாமடியும் ஈற்றடியும் முழுதும் மடக்கு 236
32. முதல் மூன்றடியும் முழுதும் மடக்கு 236
33. முதலொழிந்த மூன்றடியும் முழுதும் மடக்கு 237
34. இரண்டாமடி யொழிந்த
மூன்றடியும் முழுதும் மடக்கு 237
35. மூன்றாமடியொழிந்த மூன்றடியும் முழுதும்
மடக்கு 238
36. நான்கடியும் முழுதும் மடக்கு 238
37. ஒரு சொல்லே நான்கடியும் மடக்கு 238
38. இரண்டடிப் பாடக மடக்கு 239
39. அந்தாதி மடக்கு 241
40. ஓரெழுத்து மடக்கு 242
41. ஓருயிர் மடக்கு 243
42. ஒருவருக்கப் பாட்டு 244
43. இருவருக்கப் பாட்டு 245
44. மூவருக்கப் பாட்டு 246
45. நால்வருக்கப் பாட்டு 246
46. ஒற்றெழுத்தில்லாப் பாட்டு 247
47. வல்லினப் பாட்டு 247
48. மெல்லினப் பாட்டு 248
49. இடையினப் பாட்டு 248
2. சித்திர கவி 249
1. கோமுத்திரி 250
2. கூடசதுக்கம் 251
3. மாலை மாற்று 252
4. எழுத்து வருத்தனம் 253
5. நாக பந்தம் 254
6. வினாவுத்தரம் 246
7. காதை கரப்பு 258
8. கரந்துறைப் பாட்டு 259
9. சக்கர பந்தம் 260

நான்காரச் சக்கர பந்தம் 260
ஆறாரச் சக்கர பந்தம் 261
எட்டாரச் சக்கர பந்தம் 263
10. சுழி குளம் 265
11. சருப்பதோ பத்திர பந்தம் 266
12. அக்கர சுதகம் 267
13. நிரோட்டம் 267
14. ஒற்றுப் பெயர்த்தல் 268
15. மாத்திரைச் சுருக்கம் 269
16. மாத்திரை வருத்தநம் 269
17. முரச பந்தம் 270
18. திரிபாகி 271
19. திரி பங்கி 272
20. பிறிதுபடு பாட்டு 274

**3. வழுக்களின் வகை** 275

**4. புறனடை** 276

1. பிரிபொருட் சொற்றொடர் 276
2. மாறுபடு பொருண் மொழி 278
3. மொழிந்தது மொழிவு 279
4. கவர்படு பொருண்மொழி 280
5. நிரனிறை வழு 281
6. சொல் வழு 283
7. யதி வழு 284
8. செய்யுள் வழு 285
9. சந்தி வழு 287

**மலைவு** 288

1. இடமலைவு 288
2. கால மலைவு 289
3. கலை மலைவு 291
4. உலக மலைவு 292
5. நியாய மலைவு 292
6. ஆகம மலைவு 293

**மலைவமைதி** 294

1. இடமலைவு அமைதி 294
2. கால மலைவு அமைதி 295
3. கலைமலைவு அமைதி 295
4. உலக மலைவு அமைதி 296
5. நியாய மலைவு அமைதி 296
6. ஆகம மலைவு அமைதி 297

**புறனடை** 297

சூத்திர முதற்குறிப்பு அகராதி 299

# தண்டியலங்காரம்

## தற் சிறப்புப் பாயிரம்

சொல்லின் கிழத்தி மெல்லியல் இணையடி
சிந்தைவைத் தியம்புவன் செய்யுட் கணியே.

பொருள்: மென்மைத் தன்மை வாய்ந்த இரண்டாகிய அடியினை உடையவளும், சொல்லின் கிழத்தியாக விளங்குபவளுமான கலைமகளின் திருவடிகளைச் சிந்தையிலே வைத்துப் போற்றிச் செய்யுள்களிலே அமைந்து விளங்கும் அணிவகைகளின் இலக்கணத்தை யாம் உரைப்போமாக.

தெய்வ வணக்கமும், நூல் உரைக்கும் பொருளும் ஒருங்கே இதன்கண் தோற்றுவாய் செய்யப்பட்டது.

முதலாவது

# 1. பொதுவியல்

அணி இலக்கணம் பற்றிய பொதுவான செய்திகள் இந்த இயலில் கூறப்படுகின்றன.

### 1. செய்யுள் வகை

1. செய்யுள் என்பவை தெரிவுற விரிப்பின்
முத்தகம் குளகம் தொகை தொடர் நிலையென
எத்திறத் தனவும் ஈரிரண்டாகும்.

பொருள்: செய்யுள் என்பவைபற்றி விளக்கமாகச் சொல்வதானால், எத்தன்மையான செய்யுட்களும், (1) முத்தகம் (2) குளகம், (3) தொகை, (4) தொடர்நிலை என்னும் நான்கு வகையினுள் அடங்கும்.

அணிகள் அமைந்து கிடக்கும் செய்யுட்கள் நான்கு வகைப்படும் என்று கூறி, அவற்றின் பெயரும் கூறியது இது.

## 1. முத்தகம்

2. அவற்றுள்,

முத்தகச் செய்யுள் தனிநின்று முடியும்.

பொருள்: சொல்லப் பெற்ற நான்கு வகைச் செய்யுள் வகைகளுள், முத்தகச் செய்யுள் என்பது, தனியாக நின்று ஒரு பொருளை உணர்த்தி முடியும் தன்மை பெற்றதாகும்.

(எடுத்துக் காட்டு)

என்னேய் சிலமடவார் எய்தற்கு எளியவோ
பொன்னே அநபாயன் பொன்னெடுந்தோள் — முன்னே
தனவேயென் றாளும் சயமடந்தை தோளாம்
புனவேய் மிடைந்த பொருப்பு.

பொருள்: பொன்னைப் போன்றவளே! தனக்கே முன்னுரிமை உடையனவென்று கருதி வெற்றித் திருமகள் சேர்ந்திருக்கும், மூங்கில்கள் நெருங்கியிருக்கும் மலை போன்ற அநபாயனின் பெருமைமிக்க நெடுந்தோள்கள், என்னைப்போன்ற சில பெண்களுக்கும், தழுவுவதற்கு எளியவை யாகுமோ? ஆகாது காண்!

இச் செய்யுள் தனியாக நின்று பொருள் முடிந்தது.

## 2. குளகம்

3. குளகம் பலபாட்டு ஒருவினை கொள்ளும்.

பொருள்: பல பாட்டுகள் ஒரு வினையைக் கொண்டு முடியுமாறு அமைந்து வருவது குளம் ஆகும்.

(எ-டு)

முன்புலகம் ஏழினையும் தாயதுவும், முதுணர்வோர்
இன்புறக்கங் காந்தியை ஈன்றதுவும்-நன்பரதன்
கண்டிருப்ப வைகியதும் கான்போ யதுமிரதம்
உண்டிருப்பா ருட்கொண் டதும்

வெந்த கரியதனை மீட்டுமக வாக்கியதும்
அந்தச் சிலையினைப்பெண் ணாக்கியதும் - செந்
தமிழ்தேர்
நாவலன்பின் போந்ததுவும் நன்னீர்த் திருவரங்கக்
காவலவன் மாவலவன் கால்.

திருவரங்கப் பெருமாளின் திருப்பாதப் பெருமையைப் போற்றுவன இவை. வினை முடிவு வினையைக் கொண்டும் முடியும், பெயரைக் கொண்டும் முடியும். இங்கே 'திருவரங்க மாவலவன் கால்' எனப் பெயரைக் கொண்டு முடிந்தமை காண்க.

முத்தகம் — தனியே ஒரு கவியாய் முடிவது
யுக்குமம் — இருகவிகளோடு கூடியது.
விசேடம் — மூன்று கவிகளோடு கூடியது
கலாபம் — நான்கு கவிகளோடு கூடியது
குளகம் — ஐந்து கவிகளோடு கூடியது—

என்று வகைப்படுத்திக் கூறுவார்கள் சிலர்.

### 3. தொகை நிலை

4. தொகைநிலைச் செய்யுள் தோன்றக் கூறின்
ஒருவன் உரைத்தவும் பல்லோர் பகர்ந்தவும்
பொருளிடம் காலம் தொழிலென நான்கினும்
பாட்டினும் அளவினும் கூட்டிய வாகும்.

பொருள்: தொகை நிலைச் செய்யுள் என்பதனை விளங்கச் சொல்லுமிடத்து, ஒருவனால் உரைக்கப்பட்டுப் பலபாட்டாய் வருவனவும், பலரால் உரைக்கப்பட்டுப் பலபாட்டாய் வருவனவும், பொருளால் தொகுத்தனவும், இடத்தால் தொகுத்தனவும், காலத்தால் தொகுத்தனவும், தொழிலால் தொகுத்தனவும், பாட்டால் தொகுத்தனவும், அளவால் தொகுத்தனவும் என வருவனவாகும்.

பொருள்பற்றிக் கூட்டப்பட்டன புறநானூறு அகநானூறு முதலியன. இடம்பற்றிக் கூட்டப்பெற்றன களவழி நாற்பது முதலியன. காலம்பற்றிக் கூட்டப் பெற்றன கார்நாற்பது முதலியன. தொழில்பற்றிக் கூட்டப் பெற்றன ஊஞ்சல் முதலியன. கவிபற்றிக் கூட்டப் பெற்றன கலித்தொகை முதலியன. அளவு பற்றிக் கூட்டப் பெற்றன பதிற்றுப்பத்து, குறுந்தொகை முதலியன. ஒருவரால் பாடப்பெற்றது திருக்குறள், கார்நாற்பது முதலியன. பலரால் பாடப்பெற்றன அகநானூறு, பன்னிரு படலம் முதலியன.

### 4. தொடர் நிலை

5. பொருளினும் சொல்லினும் இருவகை தொடர்நிலை.

பொருள்: தொடர்நிலைச் செய்யுள் என்பது பொருளினால் தொடர்தலும், சொல்லினால் தொடர்தலும் என இருவகைப்படும். தொடர் நிலை – தொடர்ந்து நிற்றல் உடையது. இது தொகை நிலைக்கு எதிரானது.

'இருவகை' என்றதால் சொல்லாலும் பொருளாலும் தொடர்தலும் உண்டு என்றும் கூறுவர்.

### 1. பொருட்டொடர் நிலை

6. பெருங் காப்பியமே காப்பியம் என்றாங்
கிரண்டாய் இயலும் பொருட்டொடர் நிலையே.

பொருள்: பொருள் தொடர்நிலைச் செய்யுள் பெருங்காப்பியம் எனவும், காப்பியம் எனவும் இரண்டு வகையாய் நடக்கும்.

### அ. பெருங்காப்பியம்

7. அவற்றுள்
பெருங்காப் பியநிலை பேசுங் காலை
வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினொன்று
ஏற்புடைத் தாகி முன்வர வியன்று
நாற்பொருள் பயக்கு நடைநெறித் தாகித்
தன்னிக ரில்லாத் தலைவனை உடைத்தாய்
மலைகடல் நாடு வளநகர் பருவம்
இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து
நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்
பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாடல்
தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்
புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்
றின்னன புனைந்த நன்னடைத் தாகி
மந்திரந் தூது செலவிகல் வென்றி
சந்தியிற் றொடர்ந்து சருக்க மிலம்பகம்
பரிச்சேத மென்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக
கற்றோர் புனையும் பெற்றிய தென்ப.

பொருள்: பொருட்டொடர் நிலைச் செய்யுளில் பெருங்காப்பியத்தின் இலக்கணத்தைக் கூறுமிடத்து வாழ்த்துதல், கடவுளை வணங்குதல், உரைக்க வந்த பொருளை யுணர்த்துதல் என்னும் மூன்றில் பொருத்த முடைய ஒன்று முன்வர இயங்கி, அறம் முதலிய உறுதிப்

பொருள்கள் நான்கினையும் பயக்கும் நடையுடைத் தாய், தன்னோடு ஒத்த நிலையும் மிக்கநிலையும் இல்லாதவனைத் தலைவனாகவுடைத்தாய், மலை வருணனை, கடல் வருணனை, நாட்டு வருணனை, நகர வருணனை, பருவகால வருணனை, ஞாயிறுதோற் றத்தின் வருணனை, திங்கள் தோற்றத்தின் வருணனை என்று இவைபோன்ற வருணனைகளை யுடைத்தாய், நல்ல திருமணநிகழ்ச்சிகளை அமைத்தல், முடிசூட்டு விழாவினை அமைத்தல், அழகிய சோலைகளில் இன்பம் நுகரும் நிகழ்ச்சியை அமைத்தல், நீர் விளையாட்டுக் களை அமைத்தல், இனிய பிழிவாகிய கள்ளினையுண்டு களித்திருக்கும் பகுதிகளை அமைத்துக் காட்டல், மக் களைப்பெறுதல், புலவியால் வெறுத்தல், கலவியால் களித்தல் முதலிய கற்பனைமிக்க நல்லநடையுடைத்தாய், சபை, தூதுவர், பகைவர் மேற்படையெடுத்தல், அவ ரோடு மாறுபடுதல், அம்மாறுபாட்டில் வெற்றி பெறுதல் முதலிய இடைவிடாது தொடர்ந்து, சருக்கம், இலம்பகம், பரிச்சேதம் என்னும் பிரிவுகளுடன் விளங்கி, எட்டு வகைப்பட்ட சுவையும், மெய்ப்பாட்டுக் குறிப்பும் இடை விடாமல் கேட்போர் விரும்புமாறு கற்றோரால் யாக்கப் படும் தன்மையை உடையதென்று சொல்லுவர் ஆசிரியர்.

நாற்பொருள்: அறம், பொருள், இன்பம், வீடு. நூற் பிரிவு : சருக்கம், இலம்பகம், அத்தியாயம், பரிச்சேதம். எண்வகைச் சுவை: உவகை, பெருமிதம், அழுகை, வியப்பு, நகை, அச்சம், இளிவரல், வெகுளி. பாவம் : மெய்ப்பாட்டுக் குறிப்பு.

முன்வரவு—பாயிரம். முன்வருதலின் முன்வரவு எனப் பட்டது. பருவம்—கார், கூதிர், முன்பனி, பின்பனி, இள வேனில், முதுவேனில் என்பன. மந்திரம்—ஆலோசனை,

பாவம்—மெய்ப்பாடு; இதன் விரிவைத் தொல்காப்பிய மெய்ப்பாட்டியலுள் காணலாம்.

### ஓர் புறனடை

8. கூறிய உறுப்பிற் சிலகுறைந் தியலினும்
வேறுபா டின்றென விளம்பினர் புலவர்.

பொருள்: பெருங்காப்பியத்தின் இலக்கணமாக மேற்கூறப்பட்ட உறுப்புக்களிற் சில குறைந்து வருமாயினும் குற்றமெனத் தள்ளப்படாது; பெருங்காப்பியமென்றே கொள்ளப்படும் என்பார்கள் புலவர்கள்.

குறைதல், உறுதிப்பொருள் நான்கனுள் ஒன்றும் குறையாது, வருணனைகளில் சில குறைதலாம்; ஏனெனில், உறுதிப் பொருளில் குறைவது சிறு காப்பியமாகி விடும்.

கம்பராமாயணம், சிந்தாமணி, கந்தபுராணம் முதலியன பெருங்காப்பிய இலக்கணங்கள் பெரிதும் அமைந்த பெருங்காப்பியங்கள் எனலாம்.

### ஆ. காப்பியம்

9. அறம் முதல் நான்கினும் குறைபா டுடையது
காப்பியம் என்று கருதப் படுமே.

பொருள் : அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கனுள் ஒன்றாயினும் பலவாயினும் குறைந்து வருவது காப்பியமாகும்.

இது சிறு காப்பியம் எனவும் சொல்லப்படும்.

### காப்பிய நடை

10. அவைதாம்,
ஒருதிறப் பாட்டினும் பலதிறப் பாட்டினும்
உரையும் பாடையும் விரவியும் வருமே.

பொருள் : மேற்கூறிய பெருங்காப்பியமும் காப்பியமும் தோன்றுங்கால் ஒரே வகைச் செய்யுளானும், பல வகைச் செய்யுளானும், இடையிடையே உரைப்பாட்டுக் கலந்தும், பிறமொழி விரவியும் வருதலையும் பெறும்.

பா—வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா முதலிய பாநான்கும், துறை, விருத்தம், தாழிசை முதலிய பாவினம் மூன்றும் ஆகும். பாடை—மொழி. அஃதாவது வடமொழி முதலிய பிறமொழிகளின் சொற்கள் வந்து கலத்தல். பாட்டாவது—அடி தொடை முதலிய உறுப்புக்கள் அமைந்து சந்தம் பெற்று வருவது. உரைப்பாட்டுக் கலந்து வந்த காப்பியம் சிலப்பதிகாரம்.

### 2. சொற்றொடர் நிலை

11. செய்யுளந் தாதி சொற்றொடர் நிலையே.

பொருள் : ஒரு செய்யுளின் இறுதிச் சொல் அடுத்த செய்யுளின் தொடக்கச் சொல்லாக அமைந்து வருமாறு தொடுத்துச் செல்வது சொற்றொடர் நிலைச் செய்யுளாம்.

அவை கலம்பகம், அந்தாதி, மும்மணிக்கோவை முதலியனவாம்.

## 2. செய்யுள் நெறி

12. மெய்பெறு மரபின் விரித்த செய்யுட்கு
வைதருப் பம்மே கௌட மென்றாங்கு
எய்திய நெறிதாம் இருவகைப் படுமே.

பொருள் : பொருள் பெறும் இலக்கண வரம்பான் விரித்துக் கூறப்பட்ட செய்யுளனைத்திற்கும், வைதருப்ப நெறி, கௌட நெறி எனப் பொருந்திய நெறி, இருவகைப் படும்.

எனவே, இருவகை நெறியும் ஒரு பாட்டின் கண்ணேயே அமைந்து வருதல் கிடையாது. வைதருப்ப நெறி

யான் வருகின்ற பாட்டும் உள, கௌட நெறியான் வருகின்ற பாட்டும் உள என்பதாம்.

### 1. வைதருப்ப நெறி

13. செறிவே தெளிவே சமநிலை இன்பம்
ஒழுகிசை உதாரம் உய்த்தலில் பொருண்மை
காந்தம் வலியே சமாதி யென்றாங்
காய்ந்த வீரைங் குணனு முயிரா
வாய்ந்த வென்ப வைதருப் பம்மே.

பொருள் : செறிவு, தெளிவு, சமநிலை, இன்பம், ஒழுகிசை, உதாரம், உய்த்தலில் பொருண்மை, காந்தம், வலி, சமாதி என்னும் பத்துக் குணமும் உயிர்போல அமைந்து வருவது வைதருப்ப நெறியாகும்.

உறுப்புக்கள் யாவும் குறைவின்றி இருப்பினும் உயிரின்மையால் பதுமையை மனிதன் என்று கூற வியலாதவாறு போலச் செய்யுளுறுப்புக்கள் யாவும் அமைந்து கிடப்பினும், உயிர்போன்ற இப் பத்துக் குணங்களும் இல்லாத செய்யுளைச் செய்யுளென்று கொள்ளப் படாது என்பது ''தண்டியலங்கார சாரம்.'' இது விதர்ப்ப நாட்டுக் கவிஞரால் விரும்பிக் கைக் கொள்ளப்பட்ட நெறியாதலால் 'வைதருப்ப நெறி' என்றனர். இனிய சொல்லும் பொருளும் தழுவிவரச் சொற்களைத் தொடுக்கும் போக்கு இது எனவும் கூறுவர்.

### 2. கௌட நெறி

14. கௌட மென்பது கருதிய பத்தொடும்
கூடா தியலுங் கொள்கைத் தென்ப.

பொருள் : கௌட நெறியாவது வைதருப்ப நெறிக்கு உரித்தாகக் கூறப்பட்ட பத்துக் குணவலங்

காரங்களுடனும் கூடியியலாது விபரீதப்பட்டு நடக்கும் நெறியுடையது ஆகும்.

'பத்தொடும் கூடாது' என்னும் முற்றும்மையை எச்சவும்மையாக்கிச் சிலவற்றோடு சிறிதும், சிலவற்றோடு பெரிதும் ஒன்றுபட்டும் வருமெனக் கொள்க. கௌட நெறி கடினமான சொல்லும் கடினமான பொருளும் தழுவி வரும்: இது கௌட தேசக் கவிஞரால் விரும்பிக் கொள்ளப்பட்ட நெறியாகும். இவை இரண்டும் எளிதாக அறியக் கூடிய வேறுபாடுகளையும் உடையன.

## 1. செறிவு

(செறிவு—இறுகுதல். இதனை முதல் நூலார் சிலிட்டம் என்பர். சிலிட்டம்—ஒன்றோடொன்று வன்மையாகப் பிணைந்து வருவது.)

15. செறிவெனப் படுவது நெகிழிசை யின்மை.

பொருள்: செறிவென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, நெகிழ்ந்த ஓசையின்றி வரத் தொடுப்பது.

(எ-டு) சிலைவிலங்கு நீள்புருவம் சென்றொசிய நோக்கி
முலைவிலங்கிற் றென்று முனிவாள்—
மலைவிலங்கு
தார்மாலை மார்ப தனிமை பொறுக்குமோ
கார்மாலை கண்கூடும் போது.

பொருள்: மாறுபட்டு விளங்கிய தாரினையும் மாலையினையுமுடைய மார்பினையுடையாய்! புணர்ச்சிக் கண் மார்பம் சிறிது விலகா நிற்ப, அது கண்டு பொறுக்கும் ஆற்றலின்றி, விற்போல் வளைந்து நீண்ட புருவமானது நெற்றி மீது ஏறி வளைய, ஊடுந் தன்மையாள் நின் காதலி. அவள், இருளோடு மாலை வந்து கூடும் அந்திப்

போதில், நின்பிரிவால் தனிமையுறும் காலத்து வரும் துயரத்தையும், பொறுக்கும் தன்மையினளாவாளோ?

மலைவிலங்கு மார்பு—மலை போன்ற மார்பெனக் கொள்ளினும் அமையும். நெகிழிசை—வல்லினம் வாராது மற்றையினங்கள் பெரும்பாலும் வருமாறு தொடுப்பது.

(எ–டு) விரவலராய் வாழ்வாரை வெல்வாய் ஒழிவாய்
இரவுலவா வேலை ஒலியே—வரவொழிவாய்
ஆயர்வா யேயரிவை ஆருயிரை யீராவோ
ஆயர்வாய் வேயோ அழல்.

பொருள் : இரவுப் போதின்கண் இடைவிடாது முழங்குகின்ற கடலொலியே! நீ பிரிந்து வாழ்வாரை வருத்துவாய், வருத்தாது ஒழிவாய். இவளுடைய அரிய உயிரைத் தாயாராயுள்ளாருடைய வாயிலுண்டாகிய வசைச் சொற்களே வருத்தும் தன்மையதாயிருக்க, அதன் மேலும் இடையர்கள் ஊதுகின்ற வேய்ங்குழல் இசையும் அழலைக் கொடா நின்றது. அதனால், இப்பொழுது இவள் பொருட்டு வருகின்ற வரவினை நீயும் ஒழிவாயாக.

இங்கே முன்வந்த எழுத்துக்களே அடிக்கடி வருதலும், எல்லாம் இடையினமாய் இருத்தலும் காண்க.

இவ்வாறு, ஓரினத்தெழுத்தால் அமைந்து வருவதோர் சுவை நோக்கிக் கௌடர் உடன்படுவர். இஃது இரண்டு நெறியார்க்கும் ஒக்கும்.

விரவலர்—பிரிந்திருப்பார். வெல்லுதல்—வருத்துதல். உலத்தல்—குறைதல். ஈர்தல்—அறுத்தல். வேய்—புல்லாங்குழல்.

## 2. தெளிவு

தெளிவு—வெளிப்படை.

16. தெளிவெனப் படுவது பொருள்புலப் பாடே.

பொருள் : தெளிவென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது புலவன் தான் கருதிய பொருள் கேட்போர்க்கு உளங்கொள்ளுமாறு விளங்கத் தோன்றுமாறு கூறுவது.

குறிப்பு மொழியின்றி வெளிப்படையாய் விரைவில் பொருள் புலப்படுமாறு சொல்வது தெளிவு ஆகும். திரி சொற்களும் குறிப்பும் வாராமையே தெளிவுக்குக் காரணம் ஆகும்.

(எ-டு)

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்.

கௌடர், இவ்வாறு அமைதல் கவியினுடைய அருமையும் நோக்குடைய பொருட்கொள்கையும் இல்லாது தோன்றுமெனக் கருதிப் பின்வருமாறு வேண்டுவர்.

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

எனவே, கௌடர் பொருள் வெளிப்படையாகத் தெளிவாக விளங்க வில்லையாயினும், சிறப்பான பொருளை உணர்த்தும் சொல்லாற்றலுடையதாக அமைக்கப்படுவதே சிறப்பெனக் கொள்வார் எனலாம்.

## 3. சமநிலை

சமநிலை — வல்லினம் மெல்லினம் இடையினம் ஆகிய மூன்றும் சம அளவாக அமையப் பாடுவது: வல்லினத் தொடை, இடையினத் தொடை, மெல்லினத்

தொடை ஆகிய மூவினத்தொடையும் அமையவருவது எனினுமாம்.

17. விரவத் தொடுப்பது சமநிலை யாகும்.

வல்லினம் மெல்லினம் இடையினம் என்னும் மூவினமும் தம்முள் கலந்துவரத் தொடுப்பது சமநிலையாகும்.

(எ-டு) சோகம் எவன்கொல் இதழிபொன் தூக்கின
சோர்குழலாய்
மேக முழங்க விரைசூழ் தளவங் கொடியெடுப்ப
மாக நெருங்கவண் டானம் களிவண்டு
பாடவெங்கும்
தோகை நடஞ்செய்யும் அன்பர்திண் தேரினித்
தோன்றியதே.

பொருள்: தொங்குகின்ற கூந்தலையுடையாய்! கொன்றைமரங்கள் பொன்னிறமாலைகளைத் தொங்க விட, விண்ணகம் நெருங்க, மேகக் கூட்டங்கள் முழங்கா நிற்ப, நறுணமமுடைய மலர்களோடு கூடிய முல்லைகள் பலவும் கொடியெடா நிற்ப, அழகிய இசை ஒலியோடு, வண்டுகள் களித்துப்பாட, எவ்விடத்தும் மயிற் கூட்டங் கள் ஆடாநின்றன; அதனால், நம்முடைய தலைவருடைய திண்ணிய தேரானது இப்பொழுதே வந்து தோன்றுவதா யிருந்தது; நின்னுடைய இவ்வருத்தம் இனி என்னாவது? அதைச் சொல்வாயாக.

(எ-டு)

இடர்த்திறத் தைத்துற பொற்றொடி!
நீயிடித் துத்தடித்துச்
சுடர்க்கொடித் திக்கனைத் திற்றடு மாறத்
துளிக்குமைக்கார்

மடக்குயிற் கொத்தொலிக் கக்களிக்
கப்புக்க தோகைவெற்றிக்
கடற்படைக் கொற்றவன் பொற்கொடித்
தேரினிக் கண்ணுற்றதே.''

பொருள்: பொன்னாலாய தொடியினையுடையாய்! கரு நிற மேகமானது முழங்குவதோடு மின்னலின் ஒலி ஒழுங்கு பலதிசையினும் தோன்றி நடுங்க, மழையைப் பொழிந்தது. இளமை பொருந்திய குயிற் கூட்டங்கள் கூவத் தொடங்கின. மயிற் கூட்டங்கள் ஆடத் தொடங்கின. அதனால் வெற்றி கொண்ட கடல் போன்ற பெருமை தங்கிய படையைக் கொண்ட தலைவனுடைய, பொற்கொடி கட்டிய தேரானது இப்பொழுதே வந்து நம்மைச் சேர்வதாயிற்று. நீ நின் வருத்தம் நீங்குவாயாக!

இந் நூற்பாவால் 'செறிவு' நெகிழிசை இன்றி வருவதே வைதருப்பருக்கு உடன் பாடென்பதும்; வற்கெனத் தொடுத்தல் உடன்பாடன்றென்பதும், வற் கெனத் தொடுத்தலே சிறந்தது எனக் கௌடர் விரும்பு வர் என்பதும் அறியக் கிடக்கின்றன.

## 4. இன்பம்

இன்பம்–இனிமையுடையது. வடநூலார் 'மாதுரியம் என்பர். மாதுரியம்–மதுரத் தன்மையுடையது.

18. சொல்லினும் பொருளினும் சுவைபடல் இன்பம்

பொருள்: சொல்லினால் சுவை பயக்குமாறு அமைத் தலும், பொருளினால் சுவை பயக்குமாறு அமைத்தலும் இன்பமாம்.

சொற்காரணமாகிய இன்பம் என்பது வழிமோனை முதலாக வருமாறு அமைப்பது. வழிமோனை என்பது ஒவ்' வோர் அடியிலும் சீர்கள் இடை நிற்ப, மோனைத்

தொடை கொண்டு வருவது. மோனைத் தொடையாவது முதலெழுத்தெல்லாம் ஒன்றுபட்டு வருதல்.

(எ-டு)

முன்னைத்தம் சிற்றில் முழங்கு
    கடலோதம் மூழ்கிப் போக
அன்னைக்கு ரைப்பன் அறிவாய்
    கடலேயென் றலறிப் பேருந்
தன்மைமட வார்தளர்ந் துகுத்த
    வெண்முத்தந் தயங்கு கானற்
புன்னையரும் பேய்ப்பப் போவாரைப்
    பேதுறுக்கும் புகாரே யெம்மூர்

பொருள்: 'முன்பு தம்முடைய சிறிய வீடாகிய மணல் வீடு ஒலிக்கின்ற கடல் வெள்ளத்தில் மூழ்கி அழிந்தொழிய, அது கண்டு ஆற்றாராய், "எம்முடைய அன்னைக்குச் சொல்வோம்; கடலே! அறிவாயாக" என்று அலறிக் கொண்டு ஓடுகின்ற தன்மையராய பெண்கள், கடற்கரைச் சோலையிடத்துத் துன்புற்று அறுத்துச் சிந்திய வெண்ணிற முத்துக்கள், ஒளிவிடுகின்ற புன்னை அரும்பை யொத்து, ஆண்டு வருகின்றவரை மயங்குமாறு செய்கின்ற, காவிரிப் பூம்பட்டினமே எம்முடைய ஊர் ஆகும்.

இவ்வாறு, வருவதைக் கௌடர் வேண்டாது, பின் வருமாறு கூறுவர்:

(எ-டு)

துனிவருநீர் துடைப்பவராய்த் துவள்கின்றேன்
    துணைவிழிசேர் துயிலை நீக்கி
இனவளைபோல் இன்னலஞ்சோர்ந் திடருழப்ப
    இறந்தவர்நாட் டில்லை போலும்

தனியவர்கள் தளர்வெய்தத் தடங்கமலப்
 தளையவிழ்க்குந் தருண வேனில்
பனிமதுவின் பசுந்தாது பைம்பொழிலிற்
 பரப்பிவரும் பருவத் தென்றல்.

பொருள்: வருத்த மிகுதியினாலே என் கண்ணிலிருந்து விரைந்து வழிகின்ற நீரைத் துடைப்பதோடு, வருந்துகின்ற என்னுடைய இரண்டு விழிகளும் இமை மூடும் தன்மையதாய உறக்கத்தை நீக்கி, இனமாக அணியப்பட்ட வளையல்கள் கழலுதல் போல, இனிய அழகு குன்றி யான் வருந்தும் வண்ணம் பிரிந்து சென்றவருடைய நாட்டினிடத்துப், பிரிந்திருந்தோர் நடுங்குமாறு பெரிதாகிய குளத்தின்கண் உண்டாகிய தாமரையின் கட்டினை அவிழ்க்கும் இளவேனிற் காற்றும், அக் காலத்து உண்டாகிய குளிர்ச்சி பொருந்திய தேனையும், வளவிய தாதுக்களையும் பசுஞ் சோலையின்கண் பரவச் செய்து வருகின்ற இளந்தென்றற் காற்றும் இல்லையோ? நீ சொல்வாயாக!

இங்கே இறுதியொழிந்த ஒவ்வொரு சீரினும் மோனை வந்தது.

பொருளின்பம் என்பது அப்பாடலைக் கேட்போர்க்குத் தேனைக் குடித்த தேனீக்கட்கு வரும் மகிழ்ச்சிபோல வரும் ஒருவகை இன்பமாம்.

(எ-டு)

மானேர் நோக்கின் வளைக்கை ஆய்ச்சியர்
கான முல்லை சூடார், கதுப்பில்
பூவைப் புதுமலர் சூடித் தாந்தம்
அடங்காப் பணைமுலை யிழைவளர் முற்றத்துச்
சுணங்கின் செவ்வி மறைப்பினு மலர்ந்த
பூவைப் புதுமலர் பரப்புவர் பூவயின்

ஆனிரை வருத்தம் வீடமலை யெடுத்து
மாரி காத்த காளை
நீல மேனி நிகர்க்குமா லெனவே.

பொருளின்பம் இரண்டு நெறியார்க்கும் ஒக்கும். இவ்வாறு பாடுங்கால் கிராம வழக்காற்றிலுள்ள சொற்களும் பொருள்களும், இடக்கர்ச் சொற்களும் பொருள்களும் கலவாமல் நற்பொருள் அமையப் பாடுவதே பொருட்சுவை தருவதாகும் என்க.

## 5. ஒழுகிசை

ஒழுகிசை-செவிக்கண் இனிமையாய்ச் செல்லும் மெல்லிய இசை. முதல் நூலார் 'சுகுமாரதை' என்பர்; மெல்லிய தன்மை என்பது அதன் பொருள்.

19. ஒழுகிசை யென்பது வெறுத்திசை யின்மை.

பொருள்: ஒழுகிசையாவது வெறுக்கும்படியான இன்னா இசையின்றி வரத் தொடுப்பது.

(எ-டு)

இமையவர்கண் மௌலி யிணைமலர்த்தாள் சூடச்
சமயந் தொறுநின்ற தையல்—சிமைய
மலைமடந்தை வாச மலர்மடந்தை யெண்ணெண்
கலைமடந்தை நாவலோர் கண்.

பொருள்: இரண்டாகிய மலரனைய சிறப்புப் பொருந்திய திருவடிகளைத் தேவர்களெல்லாரும் தங்கள் முடிமீது அணியும் வண்ணம் பல்வகைப்பட்ட சமயங்கள் தோறும் சென்று நின்ற மாது சிகரங்களையுடைய மலையரசன் மகளுமாய் நறுநாற்றமுடைய தாமரை மலர்

மீதிருந்த பொருட் செல்வியுமாய்ப், பல்வகைப்பட்ட கலைகளுக்கும் தலைவியுமாய் நின்ற கலைமகள்; அவள், நாவினால் வன்மையுடையோருக்குக் கண்ணாயிருப்ப வள் ஆவாள்.

இன்னா இசை என்பது, மென்மைத் தன்மை வாய்ந்த நடையொழுங்கில் வல்லின ஒற்றுக்களைப் பக்கத்தே உடையதாய் மிக்கது போலவும், அந் நடையொழுங்கி லேயே உயிரெழுத்தைப் பக்கத்துக் கொண்டு பொய் யாகிய அழகு தோன்றுமாறு விட்டிசைப்பது போலவும் வரும்.

(எ-டு)

ஆக்கம் புகழ்பெற்ற தாவி யிவள்பெற்றாள்
பூக்கட் குழற்கார் பொறைபெற்ற—மாக்கடல்சூழ்
மண்பெற்ற வொற்றைக் குடையாய் வரப்பெற்றெம்
கண்பெற்ற வின்று களி.

பொருள்: பெருமை மிக்க கடலால் சூழப்பட்ட உல கத்துள்ள மக்களின் தவப்பலனாகக் கிடைக்கப் பெற்ற ஒப்பில்லாத குடையை உடையாய்! நீ எங்களை நினைந்து இங்கு வந்ததனால், நின்னுடைய புகழானது மிகுதிப்பட்டது; தலைமகளாகிய இவள் உயிர் பெற் றாள்; இவளுடைய மேகம் போன்ற கரிய கூந்தலானது மது தங்கிய பூக்களின் பாரத்தைப் பெற்றது; எங்களுடைய கண்களும் களிப்பாலே செருக்குற்றன.

இவ்வாறு வருதல், இரண்டு நெறியார்க்கும் உடன் பாடன்று.

## 6. உதாரம்

உதாரம்—பெரியது, மேம்பாடுடையது. அஃதாவது குறிப்பினால் ஒரு சிறப்பினை விளைக்கும் பொருள் படுவது. குறிப்பு-புத்தியினால் அறியப்படுவது.

20. உதார மென்ப தோதிய செய்யுளிற்
குறிப்பின் ஒருபொருள் நெறிப்படத் தோன்றல்

பொருள்: உதாரமாவது, சொல்லப்பட்ட செய்யுளின் சொற்படு பொருளின்றி அதன் குறிப்பினால் ஒருபொருள் முறையாகத் தோன்றுவது.

(எ-டு)

செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம்
பெருமான் முகம்பார்த்த பின்னர்—ஒருநாளும்
பூதலத்தோர் தம்மைப் பொருணசையாற் பாராவாம்
காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்.

பொருள்: பொருளின்மேல் வைத்த அவாவினாலே, தாழ்வுடன் இரப்போருடைய கண்களானவை, போரிடத்து வன்மைமிக்க வேலையும், சென்னியென்னும் பெயரையுமுடைய, தென் திசைக்கண் உறந்தைப் பதி வாழ் மக்களுக்குத் தலைவனாகிய சோழனுடைய திருமுகத்தைப் பார்த்தபிறகு, பூவுலகிலுள்ள ஏனையோருடைய முகங்களைப் பொருள் விருப்பினால் பாராவாம். எனவே உறந்தைக் கோமான் சென்னியினுடைய முகத்தினைப் பார்த்த இரவலர் கண்கள் பிறர் முகம் காணாது என்பதனால், அவர்கள் அனுபவித்த கொடிய வறுமை நோய் நீங்கி, அவர்தம் வாழ்வு முடிவு போகுமளவிற்கு மிகுபொருள் கொடுத்தான் என்னும் பிறிது பொருள் குறிப்பினால் தோன்றியவாறு காண்க. இரப்பவர் வறுமைதீரக் கொடுப்பவன் சோழன் என்பது குறிப்பினால் தோன்றியது.

(எ-டு) அவிழ்ந்த துணியசைக்கும் அம்பலமுஞ் சீக்கும்
மகிழ்ந்திடுவார் முன்னர் மலரும்—கவிழ்ந்து
நிழறுழாம் யானை நெடுந்தே ரிரவி
கழறொழா மன்னவர்தங் கை.

பொருள்: தன்னுடைய நிழலைக் குனிந்து அழிக்கும் யானையினையும், நெடிய தேரினையுமுடைய சூரிய குலத்துள்ளானுடைய திருவடிகளைப் பணியாத அரசர் களுடைய கைகளானவை, கட்ட வேண்டின் அவிழ்ந்த துணிகளைப் பின்பு கட்டா நிற்கும; படுக்க வேண்டின் ஊர் நடுவண் அமைந்துள்ள அம்பலங்களைத் துடையா நிற்கும்; உண்ணவிரும்பின் மகிழ்வோடு இடுவோர் முன்னர்ச் சென்று உவகையோடும் விரியா நிற்கும்.

இடுவார் முன்னர் உவகையோடு விரியுமெனவே, இடாதார் முன்னர் உவகையின்றி விரியும் என்பது போதரும். இவை இரண்டு நெறியார்க்கும் உடன்பாடு. பேரரசனைப் பணிந்து அவன் அருள் பெற்ற மன்னராய் வாழ்தலே சிறப்பு என்பது குறிப்பால் புலப்படுத்தப் பெற்றன.

## 7. உய்த்தலில் பொருண்மை

உய்த்தலில் பொருண்மை என்பது, பிறிது சொற்களை வருவித்துச் சேர்த்து விளக்க வேண்டிய நிலைமையில் லாத பொருளுடைமை.

21. கருதிய பொருளைத் தெரிவுற விரித்தற்
குரியசொல் லுடைய துய்த்தலில் பொருண்மை.

பொருள்: உய்த்தலில் பொருண்மையாவது, புலவன் தான் கருதிய பொருளை விளங்குமாறு எடுத்துரைப்பதற்கு உரிய சொற்களை அச் செய்யுள் உடையதாயிருத்தல். உய்த்தல்—சொற்களை வருவித்துச் சேர்த்தல்.

(எ-டு) இன்றுமையாண் மாசிலா வாண் முகங்கண்
டேக்கற்றோ
அன்றி விடவரவை யஞ்சியோ—கொன்றை
உளராவா றோடு மொளிர்சடையீர் சென்னி
வளராவா றென்னோ மதி.

பொருள் : உமையம்மையினுடைய குற்றமில்லாத ஒளியுடைத்தாகிய முகவட்டத்தைக் கண்டு, அதனுடைய எழில் நலத்திற்கு ஆசைப்படுதலானோ? அன்றி அணியாகப் பூண்டுள்ள நஞ்சினையுனடய பாம்பினைக் கண்டு அஞ்சுதலினாலோ? கொன்றையின் மலர்களை வாரிக் கொண்டு கங்கையாறு விரைந்து வரும் ஒளியோடு கூடிய சடையினை உடையீர்! இன்று, திருமுடிமேல் உளதாகிய பிறை வளராதிருந்த காரணம் யாது?

இங்கே, கருதிய பொருளை விளக்குவதற்கு வேண்டும் சொற்கள் எல்லாம், வருவிக்க வேண்டாது, அமைந்திருக்கின்றன.

**உய்த்துணர்தல் :**

(எ–டு) இன்றுமையாண் மாசிலா வாண்முகங்கண்டேக்கறுமால்
அன்றி விடவரவு மங்குறையுங்—கொன்றை
உளராவா றோடு மொளிர்சடையீர் சென்னி
வளராவா றென்னோ மதி.

என்னும் இப்பாடலுள் 'யாதனாலோ' என்னும் ஒரு சொல் வருவித்துப் பொருள் உரைக்கப்படும். இவ்வாறு வருதல் இரண்டு நெறியார்க்கும் உடன்பாடு. எனவே, 'உய்த்தலில் பொருண்மை' வைதருப்பருக்கு உடன்பாடென்றும் கௌடருக்கு உடன்பாடன்றென்றும், 'உய்த்துணர்தல்' இருவருக்கும் உடன்பாடென்றும் அறியக் கிடக்கின்றது.

## 8. காந்தம்

காந்தம் என்பது உலக இயற்கைக்கு உடன்பட்டுக் கூறுவது. மனத்தை மகிழ்விப்பது எனினுமாம்.

22. உலகொழுக் கிறவா துயர்புகழ் காந்தம்

பொருள்: காந்தமாவது ஒன்றனை உயர்த்திப் புகழுமிடத்து, உலக வழக்காற்றுக்கு மாறுபடாது உயர்த்துக் கூறுவது.

(எ–டு) ஒருபே ருணர்வுடனே யொண்ணிறையுந் தேய
வருமே துறவென்பால் வைத்த—ஒரு பேதை
போதளவு வாசப் புரிகுழல் சூழ் வாண்முகத்துக்
காதளவு நீண்டுலவுங் கண்.

பொருள்: யான் வருத்தமுறுமாறு பேதைமையுடையாளொருத்தி என் உள்ளத்திடத்து வைத்த மலரொடு கலந்த நறுநாற்றத்தையுடைய சுருண்ட கூந்தலினையுடைந்தாய், ஒளி பொருந்திய முகத்திடத்து உண்டாகிய காதின் எல்லைவரை சென்று மீண்டு திரியும் கண்களானவை, இக் காலத்து எனது கலங்காத அறிவுடனே சிறந்ததாகிய ஒழுக்கமும் கெட, வந்து தோன்றினவே!

'ஏதம்' என்பது ஏது என நின்று 'வருத்தம்' எனும் பொருள் பயந்தது.

உலக இயல்பிற்கு மாறுபட்டு வருவதேனும் கற்பனையால் ஒன்றை உயர்த்திப் புகழ்தலே அழகுடையதாகும் எனக் கௌடர் வேண்டுவர்.

(எ–டு) அங்கண்மா ஞாலத்து அகல்விசும்பை முன் படைத்த
பங்கயத்தோன் அந்நாளிப் பைந்தொடிதன்— கொங்கைத்
தடம்பெருக வோங்குமெனத் தானினையா வாறோ
இடம்பெருகச் செய்யா வியல்பு.

பொருள்: அழகிய இடைத்தை யுடைத்தாய்ப், பெரி தாகிய உலகத்தின் மீது உண்டாகிய அகன்ற வானத்தை முன்பு படைத்த நான்முகன், அந்நாளில் இவ்வானத்தை இடமுண்டாகப் படையாத காரணம், பசும்பொன்னா லாய தொடியினையுடையாளுடைய முலைகள் இடமுண் டாக வளர்ந்து மீதுயர்ந்து ஓங்குமென நினையாத வாறோ? சொல்வீர்!

## 9. வலி

வலி-வன்மையுடையது. முதல் நூலார் ஓசம் என்பர். ஓசம்—சாமர்த்தியம் எனப் பொருள்படும்.

23. வலியெனப் படுவது தொகைமிக வருதல்.

பொருள்: வலியென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது தொகைச் சொற்றொடர்பு சிறப்புடையவாக வுண்டாகத் தொடுப்பது.

(எ–டு) கானிமிர்த்தாற் கண்பரிவ வல்லியோ புல்லாதார்
மானனையார் ம்ங்கலநா ணல்லவோ—தான
மழைத் தடக்கை வார்கழற்கான் மானவேற்கிள்ளி
புழைத்தடக்கை நால்வாய்ப் பொருப்பு.

பொருள்: காலம் வரையாது நலம் செய்கின்ற முகில் போன்ற பெரிய கையினையும், நீண்ட வீரக் கழலணிந்த காலினையும், வலிதாகிய வேலினையுமுடையவனாகிய சோழனுடைய, துளையுடைய பெரிய கையினையும், தொங்குகின்ற வாயினையுமுடைய மலையாகிய யானை, தன்னுடைய காலை நிமிர்த்தினால் அறுபடும் தன்மை யையுடையன விலங்கு மட்டுமோ? பகையரசர்களுடைய உரிமைச் சுற்றமாகிய மான்போன்ற விழியினையுடை யார் கழுத்தில் நன்னாளிற் பூட்டிய வன்மை மிக்க மங்கலக் கயிறுமல்லவோ?

தொகைச் சொல்—வேற்றுமைத் தொகை முதலிய சொற்கள். வல்லி—விலங்கு. பரிவ—அறுபடுவன. இங்கே ‘தான மழை’ தொடங்கித் தொகைநிலை மிக வந்தது.

‘இவ்வாறு குறையத் தொடுத்தல் நன்றன்று’ எனக் கௌடர் வேண்டுவர்.

(எ-டு) செங்கலசக் கொங்கை செறிகுறங்கிற் சீறடிப்பேர்ப்
பொங்கரவ வல்குற் பொருகயற்கண்- செங்கனிவாய்க்
காருருவக் கூந்தற் கதிர்வளைக்கைக் காரிகைத்தாம்
ஓருருவென் னுள்ளத்தே யுண்டு.

பொருள்: செந்நிறம் உடைத்தாகிய கலசம் போன்ற முலையினையும், நெருங்கிய தொடையினையும், சிறிய அடியினையும், பெரிய பாம்பின் படம் போன்ற அல்குலினையும், பகைகொண்டெழுந்த கயலையொத்த கண்ணினையும், செந்நிறக் கொவ்வைக் கனிபோன்ற வாயினையும், கரு நிறக் கூந்தலினையும் ஒளியுடைய வளையல்கள் அணிந்த கையினையும் அழகினையுமுடைத்தாகியதோர் வடிவம் என் உள்ளம் விட்டு நீங்காது.

இங்கே வல்லெழுத்து மிக வருதலைப் பெற்றது.

## 10. சமாதி

சமாதி—ஒரு பொருளோடு பிறிதொரு பொருளை ஐக்கியப் படுத்திக் காட்டல் என்பர். அதுபோல் இங்கு உரிய பொருளின் வினையை ஒப்புடைப்பொருட்கு உரியதாகத் தந்து காட்டலின் அப் பெயராயிற்று.

24. உரியபொரு ளின்றி யொப்புடைப் பொருண்மேல்
தரும்வினை புணர்ப்பது சமாதியாகும்.

பொருள்: உரிய பொருளின் வினையை அதை யொத்த பொருளின்மேல் தந்து சேர்த்துக் கூறுவது சமாதி அணியாம்.

(எ-டு) "அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பரிதி"

பொருள்: அகன்ற பெரிய வானத்திடத்துப் பரவி யிருந்த இருளை விழுங்கி ஒளியினைக் கக்கி எழுகின்ற பல ஒளிக்கற்றைகளையுடைய ஆதித்தன்.

"கன்னி யெயில்"

மறுவற்ற மதிற்சுவர் (புதிய மதில்)

"குமரி ஞாழல்"

அழியாத இளமை பொருந்திய ஞாழல் மரம்.

மேற்கூறிய மேற்கோள்களில் உயர்திணைக்குரிய பருகுதல் காலுதல் என்ற வினைகள் அஃறிணையாகிய பரிதி மண்டிலத்தின் மேலேற்றிக் கூறப்பட்டனவும், இள மங்கையர்க்குரிய கன்னித்தன்மை மதில் மேலேற்றிக் கூறப்பட்டதும், மகளிர்க்குரிய குமரித்தன்மை மரத்தின் மேலேற்றிக் கூறப்பட்டதும் காண்க.

கடுங்கை வயலுழவர் காலைத் தடிய
மடங்கி யரியுண்ட நீலம்-தடஞ்சோரா
நீளரிமேற் கண்படுக்கும் நீணீர் அவந்தியார்
கோளரியே றிவ் விருந்த கோ.

என்னும் நளவெண்பாவும் நல்ல எடுத்துக் காட்டாகும். இங்கே கண்ணுக்குரிய வினையாகிய கண்படுத்தல் நீலமலரின் குவிதற்கண் ஏற்றிச் சொல்லப்பட்டது காண்க.

சமாதி என்னும் இவ்வணி இரண்டு நெறியார்க்கும் ஒக்கும். இவற்றைக் குணவலங்காரம் என்றும் கூறுவர்.

இதுவரையுங் கூறிய அணியிலக்கணமெல்லாம் முதல் நூலார் கூறியது பல்வேறு நடையினையுடைய வட மொழிக்குத்தானே, செந்தமிழ் மொழிக்கும் வந்த காரணம் என்னை?—இதன் முதல்நூல் செய்த ஆசிரியர் உலகத்தின்கண் வழங்கும் சொற்களை யெல்லாம் சமஸ் கிருதம், பிராகிருதம், அபப்பிரஞ்சம் என்று மூன்று கூறு படுத்தினார். அவற்றுள், சமஸ்கிருதம் தேவபாடை எனவும், அபப்பிரஞ்சம் ஏனைய மக்களின் மொழியென வும் கூறினார். பிராகிருதத்திற்கு உரியாரைக் கூறாது விட்டமையின் அது எல்லா நாட்டு மக்களின் மொழி யெனப்பட்டது. அன்றியும் 'பிரகிருதி' என்பது இயல்பு எனும் பொருளவாகலின், 'இயல்பு மொழி' எனினும் அமையும்.

பிராகிருதமொழியைத் தற்பவம், தற்சமம், தேசியம் என மூன்றாக்கினார். அவற்றுள் தற்பவமாவது — ஆரிய மொழி திரிந்து வருவன; பாபம் — பாவம் என வருவது போன்று. தற்சமமாவது — ஆரியச்சொல்லும் தமிழ்ச் சொல்லும் பொதுவாய் வருவன; குங்குமம், மூலம், மலைய மாருதம் போல்வன. தேசியமாவது அவ்வந் நாட்டு வழக்குச் சொல்லேயாய்ப் பிறமொழி நோக்கா தன—நிலம், நீர், தீ, சோறு, வளி,விண் முதலியனவாகும்.

இம்முறையே—இந்நாட்டு ஆட்சிச் சொல்லையே செய்யுட் சொல்லெனத் தமிழ் நூலாரும் உடன்பட்டன ராகலான், தமிழ்ச் சொற்களெல்லாம் பிராகிருதம் எனப் படும். அச்சொற்களால் இயற்றப்படும் எல்லாப் பாட லுக்கும் (செய்யுட்கும்) அவ் வணிகள் அனைத்தும் உரிய வாகலின் ஈண்டும் மொழிபெயர்க்கப் பட்டன.

**புறனடை**

25. ஏற்ற செய்யுட் கியன்ற வணியெலாம்
முற்ற வுணர்த்தும் பெற்றிய தருமையிற்

காட்டிய நடைநெறி கடைப்பிடித் திவற்றொடு
கூட்டி யுணர்த லான்றோர் கடனே.

பொருள்: உலகத்து நிலைபெற்ற செய்யுளனைத்திற்கும் பொருந்திய அணிவகையெல்லாம், குறைபாடின்றி யுணர்த்தும் தன்மை அரிதாகலான், காட்டப்பட்ட இருவகையான நெறியினைப் பற்றுக்கோடாக, இவற்றோடு மற்றைய நெறிகளையும் கூட்டிக் கொண்டுணர்தல் நிறைவுடைய அறிஞர்களது கடமையாகும்.

இதுவரையில் இவ்வியலில் கூறியவற்றைச் சுருங்கக் காணுமிடத்து—பொருள் எளிதில் விளங்கும் தன்மையதாய்ச், சொற்செறிவு இல்லாததாய் விளங்குகின்ற மிடுக்கற்ற நடையொன்றுளது; அது வைதருப்பம் என்றும், பொருட்செறிவும், சொற்செறிவும் உடைய மிடுக்கான நடையொன்றுளது; அதுவே கௌடம் என்றும் அறியக் கிடக்கின்றது.

எந்நடைக்கும் ஓசையுடைமையும், பொருளாழமுடைமையும் இருத்தல் வேண்டும் என்பது பொதுவாய கருத்து.

மற்றைய நெறிகள் ஆவன பாஞ்சாலி, மாகதி, ஆவந்திகை, லாடி போன்றன. இவை பாஞ்சாலம், மகதம், அவந்தி, இலாடம் என்னும் நாட்டுக் கவிஞர்கள் ஏற்று வழங்கிய நெறிகள் ஆகும். இவற்றுள் வெளிப்படையான பேதமுடையவை வைதர்ப்பியும் கௌடியுமே. பிற நுட்பமான பேதமுடையன. எனவே 'முற்ற வுணர்த்தும் பெற்றிய தருமை' என்றனர்.

நூலாசிரியர் வடநாட்டுக் கவிநயங்களில் விரிந்த பயிற்சி பெற்றவர்; எனவே, அவற்றை எடுத்துக் காட்டி விளக்குகின்றார்.

பொதுவியல் முற்றிற்று

இரண்டாவது

# 2. பொருளணியியல்

## காப்புச் செய்யுள்

என்னை யுடையாள் கலைமடந்தை யெவ்வுயிர்க்கும்
அன்னை யுடைய வடித்தளிர்கள் — இன்னளிசூழ்
மென்மலர்க்கே கன்று மெனவுரைப்பர் மெய்யிலா
வன்மனத்தே தங்குமோ வந்து.

பொருள்: மிகவும் தாழ்வான என்னை அடிமையாக ஏற்றுக் கொண்டவள், கலைமடந்தை. எல்லாவுயிர்க்கும் தாயாகிய அவளது தளிராகிய அடியிரண்டும், இனிதாகிய இசைபாடும் வண்டுகள் சூழ்கின்ற மெல்லிய மலரின் மீது மிதிப்பினும் வருந்துமென்று சொல்வர். இத்தன்மையாகிய தளிரடிகள், உண்மையற்ற கடினமாகிய என் மனத்தின்கண் வந்து நிலையாக நிற்கும்.

அளி—வண்டு. கன்றும்—வருந்தும். ஓகாரம் அசை, வியப்பாகக் கொள்ளினும் அமையும்.

### பொருளணிகளின் வகை

26. தன்மை யுவமை யுருவகந் தீவகம்
பின்வரு நிலையே முன்ன விலக்கே
வேற்றுப் பொருள்வைப்பே வேற்றுமை விபாவனை
ஒட்டே யதிசயந் தற்குறிப் பேற்றம்
ஏது நுட்பம் இலேசம் நிரனிறை
ஆர்வ மொழிசுவை தன்மேம் பாட்டுரை
பரியா யம்மே சமாயித முதாத்தம்
அரிதுண ரவநுதி சிலேடை விசேடம்

ஒப்புமைக் கூட்ட மெய்ப்படு விரோதம்
மாறுபடு புகழ்நிலை புகழாப் புகழ்ச்சி
நிதரிசனம் புணர்நிலை பரிவருத் தனையே
வாழ்த்தொடு சங்கீ ரணம்பா விகமிவை
ஏற்ற செய்யுட் கணியே ழைந்தே.

இவ்வியல் பொருளினால் ஆகும் அணிகளது இயல்பைக் கூறுவதனால் பொருளணியியல் என்னும் பெயரைப் பெற்றது. சொல்லினால் ஆகும் அணிகளும் உளவே எனின், அவை உளவேனும் பொருளினால் ஆகும் அணிகள் மிகுதியாகலின் அம் மிகுதிபற்றி அப் பெயர்த்தாயிற்று.

இந்நூற்பா, அணிகளின் பெயரும், முறையும், தொகையும் கூறுகின்றது.

(1) தன்மையணி, (2) உவமையணி, (3) உருவகவணி, (4) தீவகவணி, (5) பின்வருநிலையணி, (6) முன்னவிலக்கணி, (7) வேற்றுப்பொருள் வைப்பணி, (8) வேற்றுமையணி, (9) விபாவனையணி, (10) ஒட்டணி, (11) அதிசயவணி, (12) தற்குறிப்பேற்ற வணி, (13) ஏது அணி, (14) நுட்பவணி, (15) இலேசவணி, (16) நிரனிறையணி, (17) ஆர்வமொழியணி, (18) சுவையணி, (19) தன்மேம்பாட்டுரை யணி, (20) பரியாய வணி, (21) சமாயித வணி, (22) உதாத்த வணி, (23) அவநுதியணி, (24) சிலேடையணி, (25) விசேடவணி, (26) ஒப்புமைக் கூட்டவணி, (27) விரோதவணி, (28) மாறுபடுபுகழ்நிலையணி, (29) புகழாப்புகழ்ச்சியணி, (30) நிதரிசனவணி, (31) புணர்நிலையணி, (32) பரிவருத்தனையணி, (33) வாழ்த்தணி, (34) சங்கீரணவணி, (35) பாவிகவணி, ஆகிய முப்பத்து ஐந்து அணிகளும் பொருத்தமுடைய செய்யுட்கு உரியனவென்று சொல்லப்படும்.

இந் நூற்பாவின் ஈற்றடியில் ஆசிரியர் ‘ஏற்ற’ என்ற சொல்லைப் பெய்திருப்பதனால், இவ்வணிகள் சில செய்யுட்குப் பொருந்தியும் சில செய்யுட்குப் பொருந்தாதும் வருவன உண்டென்று உணரலாம்.

‘அரிதுணரவநுதி’ என்று அடை கொடுத்துச் சிறப்பித்ததனால் சிறப்பு முதலியவற்றின் உண்மையை மறுக்குமிடத்து, அம் மறுப்பினால் ஒரு புகழ் தோன்றுமாறு வைத்தலும் உண்டு. அஃது அதனுடைய இலக்கணம் கூறுமிடத்து அறிந்து கொள்க.

‘மெய்ப்படு விரோதம்’ என்பதற்கு மெய்யென அடை கொடுத்தது தமிழாசிரியராவார். முரண்தொடை என்று கருதித் தொடை இலக்கணத்தின்பாற் சேர்த்துச் செய்யுட்கு உறுப்பென்றனர். இவ்வாசிரியர் அதனை அணியிலக்கணத்தின்பாற் படுத்தினாராகலின் அவ்வேறுபாட்டை அறிவித்தற்கு என்று கொள்க.

தீவகம், பின்வருநிலை, நிரனிறை, சிலேடை, விரோதம் முதலிய சில அணிகள் ஒருபுடைச் சொற்பற்றி நிற்கும் சொல்லணிகளாயினும், மிகுதிப் பொருள்பற்றிப் பொருளணியியல் எனப் பெயர் கொடுக்கப்பட்டதெனத் தெளிக.

தன்மையணி முதலாக வாழ்த்தணி இறுதியாகவுள்ள முப்பத்து மூன்று அணிகளும் பிறிதொன்றன் தொடர்பும் இன்றித் தனியாக வருவன.

சங்கீரணவணியும், பாவிகவணியும் முறையே பல அணிகள் சேர்ந்தும் காப்பியம் முழுவதும் அமைந்தும் வருவன.

## 1. தன்மையணி

தன்மை — இயல்பு. தன்மையெனினும், தன்மை நவிற்சியெனினும் ஒன்றே.

27. எவ்வகைப் பொருளு மெய்வகை விளக்கும்
சொன்முறை தொடுப்பது தன்மை யாகும்.

எத்தன்மையான பொருள்களையும் இயற்கையிலுள்ள உண்மையான பல வகையும் தோன்ற விளக்கும் சொற்களாலே முறையே தொடுக்கப்படுவது தன்மை அணியாம்.

இவ்வணி, பொருளின் இயல்பை நேரில் கண்டது போலவே தோன்றுமாறு நயமாகச் சொல்வது.

28. அதுவே
பொருள்குணம் சாதி தொழிலொடு புலனாம்.

தன்மையணி பொருள், குணம், சாதி, தொழில் ஆகிய இந்நான்கு பொருள்பற்றித் தோன்றும்.

எனவே, தன்மையணி, பொருட்டன்மையணி, குணத்தன்மையணி, சாதித்தன்மையணி, தொழிற்றன்மையணி என நான்கு வகைப்படும் என்பதாம்.

### 1. பொருட்டன்மையணி

பொருளிடத்துள்ள பல்வேறு வகை இயல்புகளையும் உள்ளபடியே அழகுபடுத்திக் கூறுவது இது.

(எ-டு) நீல மணிமிடற்ற னீண்ட சடைமுடியன்
நூலணிந்த மார்ப னுதல்விழியன்–தோலுடையன்
கைம்மான் மறியன் கனன்மழுவன் கச்சாலை
எம்மா னிமையோர்க் கிறை.

பொருள் : கருங்குவளைமலர் போன்ற அழகிய கழுத்தினையும், முடிமீது நீண்டிருக்கும் சடையினையும், மார்பகத்து அணியப்பட்ட முப்புரி நூலினையும், நெற்றியினிடத்துப் பொருந்திய விழியினையும், ஆடையாகக்

கட்டிய தோலினையும், கையகத்து ஏந்திய மானினையும்' தீப் போன்ற மழுவினையும், திருக்கச்சாலை என்னும் திருப்பதியினையும் உடையவன், எம்மை அடிமையாக் கொண்ட பெரியோன்—இமையவர்களுக்குத் தலைவன்.

நீலமணி போன்ற கண்டத்தன் எனினும் அமையும். 'கனமழுவன்' எனக் கொள்ளின் பெரிய மழுவாயுதம் உடையோன் என்பது பொருள். கனலையும் மழுவையும் உடையோன் என்று கூறினும் அமையும்.

கச்சாலை எனும் திருப்பதியில் எழுந்தருளியுள்ள இறைவனே இங்குக் கூறவந்த பொருள். ஆயினும் நீல மணி மிடறுடைமை முதலிய பொருளின் தன்மைகளும் உணர்த்தினமையால் இது பொருட்டன்மை அணி ஆயிற்று.

## 2. குணத்தன்மையணி

குணத்திலுள்ள பல்வேறுபட்ட தன்மைகளை உள்ள படியே அழகுபடுத்திக் கூறுவது குணத்தன்மை அணியாகும்.

(எ-டு) உள்ளங் குளிர வுரோமஞ் சிலிர்த்துரையும்
தள்ளவிழி நீரரும்பத் தன்மறந்தான்—
புள்ளலைக்கும்
தேந்தா மரைவயல்சூழ் தில்லைத் திருநடஞ்செய்
பூந்தா மரைதொழுத பொன்.

பொருள் : உள்ளமானது குளர்ச்சியடைய, மெய்ம் மயிர் சிலிர்த்து உரையும் தடுமாறக் கண்ணிலே நீர் பெருகத் தன் உருவத்தையும் மறந்தாள். பறவைக் கூட்டம் அலைக்கின்ற தேன் நிறைந்த தாமரையை யுடைய வயல்சூழ்ந்த தில்லைப் பொதுச் சபையின் கண்ணே அழகுடன் கூத்தையாடுகின்ற கடவுளின்

பொலிவுடைய திருவடித் தாமரையைத் தொழுத பொன்னை யொப்பாள்.

'உரையுந்தள்ள' என்னும் எச்சவும்மையால் பெண் களுக்குரிய தலையாய குணங்களெனப்படும் நாணம், அச்சம், மடம், பயிர்ப்பு என்னும் நான்கும் நிலைதளர எனவும் கொள்க.

இங்கு 'தன்னைமறந்தாள்' என்பது குணம் கூறியது; உள்ளம் குளிர்தல் முதலாயின குணத்துடன் நிகழும் அதன் தன்மைகள். இது தில்லைக் கூத்தனைத் தொழுதலாலாகும் பெருமகிழ்ச்சியின் தன்மையைக் கூறு தலான், குணத்தன்மையாம்.

### 3. சாதித்தன்மையணி

சாதியிலுள்ள பல்வேறுபட்ட தன்மைகளை உள்ள படியே அழகுபடுத்திக் கூறுவது, சாதித்தன்மை அணி யாகும்.

சாதி என்பது ஒரு தன்மையவாய பல பொருளுக்குப் பொதுவாக நிற்பதோர் தன்மை என்பர்.

எ-டு. பத்தித் தகட்ட கறைமிடற்ற பைவிரியும்
துத்திக் கவைநாத் துளையெயிற்ற—மெய்த்தவத் தோர்
ஆகத்தா னம்பலத்தா னாரா வமுதணங்கின்
பாகத்தான் சூடும் பணி.

பொருள் : பத்தியாகிய கோடுகள் பொருந்திய வயிற்றையுடையனவாய்க் கரிய கழுத்தையுடையன வாய்ப் படத்தின்கண் பொறி போன்ற நிறத்தையும், இரண்டு பிளவான நாக்கினையும், துளையுடைய பல்லி

னையும் உடையனவாயிருப்பன: உண்மைத் தவத்தினை யுடையார் நெஞ்சகத்துள்ளான், பொதுச் சபையில் நிற்பான், அருந்தா அமுதமனைய உமையம்மையை ஒரு பாகத்து உடையான் அணிந்து கொள்ளும் பாம்புகள்.

பத்தித்த அகட்ட எனற்பாலது, பத்தித் தகட்டவென விகாரமாயிற்று. அகத்தான் எனநிற்கற்பாலது ஆகத்தான் என முதல் நீண்டது.

'பணி' எனுஞ்சொல் பொன் முதலிய உலோகத்தாலாகும் அணியையும், பாம்பினையும் குறிக்குமாயினும், ஈண்டுப் பாம்பையே குறித்து நின்றது. அகடுடைமை, கறைமிடறுடைமை முதலியன பாம்புச் சாதியின் தன்மையைக் குறித்ததனால், சாதித் தன்மையாயிற்று.

### 4. தொழிற்றன்மையணி

தொழிலிலுள்ள பல்வேறுபட்ட தன்மைகளை உள்ளபடி அழகுபடுத்திக் கூறுவது தொழில் தன்மை அணியாகும்.

எ-டு. சூழ்ந்து முரன்றணவி வாசந் துதைந்தாடித்
தாழ்ந்து மதுநுகர்ந்து தாதருந்தும்—வீழ்ந்தபெரும்
பாசத்தார் நீங்காப் பரஞ்சுடரின் பைங்கொன்றை
வாசத்தார் நீங்காத வண்டு.

பொருள் : ஆசையை யறுத்து மலம் நீங்கினவர்களை விட்டு விலகாத பரஞ்சோதியினுடைய நறுநாற்றத்தையுடைய பசுமையாகிய கொன்றைப் பூமாலையைப் பிரியாத வண்டுகள், குழுமி இசையை எழுப்பிப் பொருந்தச் சென்று மணத்தை அளைந்து மேலே பறந்து, மீண்டும் விருப்புடன் தேனையுண்டு மகரந்தப் பொடியைக் கோதா நிற்கும்:

இது, வண்டின் தொழிலையெல்லாம் தொடுத்துக் கூறினமையால் தொழிற்றன்மை யணியாயிற்று.

எ-டு. மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி
நன்பிண வொழியப் போகி நோன்காழ்
இரும்புதலை யார்த்த திருந்துகணை விழுக்கோல்
உளிவாய்ச் சுரையின் மிளிர மண்டி
விடுநிலக் கரம்பைப் படுநீ றாடி
நுண்புல் லடக்கிய வெண்பல் லெயிற்றியர்
பார்வை யார்த்த பறைதாள் விளவின்
நீழன் முற்றி னிலவுரற் பெய்து''

பொருள் : மான்தோலாகிய படுக்கையிலே, பெற்ற பிள்ளையுடனே முடங்கிக் கொண்டு பிள்ளை பெற்ற வேட்டுவச்சி படுத்துக்கிடக்க, மற்றையோர் போய், வலிமையையும் வயிரத்தன்மையையுமுடையதும் இருப் புப் பூணைத் தலையிலே சேர்த்திருக்கப் பெற்றதும் ஒழுங்கான திரட்சியையுடையதுமான சிறந்த கம்பிற் செருகின உளிபோன்ற வாயினையுடைய பாரைகளால், அவை துரு நீங்கி வெள்ளிபோல் விட்டு விளங்கும்படி மண்ணைக் குத்திப் பெயர்த்து அதனால் வெடிப்புண்டா கின்ற கரிசல் நிலத்திலெழும் புழுதி உடலில் படிய, சிறிய புல்லரிசியை வாரியெடுத்து மடியிற் கட்டிக் கொண்ட வெண்ணிறப் பற்களையுடைய வேட்டுவ மகளிர், பார்வை மான் கட்டியிருக்கின்ற தேய்ந்த அடியினையுடைய விளா மரத்தின் நிழலில் வீட்டின் முன்புறத்தில் தோண்டிய நில உரலில் அப் புல்லரிசியைப் போட்டு—

ஈண்டுக் கூறவந்த பொருள் வேட்டுவர்களின் தொழி லாயினும், அவர்களில் பிள்ளையைப் பெற்றோர் முடங் கிக் கிடத்தலும், ஏனையோர் வலிமையான பாரையைக் கொண்டு கரம்பை நிலங்களை வெடிப்புண்டாகுமாறு

தோண்டுதலும், அங்கு எறும்புகள் சேமித்த புல்லரிசியை எடுத்து வந்து பார்வைமான் பிணைத்துள்ள விளாமர நிழல் முற்றத்துத் தோண்டிய நிலவுரற்பெய்து இடித்தலும் ஆகிய தொழிற்றன்மையும் கூறப்படுதலான், இதுவும் தொழிற்றன்மை யணியாயிற்று.

## 2. உவமையணி

29. பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளோடு பொருள் புணர்த்
தொப்புமை தோன்றச் செப்புவ துவமை.

பண்பு, தொழில், பயன் என்பன காரணமாக ஒன்றாகியும் பலவமாகியும் வரும் பொருளோடு பொருள் பொருந்துமாறு வைத்து, ஒப்புமை தோன்றப் பாடுவது உவமையென்னும் அணியாம்,

ஒன்றும் பலவும் பொருளோடு பொருள் புணர்த்தல் என்பது—ஒரு பொருளோடு ஒரு பொருளும், ஒரு பொருளோடு பல பொருளும், பல பொருளோடு பல பொருளும், பல பொருளோடு ஒரு பொருளும் பொருந்துமாறு சேர்த்தல்.

புணர்த்துச் சொல்லப்படுகின்ற அவ்விரண்டு பொருள்களுள்ளே, ஒப்புமையை அறிவதற்குக் காரணமாய் நிற்கும் பொருள் உபமானம் என்றும், அதனால் உவமிக்கப்படும் பொருள் உபமேயம் என்றும் கூறப்படும்.

உபமானத்தை உவமை எனவும், உபமேயத்தைப் பொருள் எனவும் கூறுவர். இவ்விரு பொருளிடத்தும் சமம் சொல்லுதற்குக் காரணமாய்ப் பொதுவாயிருக்கும் தன்மை 'பொதுத் தன்மை' எனப்படும்.

### 1. பண்புவமை

பண்பாவது பொருட்குணமாய்த் தனக்கு வேறொரு குணமில்லதாய் நிற்பது. அது வண்ணம் வடிவு, முதலியன.

(எ-டு) "பவளத் தன்ன மேனி"
பவழத்தைப் போன்ற நிறத்தினையுடைய வடிவம்.

(எ-டு) "வேய்புரை பணைத்தோள்"
மூங்கில் போன்ற திரட்சியான பருத்த தோள்.

(எ-டு) "தெம்முனை யிடத்திற் சேய்கொல்
அம்மா வரிவையவர் சென்றநாடே"

பெண்ணே! நம் தலைவராகிய அவர் சென்ற நாடானது, பகைவர்மீது போர் செய்யும் இடம்போல் தூரமாயிருக்கின்றதோ!

## 2. தொழிலுவமை

தொழிலாவது, பொருளின் புடை பெயர்ச்சியாய்க் காலத்தோடு புலப்படுவது.

(எ-டு) "அரிமா வன்ன அணங்குடைத் துப்பிற்
றிருமால் வளவன்"

பகைவர்க்குத் துன்பம் தரும் ஆண் சிங்கத்தைப் போன்ற வலிமையையும், செல்வப் பெருமையையும் உடைய கரிகாற் சோழன்.

(எ-டு) "களிற்றிரை தெரீஇப் பார்வ லொதுக்கின்
ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல"

யானையாகிய உணவை ஆராய்ந்து பார்த்துச் சாய்ந்த பார்வையுடனே மறைந்து செல்கின்ற வழக்கத்தையுடைய வன்மை பொருந்திய புலிபோல.

## 3. பயனுவமை

பயனாவது செயல்காரணமாகத் தோன்றும் காரியம்.

(எ-டு) "மாரியன்ன வண்கைத்
தேர்வே ளாயைக் காணிய சென்மே.

கைம்மாறு கருதாது உலகிற்கு மழையைப் பொழிகின்ற மேகத்தைப் போலப் பயன் கருதாது பலர்க்கும் கொடுக்கும் வள்ளன்மை பொருந்திய கையையும், தேரினையுமுடைய வள்ளலாகிய ஆய் என்பானைக் காணச் செல்வாயாக!

'ஆய்' கடையேழு வள்ளல்களில் ஒருவன்.

பண்பு, தொழில், பயன் என்பன உவமம் செய்யும் வழித் தனித்தனி வருதலன்றித் தம்முட் கலந்து வருதலும் உண்டு.

ஒரு விளக்கம்

"செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை"
பகைவரை அழித்த இடியை ஒத்த பெரியகை.

"வேய்புரை பணைத்தோள்" என்பது வடிவுவமை என்றும், "தெம்முனை யிடத்துச் சேய்கொல்" என்பது எல்லையுவமை என்றும் கூறுவார் உளரெனின்,

"வண்ணத்தின் வடிவி னளவிற் சுவையினென்
றன்ன பிறவு மதன்குண நுதலி
இன்ன திதுவென வரூஉ மியற்கை
என்ன கிளவியும் பண்பின் றொகையே."

என்னும் தொல்காப்பிய எச்சவியல் நூற்பாவால் வடிவும், எல்லையாகிய அளவும் பண்பென்று ஆசிரியர் கூறியிருப்பதனால் பண்பெனவே படும்.

ஒரு பொருளோடு ஒரு பொருள்

(எ-டு) "செவ்வா னன்ன மேனி"
அந்தி வானம் போன்ற சிவந்த வடிவம்.

### ஒரு பொருளோடு பலபொருள்

(எ-டு) "அவ்வான், இலங்குபிறை யன்ன விளங்குவால் வையெயிறு"

அந்த வானத்தில் விளங்கும் பிறைமதி போன்ற வெள்ளிய ஒளிவிடும் கூரிய பற்கள்.

### பல பொருளோடு பல பொருள்

(எ-டு) "களிறெறி
சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப
மரீஇயோ ரறியாது மைந்துபட் டன்றே"

பொருள்: யானையானது, பகைவரை மோதுகின்ற சுறாமீன் கூட்டத்தை யொத்த வாள்வீரர் தன்னைச் சூழத் தன் மீதேறிய பாகரையும் அறியாது மதம் மிகுதிப் பட்டது.

### பலபொருளோடு ஒரு பொருள்

(எ-டு) "பெரும்பெயர்க் கரிகாலன் முன்னிலைச் செல்லாப்
பீடின் மன்னர் போல
வோடுவை மன்னால் வாடைநீ யெமக்கே"

பொருள்: பெரிய புகழினையுடைய கரிகாற் சோழனுக்கு முன்னே செல்லாத வீரமற்ற அரசர்போல வாடைக் காற்றே! நீ எமக்கு முன் நில்லாது ஓடுவாய்.

### சில விளக்கங்கள்

உபமானமும் உபமேயமும் ஒத்த பண்பாவன எவ்வாறு எனின், "பவளம் போலுஞ் செவ்வாய்" என்றவிடத்துப் பவளம் உவமை எனப்படும். உவமை எனினும் உவமானம் எனினும் ஒன்றே. வாய் உவமேயம் எனப்படும். உவமேயமெனினும் பொருளெனினும் ஒன்றே

செம்மை நிறம் இரண்டிற்கும் பொதுவாகிய குணமாகும். போலுமென்பது உவமை உருபு. இஃது பண்புகாரண மாக வந்த உவமை எனப்படும். இதனை உவமையென்று கூறியது என்னையெனின், பவளவாய் என்பது தொகை யுவமையென்றும், பவளச் செவ்வாய் என்பது விரியுவமை யென்றுங் கூறுதலான்; அல்லது பவளம் போலச் செய்ய வாய் என்பதனை முற்றுவமை என்றுங் கூறுதலான் என்க.

உவமையணி யென்பது "பவளம் போலுஞ் செய்ய வாய்" என்னும் அத் தொடர்ச் சொல் முழுவதுமெனக் கொள்க.

பண்பி, பண்பு, தொழில், பயன் எனக் கூறப்படுவன நான்கு.

பண்பியாவன: காட்சிப் பொருளும் கருத்துப் பொருளும் ஆகிய இயங்குதிணைப் பொருளும் நிலைத்தி ணைப் பொருளுமாம்.

பண்பாவன: அப் பொருளின் குணமாய்த் தோன்றித் தமக்கு வேறு குணமில்லாது நிகழ்வன.

தொழிலாவன: அப் பொருளின் இயக்கம் காலத் தோடுசேர்ந்து நிற்பன.

பயனாவன: குணத்தோடு கூடிய பொருள்களின். காலத்தொடு பொருந்திய இயக்கத்தின் காரணமாக விளை கின்ற காரியம்.

ஒரு பொருட்கு ஒரு பொருள் உவமையாகுமிடத்து இரண்டு பொருளுக்கும் பொதுவாகியதோர் குணமோ தொழிலோ, பயனோ காரணமாகலான், ஒப்பிட்டுரைக்கப் படும். "என்றிவற்றின்" என்று நூற்பாவில் கூறியிருப்ப தால் பண்பு—தொழில்—பயன் என்பன ஒரோவொன்றே யன்றிப் பலவும் காரணமாக வரும்.

(எ-டு) ''கான யானை கைவிடு பசுங்கழை
மீனெறி தூண்டிலி னிவக்கும்
கான நாடன்''

பொருள்: காட்டு யானையால் துதிக்கையைக் கொண்டு பற்றி வளைத்து விடப்பட்ட பசிய மூங்கில், மீன் பிடிக்கும் தூண்டில், அம்மீன் பட்டவுடன் தூண்டிற் காரர் மேலெடுக்கும் போது நிமிர்ந்தெழுவது போல விசை கொண்டு நிமிர்ந்தெழும் சிறப்பினையுடைய காடுசார்ந்த நாட்டினையுடையான்.

இப்பாடல் அடிகளில் தொழிலும் பண்பும் வந்தவாறு காண்க.

''காந்த
ளணிமலர் நறுந்தா தூதும் தும்பி
கையாடு வட்டிலிற் றோன்றும்''

அழகிய காந்தட் பூவினிடத்தே நல்ல மகரந்தத்தை நெருங்கி ஊதுகின்ற வண்டானது, அக் காந்தள் போன்ற கையில் எடுத்து ஆடப்படுகின்ற வட்டு என்னும் ஆடு கருவியைப் போலத் தோன்றும்.

இப்பாடல் அடிகளில் பண்பும், தொழிலும் வந்தவாறு காண்க.

அன்றியும், 'என்றிவற்றின்' என்ற விதப்பினாலே பண்பு, தொழில், பயன் என்பனவேயன்றிச் சொற் பொதுமை காரணமாகவும், பிறகாரணத்தினாலும் உவமையணி வரும் எனக்கொள்க.

'ஒப்புமை தோன்ற' என்று கூறியதனால் அவ் வுமையைக் கேட்போர் உள்ளம், ஒப்புதலுடன் விளக்க மாகத் தோற்றுதல் வேண்டும்.

## உவமை வகை

30. அதுவே
விரியே தொகையே யிதர விதரம்
உரைபெறு சமுச்சய முண்மை மறுபொருள்
புகழ்ந்த னிந்தை நியம மநியமம்
ஐயந் தெரிதரு தேற்ற மின்சொல்
எய்திய விபரீத மியம்புதல் வேட்கை
பலபொருள் விகார மோக மபூதம்
பலவயிற் போலி யொருவயிற் போலி
கூடா வுவமை பொதுநீங் குவமை
மாலை யென்னும் பால தாகும்

மேல் நூற்பாவில் கூறப்பட்ட உவமையணி 1, விரி யுவமை 2. தொகையுவமை 3. இதரவிதரவுவமை 4. சமுச் சயவுவமை 5. உண்மையுவமை 6. மறு பொருள் உவமை, 7 புகழுவமை 8. நிந்தையுவமை, 9. நியமவுவமை 10. அநி யமவுவமை 11. ஐயவுவமை 12. தெரிதரு தேற்றவுவமை 13. இன்சொல்லுவமை 14. விபரீதவுவமை 15. இயம்புதல் வேட்கையுவமை 16. பல்பொருளுவமை 17. விகார வுவமை 18. மோகவுவமை 19. அபூதவுவமை 20, பலவயிற் போலியுவமை 21. ஒருவயிற்போலியுவமை 22. கூடா வுவமை 23. பொதுநீங்குவுவமை 24. மாலையுவமை என் னும் இருபத்து நான்கு வகைப்படும்.

### 1. விரியுவமை

பண்பு, தொழில், பயன் முதலியன விரிந்து நிற்க உவ மிக்கப்படுவது விரியுவமை ஆகும். அஃதாவது, பொதுத் தன்மை வெளிப்படையாய் விரிந்து நிற்றலுடையது இது.

"பால்போலு மின்சொற் பவளம்போற்
செந்துவர்வாய்
சேல் போற் பிறழுந் திருநெடுங்கண்—மேலாம்
புயல் போற் கொடைக்கைப் புனனாடன் கொல்லி
அயல் போலும் வாழ்வ தவர்.

பொருள்: பால் போன்ற இனிய சொல்லினையும் பவளம் போல் சிவந்து விளங்கும் வாயினையும், சேல் என்னும் மீன் போல் பிறழுகின்ற அழகிய நெடிய கண்ணினையுமுடைய அவர் வாழ்கின்ற இடம், பெருமையுடையதென்று சான்றோரால் புகழப்பட்ட மழை போன்று கைம்மாறு கருதாது வாரி வழங்கும் கையையுடையனாகிய சோழனுடைய கொல்லிமலையின் பக்கம் போலும்.

பால் போன்ற இனிமையும், பவளம் போன்ற செம்மையுடனாகிய பண்புவமையினையும், சேல்போன்ற பிறழ்ச்சியாகிய தொழிலுவமையையும் விரித்துணர்த்தினமையால், விரியுவமையாயினவாறு காண்க. பின்வருவனவற்றிற்கும் இவ்வாறே பொருத்திக் காண்க.

## 2. தொகையுவமை

பண்பு, தொழில் முதலியன தொக்கு நிற்பது தொகையுவமையாம். அஃதாவது, பொதுத்தன்மை வெளிப்பட்டு வாராமல் ஆராய்ந்துணரும்படி மறைந்து நிற்றலுடையது.

"தாமரை வாண்முகத்துத் தண்டரளம் போன்
முறுவல்
காமரு வேய்புரைதோட் காரிகையீர்—தேமருவும்
பூங்குழலின் வாசப் பொறை சுமந்து நொந்ததோ
பாங்குழலுந் தென்றற் பரிசு.

பொருள்: தாமரை போன்ற ஒளியுடைய முகத்தினையும், குளிர்ச்சியுடைய முத்துப் போன்ற பற்களையும்,

அழகு பொருந்திய மூங்கில் போன்ற தோளினையும் உடைய பெண்களே! உங்கள் பக்கத்தே உலவுகின்ற தென்றல் காற்றின் தன்மை உங்களுடைய தேன் பொருந்திய பூக்கள் நிறைந்த கூந்தலின் கண்ணுண்டாகிய நறு நாற்றப் பாரத்தைத் தாங்கிக் கொண்டு வருகின்ற வருத்தந் தானோ, மெல்லியவுருவுடைத்தானது? சொல்லுவீராக.

"தாமரை போல் வாண்முகம்" என இடையில் உவமவுருபு விரிக்காது 'தாமரைவாண்முகம்' என தொகுத்துக் கூறினமையான் தொகையுவமையாயினவாறு காண்க. பிறவும் இவ்வாறே கொள்க.

### 3. இதர விதரவுவமை

உபமேயம் ஒரு தடவை உபமானமாகவும், உபமானம் ஒரு தடவை உபமேயமாகவும் ஒரு தொடர்ச்சிக் கண்ணேயே வருவது இதர விதர உவமை ஆகும். அஃதாவது, ஒன்றற்கொன்று உவமையாய் உயர்வைக் குறிப்பித்துத் தொடர்ந்து வருமாறு இரண்டு வாக்கிய மாக வருவது.

"களிக்குங் கயல்போலு நுங்கணுங் கண்போல்
களிக்குங் கயலுங் கனிவாய்த்—தளிர்க்கொடியீர்!
தாமரைபோன் மலரு நும்முக நும்முகம்போல்
தாமரையுஞ் செவ்வி தரும்.

கொவ்வைப் பழம் போன்ற வாயினையுடைய தளிரோடு கூடிய கொடி போன்ற பெண்ணே! செருக்கினையுடைய கயல் மீன் போன்ற தன்மையையுடையனவாயிருந்தன உன்னுடைய கண்களானவை. இவ் வியல்பிற்றாய உன்னுடைய கண்களிற்கு உவமையாகின்றன கயல் மீன்கள். இஃதன்றி, உன்னுடைய முகமண்டலமானது தாமரை மலர்போல் மலராநின்றது; அவ்வியல்பிற்றாய தாமரை உன்னுடைய முகமண்டலம் போலச் செவ்வியினையுடைத்தாகின்றது.

''தளிபெற்று வைகிய தண்சுனை நீலம்
அளிபெற்றார் கண்போ லலரும்—அளிபெற்ற
நல்லார் திருமுகத் தாற்ற நளிபெற்ற
கல்லாரம் போன்மலருங் கண்''

பொருள்: மழையை ஏற்றுக் கோடலின் தட்பத்தை யுடையதாகிய சுனையிடத்திருக்கின்ற நீலப்பூவானது தலைவனால் நலம் பாராட்டப் பெற்ற பெண்களின் கண்போல் மலரா நின்றது. அவ்வியல்பிற்றாக தலைவனால் அளிசெய்யப் பெற்ற மகளிருடைய அழகிய முக மண்டலத்து மிகக் குளிர்ச்சியையுடைத்தாகிய கண்களும் நீலம் போல மலரா நின்றன.

4. சமுச்சயவுவமை

அப்பொருளையொப்பது இப்பொருளேயன்றி இப் பொருளும் ஒக்கும் என்பது சமுச்சய உவமை யாகும், அதாவது ஒரு பொருள் இரண்டு பொருளோடும் சமமாக ஒத்திருத்தல். சமுச்சயம்—இரண்டு மூன்று பொருள்களின் கூட்டம்.

''அளவே வடிவொப்ப தன்றியே பச்சை
இளவேய் நிறத்தானு மேய்க்கும்—துளவேய்
கலைக்குமரி போர்துளக்குங் காரவுணர் வீரம்
தொலைக்குமரி யேறுகைப்பா டோள்.''

பொருள்: துளசி மாலையைச் சூடிய கலைமகளாகிய கன்னி போர்க்களத்துப் பகைவரை நடுங்குமாறு செய்யும் கரிய நிறத்தையுடைய அசுரரின் வீரத்தை அழிக்கும் ஆண்சிங்கத்தை ஊர்தியாகவுடையாள் தோளை வளப்பம் மிக்க இளமையான மூங்கிலானது அளவினாலும் வடிவினாலும் ஒப்பதோடன்றிப் பசுமை நிறத்தினாலும் ஒக்கும்.

இங்கே இளமூங்கில், உபமானம், துர்க்கை தோள், உப மேயம், அளவு, வடிவு, நிறம் என்பன இரண்டினிடத்தும் ஒப்ப உள்ளனவாகச் சொல்லப்பட்ட தன்மைகள்.

### 5. உண்மையுவமை

உபமானத்தைக் கூறிப் பின்மறுத்து இதுவே உண்மை யென்று உபமேயத்தைக் கூறி முடிப்பது உண்மை உவமை ஆகும்.

''தாமரை யன்று முகமேயீ தீங்கிவையும்
காமருவண் டல்ல கருநெடுங்கண்—தேமருவு
வல்லியி னல்ல ளிவளென் மணங்கவரும்
அல்லி மலர்க்கோதை யாள்''.

பொருள்: இது தாமரை மலரல்ல முகமே; இவையும் அழகு பொருந்திய வண்டல்ல கரிய நீண்ட கண்களே; தேன் பொருந்திய கொடியல்லள் இவள் பெண்ணே. இவ் வியல்பிற்றாய உறுப்புக்களையுடைய இவள் என்மனம் விரும்பும் உள்ளிதழ்களையுடைய பூவால் தொடுக்கப் பட்ட மாலையினை உடையாள்.

இங்கே தாமரை, வண்டு, வல்லி என்பன மறுத்து உரைக்கப்பட்ட உபமானங்கள். முகம், கண், பெண் என்பன உண்மை என்று சொல்லப்பட்ட பொருள்கள்.

### 6. மறுபொருளுவமை

முன்னால் வைத்த பொருளையொப்பதோர் பொரு ளைப் பின்னால் வைத்து உவமிப்பது மறுபொருள் உவமை ஆகும்.

''அன்னைபோ லெவ்வுயிருந் தாங்கு மனபாயா
நின்னையா ரொப்பார் நிலவேந்தர்—அன்னதே
வாரிபுடை சூழ்ந்த வையகத்திற் கில்லையால்
சூரியனே போலுஞ் சுடர்.

பொருள்: தாயானவள் தன்மகவினை ஓம்புமாறு போல உலகத்து எவ்வகைப்பட்ட உயிர்களையும் தாங்கும் அனபாயனே! நிலவுலக மன்னர்களில் உன்னையொப்பர் ஒருவருமில்லை; அதுபோலக் கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்திற்குச் சூரியனைப் போன்ற சுடருமில்லை.

இங்கே முன்னிரண்டடியும் ஒரு வாக்கியம். பின்னிரண்டடியும் ஒரு வாக்கியம். முன்னதில் வைக்கப்பட்ட பொருள் அநபாயன்; பின்னதில் எதிராக வைக்கப்பட்ட பொருள் சூரியன் என்பது.

### 7. புகழ்தலுவமை

உபமானத்தைப் புகழ்ந்து பின் உவமிப்பது புகழ்தல் உவமை ஆகும். உபமேயம் புகழப்பட்டிலதாயினும் ஒப்புமையாற் பெருஞ் சிறப்பு அடையும்.

"இறையோன் சடைமுடிமே லெந்நாளுந் தங்கும்
பிறையோர் திருநுதலும் பெற்ற—தறைகடல்சூழ்
பூவலயந் தாங்கு மரவின் படம்புரையும்
பாவைநின் னல்குற் பரப்பு.'

ஒலிக்கின்ற கடல் சூழ்ந்துள்ள நிலப்பரப்பைச் சுமக்கின்ற ஆதிசேடனுடைய படப்பரப்பை ஒத்திருக்கின்றது உனது அல்குல்; அதுவேயுமன்றி, சிவபெருமானுடைய சடைமுடியை விட்டுப் பிரியாது எந்நாளும் இருக்கின்ற பிறைநிலவினுடைய அழகினை உன்னுடைய அழகிய நெற்றியும் பெற்றது; ஆதலால் பாவையே! நின்னுருவத் தன்மை யிருந்தவாறு என்.

இங்கே 'பிறை' யும் 'அரவின்பட'மும் புகழ்ந்து சொல்லப்பட்ட உபமானங்கள். அல்குலும், அல்குற் பரப்பும் உபமேயங்கள்.

### 8. நிந்தையுவமை

உபமேயத்தினை உயர்த்தி உபமானத்தைப் பழித்துச் சொல்வது இது.

"மறுப்பயின்ற வாண்மதியு மம்மதிக்குத் தோற்கும்
நிறத்தலரு நேரொக்கு மேனும்—சிறப்புடைத்துத்
தில்லைப் பெருமா னருள்போற்றிருமேனி
முல்லைப்பூங் கோதை முகம்"

பொருள்: தில்லைக் கூத்தனாகிய பெரியோனுடைய அருளொக்கும் அழகிய திருமேனியினையுடைய, முல்லைப் பூவால் தொடுக்கப்பட்ட மாலையினையுடையாள் முகமானது மறு நீங்காத ஒளியுடைத்தாகிய மதியமும், அம்மதியத்தைக் கண்டு வாடுகின்ற தாமரை மலரும் உவமையெனக் கொள்ளினும் சிறப்புடைத்து.

இங்கே முகம் உபமேயம் சந்திரனும் தாமரைப் பூவும் உபமேயங்கள்.

### 9. நியமவுவமை

இப்பொருட்கு இப்பொருளே உவமையாகுமென்று உறுதி செய்து துணிந்து சொல்வது நியம உவமை ஆகும். நியமம்—நிச்சயம்; உறுதி.

"தாதொன்று தாமரையே நின்முக மொப்பதுமற்
றியாதொன்று மொவ்வா திளங்கொடியே—மீதுயர்ந்த
சேலே பணியப் புலியுர்த்த செம்பியர்கோன்
வேலே விழிக்கு நிகர்.

பொருள்: இளங்கொடியை ஒப்பாய்! எல்லாவேந்தருடைய கொடிக்கும் மேலாகி உயர்ந்த பாண்டியனுடைய மீன்கொடி தாழத் தனது புலிக்கொடியை உயர்த்திய சோழனுடைய வேலே விழிக்கு ஒப்பாவது. தாதுக்கள்

பொருந்தியிருக்கப்பட்ட தாமரைமலரே நின்முகத்தை ஒப்பது. இவையன்றி உன் விழியினையும் முகத்தினையும் உலகத்துண்டாகிய வேறு எப்பொருளும் பொருந்தாது.

இங்கே தாமரையும் வேலும் உபமானங்கள். முகமும் விழியும் உபமேயங்கள்.

## 10. அநியமவுவமை

முன்னால் வரையறுத்த உவமையை நீக்கிப் பிறிதும் இத்தன்மையனவாம் என்று கூறுதல் அநியம உவமை ஆகும். அநியமம்—நிச்சயம் இன்மை.

''கவ்வை விரிதிரைநீர்க் காவிரிசூழ் நன்னாட்டு
மவ்வல் கமழுங் குழன்மடவாய்—செவ்வி
மதுவார் கவிரேநின் வாய்போல்வ தன்றி
அதுபோல்வ துண்டெனினு மாம்''.

பொருள்: ஆரவாரத்தையும் பரந்த அலைகளையுமுடைத்தாகிய காவிரிசூழ் நன்னாட்டின்கண் மல்லிகைப் பூவால் தொடுக்கப்பட்ட மாலையானது நாறப்பட்ட கூந்தலினையுடைய மடவாய்! அழகும் தேனும் நிறைந்த முருக்கமலரின் இதழே நின் வாயை ஒப்பது; அதுவன்றி அப் பூப்போல்வது உலகத்து உளவாயினும் நின்வாயையொக்கும்.

இங்கே முருக்கம்பூ-உபமானம். வாய்-உபமேயம்.

## 11. ஐயவுவமை

உபமானத்தையும் உபமேயத்தையும் ஐயுற்று உரைப்பது ஐய உவமையாகும். ஐயம்—பலதலையாய உணர்வு.

"தாதளவி வண்டு தடுமாறுந் தாமரைகொல்
மாதர் விழியுலவு வாண்முகங்கொல்—யாதென்
றிருபாற் கவருற் றிடையூச லாடி
ஒருபாற் படாதென் னுளம்.

பொருள்: மகரந்தப் பொடியினை அளைந்து வண்டுகள் சூழ்ந்திருக்கும் தாமரை மலரோ! காதலைச் செய்யப் பட்ட விழியுலவுகின்ற ஒளியுடைய முகமண்டலமோ! என்னவென்று என்னுள்ளமானது ஊஞ்சலைப்போல் ஆடி இரண்டன் கண்ணும் ஐயுற்று ஒன்றனிடத்தும் துணிகின்றதில்லை.

இங்கே தாமரைக்கும் முகத்திற்கும் உள்ள ஒப்புமையன்றித் தாமரையில் உலாவும் வண்டுக்கும், முகத்தில் உலாவும் கண்ணுக்கும் உள்ள ஒப்புமையும் ஐயப்படுதற்குக் காரணமாயிற்று

## 12. தெரிதரு தேற்ற வுவமை

உபமானத்தைக் கூறிப்பின் ஐயுற்று ஆராய்ந்து துணிந்து இதுவேயாம் என உண்மையைக் கூறல் தெரிதரு தேற்ற உவமை ஆகும்.

"தாமரை நாண்மலருந் தண்மதியால் வீறழியும்
காமர் மதியும் கறைவிரவும்—ஆமிதனால்
பொன்னை மயக்கும் புனைசுணங்கினார் முகமே
என்னை மயக்கு மிது."

பொருள்: விடியற்போதில் மலருந் தாமரை மலரும் குளிர்ச்சி பொருந்திய சந்திரனாலே அழகு கெடும்; அழகிய சந்திரனும் களங்கத்தோடு கூடியிருக்கும்; அதனால் என்னை மயங்குமாறு செய்த இது, பொன் போல அழகுறுத்தப்பட்ட தேமலையுடையாளுடைய முகமே.

இங்கே ஐயம் நீங்கித் துணியப்பட்ட பொருள் முகம்.

## 13. இன்சொலுவமை

உபமேயத்தைக் காட்டிலும் உபமானத்திற்கு ஒரு பெருமை உண்டாகுமாறு கூறி உவமித்து, இப் பெருமையையுடையதாயினும் ஒப்புமையுடையதேயன் றிச் சிறப்புடைய தன்றென்பது இன்சொல் உவமை ஆகும்.

"மான்விழி தாங்கு மடக்கொடியே! நின்வதனம்
மான்முழுதுந் தாங்கி வருமதியம் —ஆனாலும்
முற்றிழை நல்லாய்! முகமொப்ப தன்றியே
மற்றுயர்ச்சி யுண்டோ மதிக்கு"

பொருள்: நிறைந்த அணிகளையுடைய பெண்ணே! உன்னுடைய முகமானது மானின் விழி ஒன்றயே சுமந்து நின்றது; வானத்தில் வருகின்ற மதியானது மானின் உறுப் பனைத்தும் சுமந்து நின்றது, இவ்வாறு முழுவதுஞ் சுமந் தாலும் உன்முகத்திற்கு ஒப்பாவதன்றி வேறு சிறப்பினை உடைத்தாக இருக்கின்றதோ அம்மதியம்?

இங்கே மானின் விழியைத் தாங்கும் முகம் உப மேயம். மான் முழுதும் தாங்கிவரும் மதியம் உபமானம்.

## 14. விபரீதவுவமை

தொன்று தொட்டு உபமானமாய் வருவனவற்றை உபமேயமாகவும், உபமேயமாய் வருவனவற்றை உப மானமாகவும் ஆக்கியுரைப்பது விபரீத உவமையாகும்.

"திருமுகம் போன்மலரும் செய்ய கமலம்
கருநெடுங்கண் போலுங் கயல்கள்—அரிவை
இயல்போலு மஞ்ஞை யிடைபோலும் கொம்பர்
மயல்போலும் யாம்போம் வழி."

பொருள்: அரிவையுடைய திருமுகத்தைப் போல மலரும் செந்தாமரை; கரிய நெடிய கண்கள் போலும்

கயல்மீன்கள்; சாயலைப் போலும் மயில்; இடுப்பு (இடை) போலும் கொம்பு (கம்பு); ஆதலால் இவ்வழியில் யாம் போகின்ற போக்கு ஆசை போலும்.

முகம் முதலியவைகட்கு முறையே உபமானங்களாய் வழங்கி வரப்பட்ட தாமரை முதலியன இங்கே உபமேயங் களாய் நின்றன.

"ஓவத் தன்ன வொண்டுறை மருங்கின்
கோவத் தன்ன கொங்குசேர் புறைதலின்
வருமுலை யன்ன வண்முகை யுடைந்து
திருமுக மவிழ்ந்த தெய்வத் தாமரை.

பொருள்: ஓவியத்தில் வரைந்தாலொத்த ஒட்பம் பொருந்திய நீர்த் துறையிடத்துத் தம்பலப் பூச்சியைப் போன்ற செந்தேன் நிறைந்து இருத்தலின் வளர்ந்து வரு கின்ற இளமுலையைப் போன்ற வளப்பம் பொருந்திய மொட்டு கட்டவிழ்ந்து அழகிய முகமலர்ச்சியோடு மலர்ந்த தெய்வத்தன்மை பொருந்திய தாமரை.

விபரீத உவமைக்கு ஒரு சிறந்த உதாரணச் செய்யுள்:

மங்கையர் குறங்கென வகுத்த வாழைகள்
அங்கவர் கழுத்தெனக் கமுக மார்ந்தன
தங்கொளி முறுவலில் தாமம் நான்றன
கொங்கையின் நிறைந்தன கனக கும்பமே

என்னும் இராமாயணச் செய்யுள் ஆகும்.

## 15. இயம்புதல்வேட்கையுவமை

உவமேயமாகிய பொருளை இன்னபொருள்போல் உளதென்று சொல்ல விரும்புகின்றது என்னுள்ளம் என்று சொல்லுதல் இயம்புதல் வேட்கை உவமை ஆகும்.

"நன்றுதீ தென்றுணரா தென்னுடைய நன்னெஞ்சம்
பொன்றுதைந்த பொற்சுணங்கிற் பூங்கொடியே —
மன்றல்
மடுத்ததைந்த தாமரைநின் வாண்முகத்திற்
கொப்பென்
றெடுத்தியம்ப வேண்டுகின்ற தின்று.

பொருள்: பொன் நிறைந்த போலும் அழகிய சுணங் கினையும் பொலிவினையுமுடைத்தாய்க் கொடியை யொப்பாய்! நன்மை தீமை என்பதனை ஒன்றையும் ஆராயாது, நறுநாற்றத்தையுடைத்தாய் மடுவிடத்து நின்று விளங்காநின்ற தாமரை நின் ஒளியினையுடைத்தாகிய முகத்திற்கொப்பாமென்று எடுத்துரைக்க வேண்டுகின்றது, இன்று என் நெஞ்சம்.

## 16. பலபொருளுவமை

ஒரு பொருளுக்குப்பல உவமையைக் காட்டுவது பல் பொருள் உமையாகும். இப்படிக் காட்டி அதிசயப்பட வைப்பது.

"வேலுங் கருவிளையு மென்மானுங் காவியும்
சேலும் வடுவகிருஞ் செஞ்சரமும்—போலுமால்
தேமருவி யுண்டு சிறைவண் டறைகூந்தற்
காமருவு பூங்கோதை கண்"

பொருள்: தேனை விரும்பியுண்டு சிறைவண்டு இசைபாடும் கூந்தலையும், அழகிய மாலையை யுமுடை யாளுடைய கண்கள், வேலையும், கருவிளை மலரையும், மெல்லிய நோக்கினையுடைய மானினையும், காவிமலரை யும் சேல் என்னும் மீனையும், கூரிய அம்பினையும் போலும்.

இங்கே 'கண்' என்ற ஓர் உபமேயத்திற்குப் பல பொருள்கள் உபமானமாக வந்தன.

## 17. விகாரவுவமை

உபமானத்தை விகாரப்படுத்தி உவமிப்பது விகார உவமை ஆகும். உபமானத்தின் விகாரமே உபமேயம் என்று சொல்லுவது என்றும் கூறலாம்.

"சீத மதயி னொளியுஞ் செழுங்கமலப்
போதின் புதுமலர்ச்சி யுங்கொண்டு—வேதாதன்
கைம்மலரா னன்றிக் கருத்தால் வகுத்தமைத்தான்
மொய்ம்மலர்ப்பூங் கோதை முகம்"

பொருள்: நெருங்கிய மலர்களால் பொலிவு பெற்ற கூந்தலினையுடையாள் முகத்தினைப் பிரமன் குளிர்ந்த மதியின் கணுண்டாகிய ஒளியினையும், செழுமையாகிய தாமரை மலரிலுண்டாகிய புதிய மலர்ச்சியையுங் கொண்டு தன் கைத் தாமரையினானன்றித் தன்னுள்ளக் கருத்தால் அமைத்தான்.

இங்கே சந்திரனும் தாமரைப் பூவும் உபமானம். உபமேயமாகிய முகம் அவற்றின் விகாரமாகக் கூறப் படுகின்றது.

"முத்துக்கூர்த் தன்ன முளையிளங் கூரையிற்று
மணிதொடுத் தன்ன வைம்பான் மறுத்துடைத்து
மதியம்வைத் தன்ன வாண்முகத் தொருத்தி"

பொருள்: முத்துக்கள் கூர்மையாக அமைந்தாற் போன்ற முளைத்த இளமையாகிய கூர்மையுள்ள பற் களையும், நீல மணியை நீளத் தொடுத்து வைத்தாற் போன்ற ஒளி பொருந்திய முகத்தினையுமுடைய ஒரு பெண்.

## 18. மோக வுவமை

ஒரு பொருளின் மேல் எழுந்த ஆசை மிகுதியினால் வந்த உள்ள மயக்கம் தோன்ற உரைப்பது மோக உவமையாகும்.

''கயல்போலு மென்றுநின் கண்பழிப்பல் கண்ணின்
செயல்போற் பிறழுந் திறத்தாற்—கயல்புகழ்வல்
ஆரத்தா னேர்மருங்கு லந்தரள வாண்முறுவல்
ஈரத்தா லுள்வெதும்பும் யான்''

பொருள்: முத்தினால் செய்யப்பட்ட பூணினால் வருந்தாநின்ற இடையினையும், அழகிய முத்தினுடைய ஒளிபோன்ற நகையினையுமுடையாய்! உன்னுடைய குறிப்பினால் உளமழியும் யான், கயல் மீன் போலு மென்று நின் கண்ணினைப் பழிப்பேன்; நின் கண்ணைப் போல் பிறழும் தன்மையால் கயல் மீனைப் புகழ்வேன்.

இவ்வுவமையினை மயக்கவுமை எனக் கூறுதலும் உண்டு. இங்கு உவமிக்குமிடத்து மதிமயக்கமுண்டாகு மாறு கூறினமை காண்க. மோகம்-மயக்கம்;அறிவின்மை.

## 19. அபூத வுவமை

முன்பு இல்லாததனை இப்பொழுது உவமையாக்கி யுரைப்பது அபூத உவமையாகும். இவ்வுவமையினை 'இல் பொருளுவமை' எனவும் கூறுவர்.

''எல்லாக் கமலத் தெழிலும் திரண்டொன்றின்
வில்லேர் புருவத்து வேனெடுங்கண்—நல்லீர்
முகம்போலு மென்ன முறுவலித்தார் வாழும்
அகம்போலு மெங்க ளகம்''

வில்லினையொத்த புருவத்தினையும், வேல் போன்ற நெடிய கண்ணினையுமுடைய நல்லீர்! உம்முடைய முகத்தினையொக்கும்; எங்குமுள்ள தாமரைப் பூக்களின் செவ்வியும் நெருங்கி ஒன்றுபடுமாயின் என மகிழ்வோ டிருப்பார் கூடி வாழும் இடம்போலும் எங்கள் உள்ளம்.

அவ்வாறாயின், விகாரவுவமைக்கும், அபூதவுவமைக் கும் வேற்றுமை என்ன? விகாரவுவமை பிறரால் விகாரப்

பட்டதாகக் கொண்டு உவமையாக்கியுரைப்பது. இஃது இல்லதனை உவமையாக்கியுரைப்பது என்க.

"கருமுகில் தாமரைக் காடு பூத்துநீ
டிருசுட ரிருபுறத் தேந்தி யேடவிழ்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின் மேல்
வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினான்'

என்பதும் அபூதவுவமைக்கு நல்ல எடுத்துக் காட்டாகும்.

## 20. பல வயிற் போலியுவமை

ஒரு தொடர் மொழியிடத்துப் பலவுவமைகள் வந்தால், அவ் வந்த உவமைகள் தோறும் உவமைச் சொல் தோன்றுமாறு அமைப்பது பலவயிற்போலி உவமை ஆகும்.

"மலர்வாவி போல்வரான் மாதர் கமல
மலர்போலும் மாதர் வதனம்—மலர்சூழ்
அளிக்குலங்கள் போலும் அளகம் அதனுட்
களிக்கும் கயல்போலும் கண்"

பொருள்: தாமரை மலர்ந்த தடாகம் போல்வர் மாதர்; தாமரை மலர் போலும் மாதர் வதனம்; மலரைச் சூழ்ந் துள்ள வண்டுக் கூட்டம் போலும் கூந்தல்; அத்தடா கத்துள் மகிழாநின்ற கயல்போலும் கண்கள்.

"மிக்க தாருக வனத்தினை யொத்தது விசும்பில்
தொக்க பேரிருள் மாதரொத் தனவுடுத் தோற்றம்
செக்க ரீசனை யொத்ததொண் போனகஞ்செறிந்த
கைக்க பாலம தொத்தது கதிரிளம் பிறையே"

என வரும் கந்தபுராணச் செய்யுளும் பல்பொருள் போலி உவமைக்கு நல்ல எடுத்துக்காட்டாகும்.

## 21. ஒரு வயிற் போலியுவமை

ஒரு தொடர் மொழியிடத்துப் பலவுவமைகள் வந்தால் அவ் வந்த வுவமைகள் தோறும் உவமைச் சொல் தோன் றாது ஓர் உவமைச் சொல் தோன்றுமாறு அமைப்பது ஒரு வயிற் போலி உவமை ஆகும்.

"நிழற்கோப மல்க நிறைமலர்ப்பூங் காயா
சுழற்கலவ மேல்விரித்த தோகை—தழற்குலவு
தீம்புகை யூட்டுஞ் செறிகுழலார் போலுங்கார்
யாம்பிரிந்தோர்க் கென்னா மினி"

பொருள்: காயா மலரின் நிழலிடத்து இந்திரகோபம் என்னும் பூச்சி செறிந்திருக்க, அப்பொலிவினையுடைய காயாமலரின் நிறைந்த சூழலிலே தன் தோகையை விரித்த மயிலானது தீயின் கட்டோன்றிய நறிய புகையினை ஊட்டும் செறிந்த கூந்தலினையுடைய மடவாரைப் போலும் கார்காலம், யான் பிரிந்திருக்கப் போகியாருக்கு என்னாம் இனி?

இங்கே, நிழலிற் கிடக்கும் இந்திர கோபத்திற்குப் புகையூட்டற்கு மூட்டிய தழல் உபமானம்.

## 22. கூடாவுவமை

ஒரு பொருட்குப் பொருந்தாத தன்மையொன்றனைப் பொருந்துவதாகக் கொண்டு அதனை யொன்றற்கு உவமையாக்கியுரைப்பது, கூடா உவமை ஆகும்.

"சந்தனத்திற் செந்தழலுந் தண்மதியில்
வெவ்விடமும்
வந்தனவே போலு மானும் மாற்றம்—பைந்தொடியீர்
வாவிக் கமல மதிமுகங்கண் டேக்கறுவார்
ஆவிக் கிவையோ வரண்"

பொருள்: பைந்தொடியீர்! சந்தனத்தின் கண் வெம்மை மிக்க நெருப்பும் குளிர்ச்சி பொருந்திய முழுநில விடத்துக் கொடிய விடமும் பிறந்தாற் போலும், நும்முடைய சொற்கள். ஆனால் குளிர்ந்த தடாகத்திடத்துத் தாமரை மலரும், முழுமதியும் போலும் முகத்தினைக் கண்டு ஆசைப்படுவார் உயிர்க்கு இவையோ காவல்.

சந்தனத்திற் செந்தழலும், மதியில் வெவ்விடமும் வருதல் கூடாமை அறிக.

## 23. பொது நீங்குவமை

உபமானத்தைக் கூறி மறுத்துப் பின் உபமேயத்தையே உவமையாக உரைப்பது.

உபமானம் உபமேயம் என்னும் இரண்டுமாய் ஒன்றே நிற்றலால் பொதுத் தன்மை இன்மையாகும் தன்மை இது.

"திருமருவு தண்மதிக்குஞ் செந்தா மரையின்
விரைமலர்க்கு மேலாந் தகையால்—கருநெடுங்கண்
மானே! யிருளளகஞ் சூழ்ந்தநின் வாண்முகம்
தானே யுவமை தனக்கு.

பொருள்: கரிய நெடிய கண்களையுடைய மானே! குளிர்ச்சி பொருந்திய சந்திரனுக்கும், திருமகள் பொருந்திய செந்தாமரையினது நன்மணமுடைய மலருக்கும் மேன்மையாகிய தன்மையை யுடைத்தாகலான், இருளாகிய கூந்தல் சூழ்ந்த நின் ஒளியினையுடைய முகம் தானே தனக்கு உவமையாம்.

## 24. மாலையுவமை

ஒரு பொருளுக்குப் பல உவமை வந்தால் அவை ஒன்றன்பின் ஒன்றாக இடைவிடாது தொடர்ச்சியுடைய

வாகச் சேர்த்து இறுதிக் கண் பொருள் கூட்டி முடிப்பது மாலை உவமையாகும். மாலை-புட்பமாலிகை.

"மலையத்து மாதவனே போன்று மவன்பால்
அலைகடலே போன்று மதனுட்—குலவும்
நிலவலய மேபோன்று நேரியன்பா னிற்கும்
சிலைகெழுதோள் வேந்தர் திரு.

பொருள்: பொதிகை மலையிடத்துத் தவத்தோனாகிய அகத்தியனைப் போன்றும், அவனால் உண்ணப்பட்ட அலைகளையுடைய கடலைப் போன்றும், அக்கடலுள் உண்டாகிய நிலப்பரப்புப் போன்றும் சோழனை விட்டுப் பிரியாது நிற்கும், வில்பயின்ற தோள்களையுடைய அரசர் செல்வம்.

சோழனிடம் போய் நின்ற திரு இங்கே உபமேயம். அகத்தியரும், கடலும், பூமியும் உபமானங்கள்.

31. அற்புதஞ் சிலேடை யதிசயம் விரோதம்
ஒப்புமைக் கூட்டந் தற்குறிப் பேற்றம்
விலக்கே யேதுவென வேண்டவும் படுமே.

உவமையணி பிற வணிகளுடனுங்கூடி வருமாறு உணர்த்துகின்றார்.

(1) அற்புதம், (2) சிலேடை, (3) அதிசயம், (4) விரோதம், (5) ஒப்புமைக்கூட்டம், (6) தற்குறிப்பேற்றம், (7) விலக்கு, (8) ஏது எனச் சொல்லப்பட்ட அணிகள் எட்டுடனும் உவமையணி கூடியும் வரும்.

## 25. அற்புதவுவமை

அற்புதமான உபமானத்தைக் கொண்டு உவமிப்பது அற்புத உவமையாகும். அற்புதம்-வியப்பு.

“குழையருகு தாழக் குனிபுருவந் தாங்கி
உழைய ருயிர்பருகி நீண்ட—விழியுடைத்தாய்
வண்டே றிருளளகம் சூழ வருமதியொன்
றுண்டே லிவண்முகத்திற் கொப்பு”

பொருள் : குழை எனும் காதணி தாழ்ந்த முகத்தினையுடைத்தாய், வளைந்த புருவத்தினையும் சுமந்து, அண்மையில் நின்று பார்த்தவருடைய உயிரையுண்டு வளர்ந்தகண்களையும் பெற்று, வண்டுகளாலே பொருந்தப்பெற்றிருக்கும் கூந்தலைச் சூழக் கொண்டு வருவதொரு மதியமுண்டாயின் இவளுடைய முகத்திற்கு ஒப்பாம்.

இங்கே உபமேயம் ‘முகம்’. உபமானம் ‘மதி’. ‘வருமதியொன்று உண்டேல்’ என்பதனால் அற்புதம் வெளிப்படும்.

## 26. சிலேடை யுவமை

சிலேடை—பலபொருட்சொற்றொடர்; எனவே பலபொருட்சொற்றொடரான் அமைந்தபொருளைக்கொண்டு உவமித்தல் சிலேடை உவமையாகும். அச்சிலேடையுவமை செம்மொழிச் சிலேடை யுவமை, பிரிமொழிச்சிலேடை யுவமை என இரு வகைப்படும்.

### செம்மொழிச் சிலேடை யுவமை

செம்மொழி—தனிமொழி, அஃதாவது ஒப்பற்ற மொழியும் ஒரேமொழியுமாக உள்ளவை; அம் மொழியும் பல பொருட் சொற்றொடராய் இருத்தலான்; அவற்றானாகும் பொருளை உபமானமாகக் காட்டியுவமித்தல்.

“செந்திருவுந் திங்களும் பூவும் தாலசிறப்பச்
சந்தத் தொடையோ டணிதழு விச்—
செந்தமிழ்நூல்

கற்றார் புனையுங் கவிபோன் மனங்கவரும்
முற்றா முலையாண் முகம்''

பொருள் : திருவெனவும், திங்களௌனவும், பூவென வும் கூறிய இவற்றினுடைய பெயரை முதலவாக வுடைத்தாய் ஓசையோடு அமைந்து, சொற்கோவை யோடு அணி பொருந்திக் கற்றாருள்ளம் விரும்பும் தன் மைத்தாய்ச், செந்தமிழ் நூல் வல்லாராலே சொல்லப் பட்ட கவிபோலத், திருவினுருவையும், திங்களினுருவை யும், பூவையும் தலைமீதிலுடைத்தாய், நிறத்தோடு கூடிய பூமாலையோடும் அழகு தழுவிப் பயின்றாருள்ளங் களைக் கவரு முகம்.

கவியெனக் கொள்ளுங்கால்:— சந்தம்—ஓசை, தொடை—சொற்கோவை, அணி—அலங்காரம். முக மெனக் கொள்ளுங்கால்:— சந்தம்—நிறம். தொடை— மாலை, அணி—அழகு.

### பிரிமொழிச் சிலேடை யுவமை

பிரித்துப் பொருள்காணும் மொழிகள் இயைந்து நின்று, சிலேடைப்பொருள் உணர்த்துமாறு உவமித்தல் பிரிமொழிச் சிலேடை உவமை ஆகும்.

''நளிதடத்த வல்லியின் கண்ணெகிழ ஞாலத்
தளவி னிறைகடாஞ் சிந்திக்— களிறிகலும்
கந்த மலையா நிலவுங் கவடசைய
வந்த மலையா நிலம்''

பொருள் ; செறிவினையும். பெருமையினையு முடைய காலிலே பொருந்தியிருக்கின்ற விலங்கினுடைய மூட்டுவாய்க் கழல, பூமியினிடத்து நிறைந்த மதநீர் பொழியக் கட்டுத்தறியைச் சினந்து கழுத்திடுக்கயிறு அசைய வரும் யானை போன்று, தென்றற் காற்றானது

பெரிய பொய்கையிலுள்ள அல்லிப் பூவானது கட்ட விழ்ந்து தேன் ஒழுக, உலகத்தார் நிறைகளை அழித்து நறுமணம் கமழ, நெருங்கிய மரக் கொம்புகளை அசைத்து, வருகின்றது.

யானையின்மேற் சொல்லுங்கால் : நளி— செறிவு. தடம்— பெருமை. வல்லி— விலங்கு. கண்— மூட்டு வாய். நெகிழ்தல்— கழலுதல். நிறைகடாம்— மிக்கமத நீர். கந்து—கட்டுத்தறி. மலையா—சீறி (சினந்து). கவடு— யானையின் கழுத்திடு கயிறு.

தென்றலின் மேற் சொல்லுங்கால்: நளி— பெருமை தடம்—தடாகம். அல்லி—பூ. கள்— தேன். நெகிழ்தல்— சோர்தல். நிறை— ஒழுக்கம். கந்தம்— விரை அலை தல்— நாறுதல். நிலவுதல்— பொருந்துதல். கவடு— மரக் கொம்பு.

இதனைச் 'சந்தான உவமை' என்று கூறுவாரு முளர். அஃதாவது இரண்டு பொருள் காண்பதற்கு ஏது வாயிருக்கும் சொற்களால் பாடப்படுவது. இதனை இவ்வகையின் வேறுபடுத்திக் காட்டியது எற்றுக்கு எனின், மேற்கூறப்பட்ட பண்பு, தொழில் முதலியன ஏதுவாக உவமை வருதலேயன்றிச் சொற்பொதுமை காரணமாகவும் உவமை வருமென்பார் அதனைக் காட்டற் பொருட்டென உணர்க.

## 27. அதிசயவுவமை

புதுமை தோன்றுமாறு உவமித்தல் அதிசயவுவமை யாகும். அதிசயம்— புதுமை— ஆச்சரியம்.

''நின்னுழையே நின்முகங் காண்டு நெடுந்தடம்
தன்னுழையே தன்னையுங் காண்குவம்— என்னும்
இதுவொன்று மேயன்றி வேற்றுமை யுண்டோ
மதுவொன்று செந்தா மரைக்கு''

பொருள் : பெண்ணே! நின்னிடத்திலேயே நின் முகத்தினைக் காண்கின்றேம்; பெரிய பொய்கையிலே தாமரை மலரையும் காண்கின்றேம் என்னும் இவ்வளவே யன்றி வேறுபாடு யாதும் கண்டிலேம், தேன் நிறைந்த தாமரை மலருக்கும் நின் முகத்திற்கும்.

''பாலினிடை நீல மணிநிறஞ்சேர் பான்மைபோல்
ஞாலம் பரந்த நகைநிலவு —மாலிருளாம்
வைம்மருவு மூவிலைவேல் வன்கட் டமருகக்கைச்
செம்மல் கருமாமை சேர்ந்து.''

பொருள் : நீலமணியானது பாலுடன் கூடித் தன்னொளியைப் பாலுக்குக் கொடுத்தாற்போலக், கூர்மை பொருந்திய மூன்று தலையையுடைய சூலத்தையும், வலிய கண்ணையுடைய தமருகத்தையுமுடைய கையனாகிய பரமசிவன் கழுத்திலுண்டாகிய கரிய நிறத்தைச் சேர்ந்து உலகத்தில் பரந்த வெண்மையுடைய நிலவும் மிக்க இருள் நிறம் பெற்றது.

தமருகம்— உடுக்கை எனும் தோற்கருவி,

## 28. விரோதவுவமை

மாறுபடு பொருள் தோன்ற உவமித்தல் விரோத உவமையாகும். உபமானமும் உபமேயமும் தம்முள் விரோத குணமுடையனவாகச் சொல்லப்படுவது,

''செம்மை மரைமலரும் திங்களும் நும்முகமும்
தம்மிற் பகைவிளைக்குந் தன்மையவே—
எம்முடைய
வைப்பாகுஞ் சென்னி வளம்புகார் போலினியீர் !
ஒப்பாகு மென்பா ருளர்.''

பொருள் : நமது செல்வமாகிய சோழனுடைய வளம் நிறைந்த பூம்புகார் போன்ற இனிமையையுடை

யீர்! செந்தாமரை மலரும் மதியமும் நுமது முகமும் தம்முள்ளே பகை பெருக்குந் தன்மையாயிருக்க, இவற்றை யுவமைக்குப் பொருந்துமென்று கூறுவாரு முளர்; இதற்குக் காரணம் என்னை? சொல்மின். விரோதம்— ஒன்றோடொன்று கூடுதல் இன்மை.

## 29. ஒப்புமைக்கூட்ட வுவமை

ஒத்த செயல்களைக் கூட்டி யுவமித்தல் ஒப்புமைக் கூட்ட உவமையாகும்.

''விண்ணின்மேல் காவல் புரிந்துறங்கான்
விண்ணவர்கோன்
மண்ணின்மே லன்னை வயவேந்தே—
தண்ணளியில்
சேரா வவுணர் குலங்களையுந் தேவர்கோன்
நேரார்மே லத்தகையை நீ.''

பொருள்: விண்ணுலகத்தைக் காக்குந் தொழிலில் மிக்கு உறங்கானாயினான், தேவர்கட்குத் தலைவனாகிய இந்திரன். மண்ணுலக வுயிர்களைக் காக்கவேண்டி வன்மையுடைய அரசனே! நீயும் உறங்காவாயினாய்; உள்ளங்குளிர்ந்து பிறரைக் காக்குந் தொழிலிற் சேராத அசுரர் குலங்களைக் களைவான் இந்திரன்; பகைவர் களிடத்திலே நீயும் அத்தன்மையயுடையை.

இங்கே இந்திரன் உபமானம். வேந்து உபமேயம்.

## 30. தற்குறிப் பேற்ற வுவமை

உபமேயத்திற்கு மேன்மை தோன்றுமாறு, கவி, தான் குறித்த கருத்தை உபமானத்தின்மேல் ஏற்றிச் சொல்வது தற்குறிப்பேற்றம் ஆகும்.

''உண்ணீர்மை தாங்கி யுயர்ந்த நெறியொழுகி
வெண்ணீர்மை நீங்கி விளங்குமால்—தண்ணீர்த்

தரம்பேலு மென்னத் தருகடம்பை மாறன்
கரம்போற் கொடைபொழிவான் கார்.

பொருள் : குளிர்ச்சி பொருந்திய நீர்போல ஏற்போர் தண்ணளி பெறக் கொடுக்கவல்ல கடம்பை என்னும் ஊருக்குரியோனாகிய மாறன் என்பவனது கைபோலக் கொடுத்தலை நினைந்து, மேகமானது உள்ளே நீரையுடைத்தாய் உயர்ந்த வானத்தின் வழியே நடந்து வெண்மைத் தன்மை நீங்கி விளங்கியது.

இம் மாறனுடைய கையும் பிறர்க்கு நீர்பெய்து பொருள் வழங்கலான் நீர்காயாது உலகத்தார் கைகளினும் மேலாகப் பயின்று செம்மையுடைத்தாய் விளங்குதல் காண்க. தண்ணீரின் தன்மைபோலு மென்னக் கொடுக்கும் கை என இயைத்துக் காணவேண்டும்.

மாறன்கரம், உபமேயம். முகில், உபமானம்

## 31. விலக்குவமை.

உபமேயத்திற்கு உயர்வு தோன்ற, உபமானத்திலே ஒப்புமைக்கு விலக்காயுள்ள சில தன்மைகள் புலப்படும் படி சொல்வது விலக்கு உவமை.

“குழைபொருது நீண்டு குமிழ்மேன் மறியா
உழைபொருதென் னுள்ளங் கவரா—மழைபோல்
தருநெடுங்கைச் சென்னி தமிழ்நா டனையார்
கருநெடுங்கண் போலுங் கயல்”.

பொருள் : மழையைப் போலக் கொடுக்கவல்ல பெருமையுடைய கையினையுடைய சோழனுடைய தமிழ் நாட்டை ஒப்பாருடைய கருமைநிறமும் நீட்டமும் உடைய கண்போலும் கயலும், சங்கொடு மாறுபட்டு

வளர்ந்து, நீர்க்குமிழிமேலே மீண்டும் மாறுபடும், என்னுள்ளத்தைக் கொள்ளை கொள்ள மாட்டா என்றதனாலே, கண்ணும், காதிலணிந்துள்ள குழையோடு சேர்ந்து வளர்ந்து குமிழுக்குமேலே தாவுவது போன்று மானின் விழியோடு பகைத்து என்னுள்ளத்தைக் கவருமெனப்புலப்படுமாறு காண்க.

கயல்மேற்செல்லுங்கால்:- குமிழ்—நீர்க்குமிழி, குழை—சங்கு, உழை—பக்கம், கவர்தல்—கொள்ளுதல்.

கண்ணின் மேற்செல்லுங்கால் :- குழை—மகரக் குழை எனும் காதணி, நீள்தல்—வார்தல், குமிழ்—மூக்கு. மறிதல்—தாவுதல், உழை—மான், பொருதல்—பகைத்தல். சென்னி—சோழன்.

## 32. ஏதுவுவமை

இக்காரணத்தினால் இதனை இஃது ஒக்கும் என்று காரணம் புலப்படக் கூறுவது ஏது உவமை ஆகும்.

"வாளரவின் செம்மணியும் வன்னியிளம் பாசிலையும்
நாளிளைய திங்க ணகைநிலவும் – நீளொளியால்
தேனுலவு பூங்கொன்றைத் தேவர்கோன் செஞ்சடை மேல்
வானுலவு விற்போல் வரும்".

பொருள் : ஒளியுடைய பாம்பினுடைய உச்சியில் உண்டாகிய மணியானது செந்நிற வொளியை மிகுத்தலானும், வன்னிமரத்தின் இளைய இலை தன்னுடைய பசுமைநிறத்தை மிகுத்தலானும், இளம் பிறைத் திங்களானது தன்னுடைய வெண்ணிறவொளியை மிகுத்தலானும், தேன் மிக்கு விளங்கும் பொலிவையுடைய கொன்றைப்பூ தன்னுடைய பொற்கென்ற நிறத்தை மிகுத்தலானும் தேவர்தலைவனாகிய முக்கட்கடவுளுடைய செஞ்சடையானது வானவிற் போன்று தோன்றும்.

இங்கே வானவில், உபமானம். சிவன் சடை உபமேயம்.

### சில செய்திகள்

உவமையை விரித்த நூற்பாக்களெல்லாம் ஒன்றாக்கிக் கூறாது இரண்டாக்கிக் கூறியது என்னவெனின், முற்கூறிய நூற்பாவில் சொல்லப் பட்டன "சொல்லின் முடிவினப்பொருள் முடித்தல்" என்னுந் தந்திர உத்தியான் இவை "எதிரது நோக்கம்" என்னுந் தந்திரவுத்தியாகலான் இரண்டாகக் கூறினாரென்பது.

கடந்த நூற்பாவில் சொல்லப்பட்ட விரியுவமை முதலியன தத்தம் பெயரினாலேயே தமது இலக்கணம் விளங்குமாறு நின்றதனால், "சொல்லின் முடிவில் அப் பொருள் முடித்தல் என்னும் தந்திரவுத்தியன" வென்றும், இந்நூற்பாவில் வந்த அற்புதவுவமை முதலியன எதிரது போற்றல் என்னும் உத்தியால் இனிமேல் வருகிற அவ் வணிகளின் இலக்கணத்தை நோக்கிக் கூறப்பட்டனவாதலால் 'எதிரது போற்றலென்னுந் தந்திரவுத்தியன 'என்றுங்' கூறினார்.

### உவம வழுவமைதி

32. மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும்
பால்மாறு படுதலும் பாகுபா டுடைய.

உபமேய அடைக்கு உபமான அடை மிகுமாறு பாடுதலும், உபமேய அடைக்கு உபமான அடைகுறையுமாறு பாடுதலும், இழிந்த உவமையோடு உயர்ந்த பொருளை உவமையாக்கிக் காட்டுதலும், உயர்ந்த உவமையோடு தாழ்ந்த பொருளை உவமையாக்கிக் காட்டுதலும், ஆண்பாற்குப் பெண்பாலுவமையாகலும், பெண்பாற்கு ஆண்பாலுவமையாகலும், ஒருமைப் பாற்குப் பன்மைப்பாலுவமையாகலும், பன்மைப்பாற்கு ஒருமைப்பாலுவமையாகலும் ஆகிய வேறுபாடுடைய.

வேறுபாடென்பது, கல்விச் செறிவில்லாத புலவர் பாடுங்கால் செறிவுடை நன் புலவரால் வேறு படுத்துச் சிறப்பில்லா மையினால் குற்றமெனக் கூறப்படுவதூஉம், அல்லது, நன்புலவராற் சிறப்புடையவென்று கொள்ளு மாறு பாடப்படுவதுஉம் என்க.

அவற்றுள் சிலவற்றிற்கு எடுத்துக்காட்டாகப் பின் வருவனவற்றைக் காண்க :-

"நீலப் புருவங் குனிய விழிமதர்ப்ப
மாலைக் குழல்சூழ்ந்த நின்வதனம்—போலும்
கயல்பாய வாசங் கவருங் களிவண்
டயல்பாய வம்போ ருகம்"

பொருள் : நீல நிறத்தையுடைய புருவமானது வளையக், கண்களிப்படையப் பூமாலையையுடைய கூந்தலால் சூழப்பட்ட நின்னுடைய முகம் போன்றது, கயல்புரள, மதுவையுண்டு களித்த வண்டுகள் மயக்கத் திலேயே பாடிச் சுற்ற மலர்ந்த தாமரை.

இப் பாடலுள், உவமையாகிய முகத்திற் புருவ வளை விற்கு ஒப்பதொரு பொருள், உபமானமாகிய தாமரைக் கண் இருந்து ஒவ்வாமையின், உவமேய அடைக்கு உபமான அடை மிகுந்து குற்றமாயிற்று. எனவே "நீலப் புருவங்குனிய" என்றது பயனின்றி நின்றது.

"நாட்டந் தடுமாறச் செவ்வாய் நலந்திகழத்
தீட்டரிய பாவை திருமுகம்—காட்டுமால்
கெண்டைமீ தாட நறுஞ்சே யிதழ்கிளர
வண்டுசூழ் செந்தா மரை."

பொருள்: மேலே கண் தடுமாறி யுலவச், செவ்விய வாய் அழகுடன் விளங்க, எழுதற்கரிய உருவையுடைய

கொல்லிப்பாவை போன்றாள் கண்டாரால் விரும்பப் படும் முகத்தை ஒத்து நின்றது, மேலே கெண்டை மீன் கள் உலவ, நறுமணம் உடைத்தாய்ச் சிவந்த இதழ் விளங்க, வண்டால் சூழப்பட்ட செந்தாமரை.

உவமேயப் பொருளாகிய தாமரைக்கண் வண்டுக் குழாமிற்கேற்ப வோருவமை உபமானமாகிய முகத்துக் கண் புலப்படுமாறு அமையாமையின், உவமேய அடைக்கு உவமான அடை குறைந்து குற்றமாயின வாறு காண்க. பாடலுள் 'வண்டுசூழ்' என்ற தொடர் வாளா பயனின்றி நின்றதனால் குற்றப்பட்டது.

"மன்னவர்க்கு நாய்போல் வனப்புடையர்
வாள்வயவர்
மின்மினியும் வெஞ்சுடரோன் போல்
விளங்கும்— அன்னப்
பெடைபோலுஞ் சந்திரன் பைந்தடங்கள் போலும்
மிடைமாசொன் றில்லா விசும்பு."

பொருள்: அரசர் மாட்டு நாயிடத்துண்டாகிய நன்றி யறிதலாகிய நற்செய்தியைச் செய்தலால், (மன்னனால் சிறப்புச் செய்வான் வேண்டி அளிக்கப்படும்) வாளினை யடைய வலிய வீரர்கள் நாயை யொப்பார். மின்மினி யும், வெய்ய கதிரவனைப் போல விளங்கும். பெண் அன்னத்தையொக்கும் சந்திரன். குளிர்ச்சி பொருந்திய தடாகங்கள் போலும், நெருங்கியிருக்கப்பட்ட குற்றமில் லாத வானம்.

இப் பாடலுள், 'மன்னவர்க்கு நாய்போல் வனப் படையர் வாள் வயவர்' என்றவிடத்து, மிகவும் தாழ்த்திக் குற்றமுடையதாகப் பொருத்தப்பட்டது உவமை.

'மின்மினியும் வெஞ்சுடரோன் போல் விளங்கும்' என்றவிடத்து மின்மினிக்கு ஒப்பாதல் இல்லா வெஞ் சுடரை உவமித்தலான் உவமை வழுவாயிற்று.

'அன்னப் பெடைபோலுஞ் சந்திரன்' என்றவிடத்து ஆண்பாற்குப் பெண்பாலுவமையாய்க் குற்றமாயிற்று.

'பைந்தடங்கள் போலு, மிடை மாசொன்றில்லா விசும்பு' என்ற விடத்து ஒருமைப் பாலுக்குப் பன்மைப் பாலை உவமை காட்டக் குற்றமாயிற்று. பிறவும் அவ் வாறே காண்க.

அன்றியும், வழுவின்றி வருஞ்செய்யுளை வந்த விடத்துக் காண்க. மிகுதல், குறைதல், தாழ்தல், உயர்தல், பால்மாறுபடுதல் முதலியன குற்றமாயினும் குணம்மிக்க விடத்துக் கொள்க.

உவமவுருபு

33. போல மானப் புரையப் பொருவ
நேரக் கடுப்ப நிகர நிகர்ப்ப
ஏர வேய மலைய வியைய
ஒப்ப வெள்ள வுறழ வேற்ப
அன்ன அனைய அமர ஆங்க
என்ன இகல விழைய வெதிரத்
துணைதூக் காண்டாங்கு மிகுதகை வீழ
இணைசிவண கேழற்றுச் செத்தொடு பிறவு
நவைதீர் பான்மை யுவமைச் சொல்லே.

போல முதல் செத்து இறுதியாகச் சொல்லப்பட்ட முப்பத்தைந்தும் இவை போல்வன பிறவும் குற்றம் நீங்கிய பாகுபாட்டினையுடைய உவமைச் சொற்களாம்.

பாகு பாடுடைய என்ற மிகையினால், போல என்பது 'புலி போலும் வீரன்' எனப் பெயரெச்சமாயும் 'புலி போலப் பாய்ந்தான்' என வினையெச்சமாயும் வரும்; பிறவும் அவ்வாறு வருமாறு காண்க.

பிறவும் என்ற மிகையினால், நாட, நக, நடுங்க நந்த, கள்ள, கருத, காட்ட, மிளிர, ஏய்ப்ப, மருள என்பன போல்வனவும் கொள்க.

இவற்றுள் தொகையாயும், விரியாயும், தொகை விரியாயும் நிற்பனவெல்லாம் கண்டு கொள்க.

தொல்காப்பியர் உவமவியலிலே, உவமையணி ஒன்றே கூறி, அதனுள்ளேயே பல அணிகளை அடக்கினர். வடநூலாருள் 'சித்திர மீமாஞ்சை' என்னும் நூலாசிரியரும் உவமையணி ஒன்றே வேறுபடுத்திக் கூறும் திறத்தால் பலவித அலங்காரங்களாகும் என்பர். இதற்குச் சில உவமானங்களும் காட்டி விளக்குவர்.

சந்திரனைக் கண்டு முகத்தை நினைக்கின்றேன்—
நினைப்பு அணி

முகமே சந்திரன்—உருவகம்

இது முகமா சந்திரனா —ஐயவணி

நின் முகத்தினைச் சந்திரன் எனறு சகோரம்
தொடர்கின்றது—மயக்கவணி

இது சந்திரன்; முகம் அன்று—ஒழிப்பு அணி

இது சந்திரன்—அதிசய அணி

சத்தியமாகச் சந்திரன்—தற்குறிப்பேற்றம்

இவ்வாறு பலவாகக் காட்டுவர்.

இதனால் உவமையே பல அணிகளாகவும் ஆயின என்று கொள்க.

### 3. உருவகவணி

34. உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்து
ஒன்றென மாட்டின:. துருவக மாகும்.

உபமானப் பொருளையும் உபமேயப் பொருளையும் வேறுபாடின்றி ஒன்றென்று எண்ணுமாறு ஒற்றுமைப் படுத்தின், அஃது உருவகமென்னும் அணியாம்.

அஃதாவது, உபமேயத்தில் உவமானத்தை ஏற்றிக் கூறுதல். உபமானம் உபமேயம் இரண்டிற்கும் பேதம் தோன்றச் சொல்லப்டுவது 'உவமையணி' ஆகும்.

## உருவக வகை

35. தொகையே விரியே தொகைவிரி யெனாஅ
இயைபே யியைபிலி வியநிலை யெனாஅச்
சிறப்பே விருபகஞ் சமாதான மெனாஅ
உருவக மேக மநேகாங்க மெனாஅ
முற்றே யவயவ மவயவி யெனாஅச்
சொற்றவைம் மூன்று மற்றதன் விரியே.

மேற்கூறிய உருவகவணி, (1) தொகையுருவகம், (2) விரியுருவகம், (3) தொகைவிரியுருவகம், (4) இயைபுரு வகம், (5) இயைபிலுருவகம், (6) வியநிலை யுருவகம், (7) சிறப்புருவகம், (8) விருபக வுருவகம், (9) சமாதானவுரு வகம், (10) உருவகவுருவகம், (11)ஏகாங்க வுருவகம், (12) அனேகாங்க வுருவகம், (13) முற்றுருவகம், (14) அவயவ வுருவகம், (15) அவயவி யுருவகம் எனக் கூறப்பட்ட பதினைந்து பாகுபாடுடைய தாகும்.

தொகை முதலிய எல்லாவற்றினோடும் உருவகம் என்னுஞ் சொல்லையும், ஏகம் என்பதனோடு உருவகமே யன்றி அங்கமென்னுஞ் சொல்லையும் கூட்டி உரைத்துக் காண்க. இவையெல்லாம் சொல்லால் முடியும் இலக் கணத்தை யுடையன.

## 1. தொகை யுருவகம்

'ஆகிய' 'ஆக' வென்னும் தொடர்புண்டாக்குஞ் சொல் ஆண்டு வாராது, பின் வருவித்துப் பொருள் காணுமாறு தொகுத்துக் கூறுவது தொகை உருவகம் ஆகும்.

"அங்கை மலரு மடித்தளிருங் கண்வண்டும்
கொங்கை முகிழுங் குழற்காரும்—தாங்கியதோர்
மாதர்க் கொடியுளதா னண்பா! வதற்கெழுந்த
காதற் குளதோ கரை."

பொருள்: அழகிய கையாகிய மலரினையும், அடியாகிய தளிரினையும், கண்ணாகிய வண்டினையும், முலையாகிய அரும்பினையும், கூந்தலாகிய மேகத்தினை யுமுடைத்தாய்ப் பிறர்க்குக் காதல் செய்ய வல்லதாயிருப்ப தொரு கொடியுளது, (நான் நேற்றுக்கண்டது) நண்பனே! அக் கொடிமேலெழுந்த அன்பிற்கு எல்லை உலகத்து உண்டோவெனில் இல்லையென்பதாம்.

## 2. விரியுருவகம்

ஆகிய, ஆக என்னும் தொடர்புண்டாக்குஞ் சொல் ஆண்டு வந்து தெளிவாகப் பொருள் உணர்த்துவது விரி யுருவகம் ஆகும்.

"கொங்கை முகையாக மென்மருங்குல் கொம்பாக
அங்கை மலரா வடிதளிராத்—திங்கள்
அளிநின்ற மூர லணங்கா மெனக்கு
வெளிநின்ற வேனிற் றிரு."

பொருள்: முலை அரும்பாக, மெல்லிய இடை பூங் கொம்பாக, அழகிய கையே மலராக, அடி தளிராக நிலவு போல வெண்ணிற வொளியினையுடைத்தாய், என் மேல் வைத்த இரக்கமுடைத்தாகிய நகையினையுடைத்தாய்

(நேற்றுத்) தோன்றிய அணங்கு போன்றிருந்தாள், எனக்கு இளவேனிற் காலத்தைக் கொண்டு வெளிப்பட்ட திருமகளை யொப்பாள்.

தொகை, விரி என்னும் இவையிரண்டும் எல்லா வற்றிற்கும் பொதுவிலக்கணம். இவ்விரண்டனுள் தொகையை முற்கூறியது, உவமையையுணர்த்தும் நூற்பா வில் தொகையுவமையை முன்வைத்திருப்பதால் அவற் றோடு முரண்படாமை நோக்கி "முந்து மொழிந்தது தலை தடுமாற்றம்" என்னுந் தந்திரவுத்தியான் என்பதாம்.

### 3. தொகைவிரி யுருவகம்

ஆகிய, ஆக என்னும் தொடர்புணர்த்துஞ் சொற்கள் தொக்கும் விரிந்தும் நிற்பது தொகை விரி உருவகம் ஆகும்.

"வையந் தகழியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச்—செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டுவென் சொன்மாலை
இடராழி நீங்கவே யென்று"

பொருள் : உலகமே பெரிய மட்பாண்டமாகவும், பெரிய கடலே அவற்றினுள் இருக்கும் நெய்யாகவும், வெம்மையுடைய கதிரவனே விளக்காகவும்' செந்நிறத்தை யுடைத்தாகிய சக்கரத்தையுடையவனாகிய திருமாலின் அடிக்கே சார்த்துவேன்; சொல்லினால் கட்டப்பட்ட மாலையை, என்னுடைய துன்பமாகிய கடல் வற்றிப் போவதாக என்று.

இங்கே 'இடராழி' என்பது தொகையுருவகம். மற் றையன விரியுருவகம்.

### 4. இயைபுருவகம்

பலபொருளை உருவகஞ் செய்யுமிடத்து, அப்பொருள் தம்முள் இயைபுடையவாக வைத்து உருவகஞ் செய்வது இயைபு உருவகம் ஆகும்.

"செவ்வாய்த் தளிரு நகைமுகிழுங் கண்மலரும்
மைவா ரளக மதுகரமும்—செவ்வி
உடைத்தாந் திருமுகமென் னுள்ளத்து வைத்தார்
துடைத்தாரே யன்றோ துயர்."

சிவந்த வாயாகிய தளிரினையும், பற்களாகிய முல்லை அரும்பினையும், கண்ணாகிய மலரினையும் 'கரியநெடிய' கூந்தலாகிய வண்டினையும், செவ்வியினையுமுடைய கண்டாரால் விரும்பப்படும் தன்மையுடைத்தாகிய முகத்தை யென்னுள்ளத்திலே வைத்தார்; இதனாலே என்னுள்ளத்திலுண்டாகிய துன்பத்தை நீக்குவாரன்றோ, சொல்லுவீராக.

இப்பாடலுள் தளிரும், மொட்டும் மலரும், வண்டும் தம்முள் இயைபுடைமையின் இயைபுருவகமாயிற்று.

### 5. இயைபிலுருவகம்

பலபொருளையும் உருவகஞ் செய்யுங்கால் அப்பொருள் பலவும் தம்முள் இயையாமை வைத்து உருவகஞ் செய்வது இயைபில் உருவகம் ஆகும்.

"தேனக் கலர்கொன்றை பொன்னாகச்
செஞ்சடையே
கூனற் பவளக் கொடியாகத்—தான
மழையாகக் கோடு மதியாகத் தோன்றும்
புழையார் தடக்கைப் பொருப்பு."

பொருள் : தேனைக் கக்கும் கொன்றைமலர் பொன்னாகவும், சிவந்த சடையானது வளைந்து நன்றாகிய

பவளக்கொடியாகவும், மதநீர் மழையாகவும், கொம்பு மதியாகவும் தோன்றுகின்றது; துளையையுடைத்தாகிய பெரிய கையையுடைய யானையாகிய மலை.

தடக்கைப் பொருப்பு—யானைமுகக் கடவுள். இங்கே 'கொன்றை' முதலியவற்றிற்கும் 'பொன்' முதலியவற்றிற்கும் 'இயைபின்மை' உணர்க.

### 6. வியநிலை யுருவகம்

ஒன்றன் உறுப்புப் பலவற்றினுள்ளும் சிலவற்றை உருவகஞ் செய்தும், சிலவற்றை உருவகஞ் செய்யாதும் உரைத்து உறுப்பியை உருவகஞ் செய்து உரைப்பது வியநிலை உருவகம் ஆகும்.

"செவ்வாய் நகையரும்பச் செங்கைத் தளிர்விளங்க
மைவா ணெடுங்கண் மதர்த்துலவச்—செவ்வி
நறவலருஞ் சோலைவாய் நின்றதே நண்பா!
குறவர் மடமகளாங் கொம்பு."

பொருள் : சிவந்த வாய் பற்களின் ஒளியைக் காட்டச், செந்நிறக் கரங்கள் தளிரை விளக்க, வருத்தஞ் செய்யும் வாளாகிய கண்கள் செவ்வரியோடு உலாவப், புதிதாகிய தேனை உடைத்தா யலரும் சோலையிடத்துத் தோன்றிற்று, நண்பனே! குறவர்க்கு இளமையோடு கூடிய மகளாந்தன்மையுடைத்தாயிருப்பதொரு வஞ்சிக் கொம்பு.

இங்கே 'மக'ளென்னும் அவயவி கொம்பாக உருவகிக்கப்பட்டது. 'செங்கை' தளிராக உருவகஞ் செய்யப்பட்டது; பிற வாளா விடப்பெற்றன.

### 7. சிறப்புருவகம்

ஒரு பொருளை யெடுத்து, அதற்குச் சிறந்த அடைமொழிகளை உருவகஞ் செய்து, அவற்றாலே உருவகமாக்கி யுரைப்பது சிறப்பு உருவகம் ஆகும்.

"விரிகடல்சூழ் மேதினி நான்முகன்மீ கானாச்
சுரநதிபா யுச்சி தொடுத்த—அரிதிருத்தாள்
கூம்பாக வெப்பொருளுங் கொண்ட பெருநாவாய்
ஆம்பொலிவிற் றாயினதா லின்று."

பொருள் : பரந்த கடலால் சூழப்பட்ட உலகமானது, நான்முகன் மாலுமியாகவும், தெய்வ கங்கை நதியானது பாயாகவும், அப்பாயை யுச்சியிலே - யுடைத்தாகிய திருமால் மேல்நோக்கியெடுத்த சிறப்புப் பொருந்திய திருவடி கூம்பாகவும், பல வகைப்பட்ட பொருள்களையு முடைத்தாய்ப் பெரிதாகிய அழகோடு கூடிய கப்பல் ஆகியது.

இப் பாடலுள், நான்முகன் மாலுமியாகவும், தெய்வ கங்கைப் பாயாகவும், மால்திருத்தாள் கூம்பாகவும் உருவகஞ் செய்யப் புவி கப்பலாயினமையின் சிறப்புருவகமாயிற்று.

இங்கே உலகத்தின் சிறப்புக்களாகிய நான்முகன் முதலியன உருவகிக்கப்பட்டமை காரணமாக அப்புவி யுலகம் கப்பலாக உருவகஞ் செய்யப்பட்டது.

## 8. விரூபகவுருவகம்

ஒரு பொருட்குப் பொருந்தாத தன்மை பலவும் கூட்டி உருவகஞ் செய்வது விரூபக உருவகம் ஆகும்.

"தண்மதிக்குத் தோலாது தாழ்தடத்து வைகாது
முண்மருவுந் தாண்மேல்முகிழாது—நண்ணி
இருபொழுதுஞ் செவ்வி யியல்பாய் மலரும்
அரிவை வதனாம் புயம்."

பொருள் : தட்பம் பொருந்திய மதியின் தொழிற்குக் கெடாது, ஆழமான தடாகத்திற்றங்காது, முள்ளையுடைத் தாகிய தாளின் மீது மலராது, காலையும் மாலையும்

சேர்ந்து செவ்வியையுடைத்தாய் மலர்ந்து நிற்கும், என் காதலியின் முகமாகிய தாமரை.

### 9. சமாதான வுருவகம்

ஒரு பொருளை நன்றாக உருவகஞ் செய்து, அதனையே தீங்கு பயப்பதாகக் கூறி, அத்தீங்கும் அதனாலே வருகின்றதன்று என்பதற்குப் பிறிதோர் காரணமுங் கூறுவது, சமாதான உருவகம்.

"கைகாந்தள் வாய்குமுதம் கண்ணெய்தல்
காரிகையீர்,
மெய்வார் தளிர்கொங்கை மென்கோங்கம்—
இவ்வனைத்தும்
வன்மைசேர்ந் தாவி வருத்துவது மாதவமொன்
றின்மையே யன்றோ வெமக்கு."

பொருள் : அழகிய பெண்ணே! உம்முடைய காந்தள் மலராகிய கையும், குமுதமாகிய வாயும், நெய்தல் மலராகிய கண்ணும், நீண்ட தளிராகிய மெய்யும், மென்மைத் தன்மை வாய்ந்த கோங்கரும்பாகிய முலையுமென்று சொல்லப்பட்டன நும்முடைய அவயவமாகினும் அவையனைத்தும் தன்மை திரிந்து வன்கண்மையைப் பொருந்தி எம்முடைய உயிரை வருத்தஞ் செய்யும்; இது முற்காலத்தில் யாஞ் செய்த தீவினைப் பயன் இக்காலத்து எமக்குப் பயத்தலாலல்லது நும்மேல் தவறுண்டோ?

இங்கே கை வாய் முதலியன 'காந்தள்', 'குமுதம்' முதலியனவாக உருவகஞ் செய்யப் பெற்றன. இவ்வனைத்தும் வன்மை சேர்ந்து ஆவி வருத்துவது எனத் தீங்கு கூறப் பெற்றது. பின் 'மாதவம் ஒன்று இன்மையே' எனச் சமாதானம் செய்தவாறும் காணலாம்.

### 10. உருவக வுருவகம்

ஒன்றனை முதலில் ஒருவகையாக வுருவகஞ் செய்து, அதனைப் பெயர்த்தும் பிறிதொருவகையாக உருவகஞ் செய்வது உருவக உருவகம்.

"கன்னிதன் கொங்கைக் குவடாங் கடாக்களிற்றைப்
பொன்னெடுந்தோட் குன்றே புனைகந்தா—
மன்னவநின்
ஆகத் தடஞ்சே வகமாக யானணைப்பல்
சோகித் தருளேற் றுவண்டு."

பொருள் : தலைவனே! நீ அன்பு செய்த கன்னி யுடைய முலையென்னும் மலையாகிய மதக்களிற்றை, நின் பொற் கலனணிந்த பெரிய தோளாகிய குன்றமே கட்டுத் தரியாகவும், மார்பாகிய பரந்த இடமே கூடமாக வும், யான் சேர்த்துவன்; நீ அழகழிந்து வருந்தாது இருப் பாயாக.

இப் பாடலுள், கொங்கையைக் குவடாக உருவகம் செய்து அதனையே மீண்டும் களிறாக உருவகம்செய்த வாறு காண்க. பிறவும் அங்ஙனம் உருவகம் செய்யப் பட்டவாறும் காண்க.

### 11. ஏகாங்க வுருவகம்

ஒரு பொருளினது உறுப்புக்கள் பலவற்றுள்ளும் ஒருறுப்பினையே உருவகஞ் செய்து, ஒழிந்த உறுப்புக் களை வாளாவே கூறுவது ஏகாங்க உருவகம்.

"காதலனைத் தாவென் றுலவுங் கருநெடுங்கண்
ஏதிலனால் யாதென்னு மின்மொழித்தேன்—மாதர்
மருண்ட மனமகிழ்ச்சி வாண்முகத்து வந்த
இரண்டினுக்கு மென்செய்கோ யான்."

பொருள் : மனமே! எமக்கொரு கணவனைத் தருவாயாக வென்பது போன்றிருந்தது, காதின் எல்லை வரை உலவுகின்ற கரிய நெடிய கண்கள்; அயலானாற் பயனில்லை யென்பது போன்றிருந்தது இனிய தேனாகிய மொழி; மாதருடைய, கண்டாரை மயக்கஞ் செய்யும் உள்ளக் களிப்பைக் கொடுக்கின்ற ஒளியுடைய முகத்திலே தோன்றிய இவ்விரண்டினுக்கும் யான் என்ன செய்யக் கடவேன் ?

இங்கே 'மொழி' என்னும் உறுப்பு மட்டும் உருவகம் செய்யப்பட்டது.

## 12. அநேகாங்க வுருவகம்

அதாவது, ஒரு பொருளின் உறுப்புக்கள் அனைத்தையும் உருவகஞ் செய்து உரைப்பது. அநேகாங்கம்—பல உறுப்புகள்.

"கைத்தளிராற் கொங்கை முகிழ்தாங்கிக் கண்ணென்னு
மைத்தடஞ்சேல் மைந்தர் மனங்கலங்க— வைத்ததோர்
மின்னுளதான் மேக மிசையுளதான் மற்றதுவும்
என்னுளதா நண்பா வினி."

பொருள் : கையாகிய தளிரினாலே முலையாகிய மொட்டினைத் தாங்குகின்ற தன்மையையுடைத்தாகவும், கண்ணெனப்பட்ட கரிதாய்க் குளிர்ந்த சேல்களாலே ஆடவர் உள்ளங்களை நெகிழச் செய்யும் தன்மையை யுடைத்தாகவும், கறுத்த மேகத்தைச் சுமந்துகொண்டு நிற்பதாகவும், ஒரு மின் தோன்றிப் பூமிக் கண்ணே நிற்குமாயின், அது நண்பனே ! என் உள்ளத்ததுவேயாம்.

இங்கே கை முதலிய பல உறுப்புகள் உருவகம் செய்யப்பட்டன.

### 13. முற்றுருவகம்

சினை உறுப்புக்களையும் முதல் உறுப்பினையும் அவ்வவற்றிற்கு ஏற்ற இடத்தோடும், பிறவற்றோடும் முற்ற உருவகஞ் செய்து உரைப்பது முற்று உருவகம்.

''விழியே களிவண்டு மென்னகையே தாது
மொழியே முருகுலாந் தேறல்—பொழிகின்ற
தேமருவு கோதைத் தெரிவை திருமுகமே
தாமரையென் னுள்ளத் தடத்து''

பொருள் : தேன் பொருந்திய கூந்தலையுடைய தெரிவையின் கண்டாரால் விரும்பப்படும் முகமே தாமரை; விழிகளே களித்துப் பாடாநின்ற வண்டு; மென்மைத்தாகிய நகையே தாது; சொல்லே நறுமணம் உலாவுகின்ற மது; என்னுள்ளமாகிய தடத்து. இங்கே அவயவியாகிய முகம் 'தாமரை' யாகவும், அதன் அவயங்களாகிய கண் முதலியன 'வண்டு' முதலியனவாகவும் உருவகம் செய்யப்பட்டன.

### 14. அவயவவுருவகம்

உறுப்புகளை உருவகஞ்செய்து, உறுப்பியை வாளாவே கூறுவது அவயவ உருவகம் ஆம்

''புருவச் சிலைகுனித்துக் கண்ணம்பெ னுள்ளத்
துருவத் துரந்தா ரொருவர்—அருவி
பொருங்கற் சிலம்பிற் புனையல்குற் றேர்மேல்
மருங்குற் கொடிநுடங்க வந்து.''

பொருள் : அணி செய்யப்பட்ட அல்குலாகிய தேரின்மீது ஏறி, மருங்குற்கொடி யசைய வந்து, அருவி யலைக்கப்பட்ட மலைக்குன்றிலே தோன்றித் தம்முடைய

புருவமாகிய வில்லை வளைத்துக், கண்ணாகிய அம்பினாலே என்னுள்ளத்திலே உருவிப் போகுமாறு ஒருவர் எய்தார்; இதற்குச் செய்யக் கடவது என் ? கூறுவாயாக.

இங்கே 'ஒருவர்' என்னும் அவயவி வாளாவிடப் பட்டது. 'புருவம்' முதலிய அவயவங்கள் வில் முதலியவாக உருவகம் செய்யப்பட்டன.

## 15. அவயவியுருவகம்

உறுப்பியை உருவகஞ் செய்து, உறுப்புக்களை வாளாவே கூறுவது அவயவி உருவகம் ஆம்.

''வார்புருவங் கூத்தாட வாய்மழலை சோர்ந்தசைய
வேரரும்பச் சேந்து விழிமதர்ப்ப—மூரல்
அளிக்குந் தெரிவை வதனாம் புயத்தால்
களிக்கும் தவமுடையேன் கண்.''

பொருள் : மகளிருடைய புருவம் அசைய, வாயிற் சொல்லானது உருத் தெரியாது அழிந்து தளரக், குறுவியர்ப்பை யுடைத்தாக விழியானது சிவந்து செருக்குற, முறுவலிப்பதொரு தாமரையாகிய முகத்தினாலே களிக்கும் தன்மையைப் பெற்றது. முற்காலத்தில் யான் செய்த நல்வினைப் பயனால், எனது கண்.

அவயவிவுருவகத்தினை 'உறுப்பியுருவக' மெனவழங்குதலுமுண்டு ஈண்டு உறுப்பியாகிய முகத்தை மட்டுமே தாமரையாக வுருவகஞ் செய்து, புருவம், மொழி, விழி, முறுவல் என்னும் அதன் உறுப்புக்களை உருவகஞ் செய்யாதொழிந்தமை காண்க.

### இதுவும் அது

(உருவக வகைகளின் தொடர்ச்சி)

36. உவமை யேது வேற்றுமை விலக்கே
அவநுதி சிலேடையென் றவற்றொடும் வருமே.

இந் நூற்பாவால் உருவகவணி பிறவணிகளோடும் கூடிவருமாறு உணர்த்துகின்றார்.

உருவகம்- உவமையணி, ஏதுவணி, வேற்றுமையணி, விலக்கணி, அவநுதியணி, சிலேடையணி என்னும் ஆறு அணிகளோடும் கூடியும் வரும்.

## 16. உவமை வுருவகம்

உவமை காட்டி உருவகஞ் செய்வது, உவமை உருவகம் ஆகும்.

''மதுமகிழ்ந்த மாதர் வதன மதியம்
உதய மதியமே யொக்கும்—மதிதளர்வேன்
வெம்மை தணிய மதராக மேமிகுக்கும்
செம்மை யொளியாற் றிகழ்ந்து.''

பொருள் : மதுவுண்டு களித்த மடவாருடைய முக மதியம், விளங்கக் காட்டும் முழுமதியம் போன்றது; அறிவழியுந்தன்மையை யுடையேனுடைய ஆற்றல் அழியக் களிப்போடு கூடிய அன்பினைப் பெரிதும் புலப் படுத்தித் தோன்றுகின்ற செம்மையான நிறத்தினாலே அழகு பெற்று.

இப்பாடலுள் முக்கியப் பொருளாகிய உபமேயத் தையும் குணப்பொருளாகிய உபமானத்தையும் ஒப்புமை காட்டினமையான், உவமையுருவகம் ஆயிற்று.

'வதன மதியம்' என்னும் உருவகம், உதயமதியமே ஒக்கும்' என உவமையோடு கூடி வந்தது.

## 17. ஏது வுருவகம்

காரணத்தோடு கூடிவரும் உருவகம் ஏது உருவகம் ஆகும்.

"மாற்றத்தாற் கிள்ளை நடையான் மடவன்னம்
தோற்றத்தாற் றண்ணென் சுடர்விளக்கம்—
போற்றும்
இயலான் மயிலெம்மை யிந்நீர்மை யாக்கும்
மயலார் மதர்நெடுங்கண் மான்."

பொருள் : நண்பனே! எம்மை இப்படித் தாழச் செய்த நெடியதாய்ச் சிவந்து, காதலைக் கொடுக்கின்ற கண்களை உடைமையான் மான் போன்றாள்; மொழியினால் கிள்ளையாயினாள்; நடையினால் மடப் பம்பொருந்திய அன்னப்பறவையாயினாள்; மேனியால் குளிர்ந்த உருவத்தையுடைய சுடரின் நிறமாயினாள்; யாவரும் போற்றப்படும் சாயலால் மயிலாயினாள்.

இங்கே கிள்ளை முதலிய உருவகங்கள் மொழி முதலிய காரணத்தோடு கூடிவந்தன.

## 18. வேற்றுமையுருவகம்

வேற்றுமைப்படுத்தி உருவகஞ் செய்வது வேற்றுமை யுருவகம் ஆகும்.

"வையம் புரக்குமான் மன்னவநின் கைக்காரும்
பொய்யின்றி வானிற் பொழிகாரும்—கையாம்
இருகார்க்கு மில்லைப் பருவ மிடிக்கும்
ஒருகார் பருவ முடைத்து."

பொருள்: அரசனே! உன்னுடைய கையாகிய மேகமும், காலம் மாறுபடாது வானத்தின் கண்ணின்று பெய்கின்ற மேகமும், உலகத்தைக் காக்கும் தன்மையினால் ஒக்குமாயினும், கையென்கின்ற இரண்டு மேகத்திற்கும் பருவகாலம் இல்லை; இடியையுடைய ஒரு மேகத்திற்குப் பருவகாலம் உண்டு.

இப்பாடலுள் கொடைக்கைகளையும், கார்மேகத்தையும் புரக்கும் தன்மையால் ஒன்றெனக்கூறி, கையென்

கின்ற மேகத்திற்குப் பருவமில்லை, இடியுடைய மேகத்திற்குப் பருவ முண்டு எனவேறுபடுத்திக் காட்டினமையின் வேற்றுமையுருவகமாயிற்று.

## 19. விலக்கு உருவகம்

உருவகம் செய்த பொருளையே பிறகு மறுத்துக் கூறுதல் விலக்கு உருவகம் ஆகும்.

"வல்லி வதன மதிக்கு மதித்தன்மை
இல்லை யுளதே விரவன்றி — எல்லை
விளக்கு மொளிவளர்த்து வெம்மையா லெம்மைத்
துளக்கு மியல்புளதோ சொல்."

பொருள்: வல்லியாயினாள் முகமாகிய முழுநிலவிற்கு, முழுநிலவினுடைய தன்மை இல்லை போலும்; இருக்குமாயின் பகற் காலத்துத் தன்னிடத்திலே யொளியை மிகுத்து நம்மை வருத்தி அறிவைக் கெடுக்கும் இயல் புடைத்தாமோ? நண்பனே! கூறுவாயாக.

இங்கே வதனம் மதியாக உருவகம் செய்யப்பட்டவாறும், 'இரவன்றி' என்பது முதலவாக விலக்குக் கூறியவாறும் காண்க.

## 20. அவநுதி யுருவகம்

உண்மையை மறுத்து உருவகம் செய்தல் அவநுதி உருவகம் ஆகும். அவநுதி — உண்மையை மறுத்து உரைத்தல்.

"பொங்களக மல்ல புயலே யிதுஇவையும்
கொங்கை யிணையல்ல கோங்கரும்பே—மங்கைநின்
மையரிக்க ணல்ல மதர்வண் டிவையிவையும்
கையல்ல காந்தள் மலர்."

பொருள்: மங்கைப்பருவ நங்காய்! உன்னுடைய மிக்க கருமையுடைய கூந்தலன்று, இது மேகக் கூட்டமே; இரண்டாகிய முலைகளல்ல, இவை, கோங்கு அரும்பு களே; மையிட்ட செந்நிறக் கோடுகள் நிறைந்த கண் களல்ல, இவை, செருக்கினையுடைய வண்டுகளே; கை யல்ல, இவை, காந்தள் மலர்களே.

இப்பாடலுள், உண்மைப் பொருளாகிய கூந்தல் முதலியவற்றை மறுத்து, மேகம் முதலிய ஒப்புமைப் பொருளை உடன்பட்டமையான் 'அவநுதி உருவகம்' ஆயிற்று. எனவே, உபமேயத்தை மறுத்து உபமானத் தால் உருவகஞ்செய்து, இங்ஙனம் உபமேயத்தைச் சிறப் பித்தல் இதனுடைய இலக்கணம் என்பது தெரிய வரு கிறது.

### 21. சிலேடை யுருவகம்

பலபொருள் (இருபொருள்) படுமாறு சொற்பெய்து உருவகஞ் செய்தல் சிலேடை உருவகம் ஆகும்.

"உண்ணெகிழ்ந்த செவ்வித்தாய்ப் பொற்றோட்
டொளிவளரத்
தண்ணளிசூழ்ந் தின்பந் தரமலர்ந்து—
கண்ணெகிழ்ந்து
காதல் கரையிறப்ப வாவி கடவாது
மாதர் வதனாம் புயம்."

பொருள்: உள்ளே கட்டு விடப்பட்ட பொலிவினை யுடைத்தாய் அழகிய இதழ்களின் ஒளிமிகக் குளிர்ச்சி மிகுந்திருக்கின்ற வண்டுகளால் சூழப்பட்டு இனிமை தோன்ற மலர்ந்து மதுவினை ஒழுகவிட்டுக் கண்டார்க்கு ஆசை மிகுதியாகக் குளத்திடத்து நீங்காது தோன்றிய தாமரை எனவும், உள்ளவுருக்கத்தான் மலர்ச்சியுற்ற புதுமையுடைத்தாய்ப், பொன்னாலாகிய தோடுகளின் ஒளி

மிகக் குளிர்ந்த ஆசையைப் பொருந்திக், கண்டார்க்கு ஆசையைக் கொடுக்கும் தோற்றத்தினையுடைத்தாய்க் கண்ணினையுமுடைத்தாய், ஆசையின் எல்லை கடப்ப, உள்ளம் கடவாது இவளுடைய முகமாகிய தாமரை எனவும் பொருள் கொள்க.

இப்பாடலுள், தாமரைக்கும், முகத்திற்குஞ் சிலேடை கூறப்பட்டது. தாமரையின் இயல்பையும் முகத் தின் இயல்பையும் ஒரு சொற்றொடராலேயே சிலேடித்து முகத்தாமரை என்று உருவகஞ் செய்தவாறு காண்க.

புறநடை

இந்நூற்பாவில் மேற்கூறிய உருவகம் உவமை யென் னும் இரண்டு அணிகளுக்கும் புறநடை இலக்கணம் உணர்த்துகிறார்.

37. உருவக முவமை யெனவிரு திறத்தவும்
நிரம்ப வுணர்த்தும் வரம்புதமக் கின்மையிற்
கூறிய நெறியின் வேறுபட வருபவை
தேறினர் கோடல் தெள்ளியோர் கடனே.

உருவகம், உவமை என்னும் இரண்டு திறத்து அணி களும் குறைவின்றி (முற்றும்) உணர்த்தும் இயல்பின வல்லவாகலான், மேற்கூறிய முறைப்படி வேறுபட வருப வற்றையும் யறிந்து அவற்றோடு பொருத்திக்காண்டல் அறிவுடையோர் கடமையாகும்.

இந்நூற்பாவில், உருவகத்தை முற் கூறியது, தொடர்ந்து வருகின்ற இயைபு பற்றியென்க. அவற்றுள் சில வுருவகம் பின் வருமாறு:-

1. ஏது உருவகம்

காரணத்தோடு உருவகப்படுத்தல், ஏது உருவகம் ஆகும்.

"வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை"

பொருள்: ஒருவன் வில்லை ஏராகவுடைய (வீரரா கிய) உழவரோடு பகைத்துக் கொண்டானாயினும், நீதி நூற்களை ஏராக உடைய (எண்ணத்தின் வல்ல புலவ ராகிய) உழவரோடு பகை கொள்ளாதொழிவானாக.

'சொல்' கருவியாகு பெயராய் நீதி நூற்களை உணர்த் தியது. வீரரோடு பகைகொண்டால் கேடு உண்டாகுதல் உறுதியன்று, கேடுவரினும் அவனளவேயாம் எண்ணத் தின் வல்ல புலவரோடு பகை கொண்டால் தனக்கும் தன்னைச் சார்ந்தவருக்கும் கேடு ஒருதலையாக (உறுதி யாக) வருதலின் அவர் பகை கூடாதென்றார்.

மற்றொழிலில் வல்ல வீரர்களையும், எண்ணத்தின் வல்ல புலவர்களையும் 'உழவர்' என உருவகப்படுத்தி னார். மறவர்களுடைய போர்த் தொழிலுக்கு வில்லும், புலவர்களுடைய எண்ணியற்றும் தொழிலுக்கு நீதி நூலும் கருவியாகிய காரணமாக (ஏதுவாக)க் காட்டப்பட்டமை யின் இஃது ஏது உருவகமாயிற்று. (ஈண்டுக் குறிப்பிட்ட கருவி (நீதி நூல்) துணைக்கருவியாகும்.)

### 2. இயைபுருவகம்

இயைபுடையனவாகச் சேர்த்து உருவகஞ் செய்வது இயைபு உருவரும் ஆகும்.

"ஏரி யிரண்டும் சிறகா வெயில்வயிறாக்
காருடைய பீலி கடிகாவா—நீர்வண்ணன்
அத்தியூர் வாயா வணிமயிலே போன்றதே
பொற்றேரான் கச்சிப் பொலிவு."

பொருள் : அழகிய தேரையுடைய சோழனுடைய நகரமாகிய கச்சிமாநகரத்தின் தோற்றமானது, இரண்டு

பக்கங்களிலும் உள்ள இரண்டு ஏரிகளும் இரண்டு சிறகு களாகவும், நடுவில் அமைந்த மதில் வயிறாகவும், நறுமணமுடைய சோலை கருநிறத்தினையுடைய தோகையாகவும், கடல்போன்ற கரியநிறத்தினையுடைய ராகிய திருமாலினது அத்தியூர் வாயாகவும் (அமைந்திருத் தலின்) அழகிய மயிலின் தோற்றத்தையே ஒத்திருக் கின்றது

இப் பாடலுள், சிறகு, வயிறு, தோகை, வாய் ஆக உருவகப்படுத்தப் பட்ட பொருள்கள் யாவும் ஒன்றோ டொன்று இயைபு உடையனவாகையால் இஃது இயைபு உருவகம் ஆயிற்று.

### 3. விலக்கு உருவகம்

ஒப்புமைக்குப் பொருந்தாதவற்றை விலக்கி உருவ கஞ்செய்வது விலக்கு உருவகம் ஆகும்.

"மலையிற் பயிலா மடமஞ்ஞை வாரி
அலையிற் பிறவா வமுதம்—விலையிட்
டளவாத நித்தில மாராத தேறல்
வளவாண் மதர்நெடுங்கண் மான்."

பொருள் : வளப்பம் பொருந்திய ஒளியுடைய அழகிய நீண்ட கண்களையுடைய மான் போன்ற பெண், மலையில் வாழாத இளமைபொருந்திய மயிலும், கட லினது அலையிலே பிறவாத அமுதமும், விலை இவ்வள வென்று குறித்துச் சொல்லமுடியாத முத்தும், உண்ணாத தேனும் ஆவாள்.

பயிலா—பயிலாத (பழகாத). மடமஞ்ஞை—இள மயில். வாரி—கடல். நித்திலம்—முத்து. தேறல்—தேன். மதர்—அழகு.

இப்பாடலுள், ஒரு பெண்ணை மயில் முதலியனவாக உருவகப் படுத்துமிடத்துச் சிறப்படைகளாகச் சேர்த்த மலையிற் பயிலாமை, அலையிற் பிறவாமை, விலையிட் டளவாமை, அருந்தாமை முதலிய அடை மொழிகள், இவ்வாறு மலையிற் பயிலுதல் முதலியன இல்லாத இவளுக்கு மலையிற் பயிலுதல் முதலிய உடைய மயில் முதலியன உவமையாகா என அவற்றை விலக்கலின் இது விலக்குருவகமாம்.

## 4. சிறப்பு உருவகம்

இல்லாதவற்றையும் இருப்பதாக வைத்துச் சிறப்பித் துக் கூறுவது சிறப்புருவகம் ஆகும்.

"மழலைவாய் நவ்வி மதர்நெடுங்கண் மஞ்ஞை
குழலின் பொறைமெலிந்த கொம்பர்—சுழல்கலவம்
தாங்கிய வன்னந் தடங்கொங்கை யாரமுதம்
தேங்கொள் கமலத் திரு."

தேனைத் தம்மகத்தே நிறையக் கொண்டிருக்கின்ற செந்தாமரை மலரிலே வீற்றிருக்கின்ற திருமகளைப் போன்ற பெண், மழலைச் சொற்களைப் பேசும் வாயை யுடைய மானும், அழகிய நெடிய கண்களையுடைய மயிலும், கூந்தலின் பாரத்தைச் சுமந்திருத்தலால் மெலி வுற்ற கொம்பும் திரண்ட தோகையையுடைய அன்னமும், பெரிய கொங்கைகளையுடைய அமுதமும் ஆவள்.

நவ்வி—மான். பொறை—சுமை. கலவம்—தோகை கமலத்திரு—திருமகள்.

இப்பாடலுள், ஒரு பெண்ணை நவ்வி முதலியனவாக உருவகம் செய்யுமிடத்து, உருவகஞ்செய்யும் நவ்வி முதலியவற்றிற்கு மற்றை நவ்வி முதலியவற்றிற்கு இல்லாத மழலைவாய் முதலியவற்றைக் கொண்டு சிறப்பித்துக் கூறுதலின் இது சிறப்புருவகமாயிற்று.

## 5. அற்புத உருவகம்

உருவகப்படுத்துமிடத்து வியப்புச் சுவை தோன்றச் சொல்லுவது அற்புத வுருவகம் ஆகும்.

“மன்றற் குழலா ருயிர்மேன் மதன்கடவும்
தென்றற் கரிதடுக்கும் திண்கணையம்—மன்றலரைக்
கங்குற் கடலிற் கரையேற்று நீள்புணையாம்
பொங்குநீர் நாடன் புயம்.”

பொங்கிவருகின்ற நீர் நிறைந்த காவிரியாற்றை யுடைய சோழ நாட்டின் அரசனாகிய சோழனது தோள், நறுமணம் சான்ற கூந்தலையுடைய பெண்களுடைய உயிரின்மீது மன்மதன் செலுத்துகின்ற தென்றற் காற்றாகிய யானையைத் தடுக்கும் யானைத்தூணாம்; புணர்ச்சிக்குரிய (இளமை பொருந்திய) அம் மாதர்களை இரவாகிய கடலினின்றும் கரை ஏற்றுதற்குரிய தெப்பமாம். மன்றல்—நறுநாற்றம். கரி—யானை. கணையம்—யானைத்தூண். புணை—தெப்பம். மன்றலர்—கலவிக் குரியமகளிர். புயம்—தோள்.

இப்பாடலுள், சோழனுடைய தோளைக்கணையமும், புணையுமாக உருவகப் படுத்துங்கால் வியப்புச் சுவை தோன்றக் கூறப்படுதலின் இஃது அற்புத வுருவகமாம்.

இதுபோன்று வருவனவற்றையெல்லாம் உருவகத்தின் பாற் சேர்த்துக் கொண்டு உணர்க.

### உவமை அணியின் புறநடை

அவற்றுட் சில உவமை வருமாறு :—

### 1. தெரிதரு தேற்ற வுவமை

உவமை பொருந்தாது என்பதை அறிந்தும் (தெளிந்தும்) உவமிப்பது தெரிதருதேற்ற வுவமையாம்.

"நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு."

பொருள் : கல்லாதவரிடத்துப் பொருந்திய செல்வம், கற்றவர்களிடத்துப் பொருந்திய வறுமையினும் துன்பம் தரத்தக்கதாம்.

கல்லாதவரிடத்து இருக்கும் செல்வம் அவரைக் கெடுக்கும்; கற்றவர்களிடத்து இருக்கும் வறுமை அவரைக் கெடுக்காது; ஆகையினால், கல்லாரிடத்துச் செல்வத்திற்குக் கற்றாரிடத்து வறுமை உவமை கூறத் தக்கதன்று என்பது தெரியக்கிடக்கின்றது.

இப்பாடலுள், கல்லாரிடத்துச் செல்வத்திற்குக் கற்றாரிடத்து வறுமை உவமை கூறத்தக்கது அன்று என்பது தெளிந்து கூறப்படுதலின் இது, தெரிதரு தேற்றவுவமையாம்.

## 2. பலவயிற் போலி யுவமை

ஒரு பொருளுக்கு (உபமேயத்திற்கு) பல (இரண்டு) உபமானங்களைக் கூறுவது பல வயிற் போலி யுவமை ஆகும்.

"அடிநோக்கி னாழ்கடல் வண்ண னவன்றன்
படிநோக்கிற் பைங்கொன்றைத் தாரான்—
முடிநோக்கித்
தேர்வளவ னாகத் தெளிந்தேன்றன் சென்னிமேல்
ஆரலங்க றோன்றியது கண்டு."

பொருள் : (அவனது) அடியை நோக்கினால் ஆழ் கடலினது நிறத்தினையுடைய திருமாலாகத் தோன்று கின்றான்; வடிவத்தை நோக்கினால் பசுங்கொன்றைப் பூமாலையை அணிந்த சிவனாகத் தோன்றுகின்றான்; (இவ்வாறு பலவாறாகத் தோன்றும் இவனை இன்னா

னெனத் தெளிதல் எவ்வாறெனவெண்ணி) அவனது முடியை நோக்கி முடியின்மேல் ஆத்திப் பூமாலை இருத்தலைக் கண்டு தேர்ப்படையையுடைய சோழன் என்று தெளிந்தேன்.

இப்பாடலுள், சோழனாகிய ஒரு உபமேயத்திற்குத் திருமாலும், சிவபிரானுமாகிய இரண்டு உவமைகள் கூறப் பட்டமையின் இது பல வயிற்போலியுவமை யாயிற்று.

### 3. பண்புவமை

வண்ணம், வடிவு முதலிய பண்புகள் பொருந்துமாறு உவமித்துக் காட்டல் பண்புவமை ஆகும்.

"கருங்கால் வேங்கை வீயுறு துறுகல்
இரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை
எல்லி வருநர் களவிற்கு
நல்லை யல்லை நெடுவெண்ணிலேவே."

பொருள் : பரந்து எரிக்கும் வெண்மையாகிய நிலவே! கருமைநிறமுடைய அடியையுடைய வேங்கை மரத்தினது மலர்கள் பரவப்பெற்ற வன்மை பொருந்திய கல்லானது பெரிய புலியினது குட்டியைப் போலத் தோன்றுங் காட்டின் வழியாக இராப்பொழுதில் (தனியே) வருபவராகிய [என்னுடைய] தலைவருடைய களவொழுக் கத்திற்கு நீ நன்மை செய்வாய் அல்லை.

வீ—மலர். துறுகல்—வலியகல் (பொற்றைக்கல்) குருளை—குட்டி, எல்லி—இரவு. வருநர்—வருகின்றவ ராகிய தலைவர், களவிற்கு—களவொழுக்கத்திற்கு.

இப் பாடலுள், வேங்கை மரத்தினது மலர்கள் பரவ லாக விழுந்துகிடக்கப்பட்டகல், புலிக்குட்டிக்கு உவமை யாகக் கூறப்பட்டது.

வேங்கை மலர் பரவப்பெற்ற கல்லின் நிறமும் வடிவும் புலிக்குட்டியின் நிறத்திற்கும், வடிவிற்கும் ஒப்புமையாகக் கூறப்பட்டமையின் இது பண்புவமையாம். வடிவமும் பண்பாகும் என்பது தொல்காப்பியர் கருத்து.

### 4. ஒப்புமை உவமை

முதலில் ஒருவமை காட்டி, அவ்வுவமையைப் பிறிதொன்றற்கும் உவமையாக்கிக் காட்டல் ஒப்புமை உவமை யாகும்.

"முத்துக்கோத் தன்ன முறுவல் முறுவலே
ஒத்தரும்பு முல்லைக் கொடிமருங்குல்—
மற்றதன்மேல்
மின்னளிக்கும் கார்போல் விரைக்கூந்தல்
மெல்லியலாள்
தண்ணளிக்கு முண்டோ தரம்."

பொருள் : முத்துக்களை வரிசையாகக் கோத்தாற் போன்ற பற்களையும், அப்பற்களையே போன்று அரும்புகளை விடும் முல்லைக் கொடியைப் போன்ற இடையினையும், அக் கொடியின்மேல் மின்னலை வீசும் மேகம் போன்ற நறு நாற்றத்தையுடைய கூந்தலையும் உடைய மென்மைத் தன்மையினளாகிய தலைவியின் குளிர்ந்த கருணைக்கும் எல்லை உண்டோ? (இல்லை) முறுவல்—பல். மருங்குல்—இடை. விரை—மணம்.

இப் பாடலுள், 'முத்துக் கோத்தன்ன' என்று முத்துக் களை முறுவலுக்கு (பற்களுக்கு) உவமை கூறி, 'முறுவலே, ஒத்தரும்பு முல்லை' என அம்முறுவலை முல்லை அரும்புகளுக்கு உவமையாகக் கூறலின் இஃது ஒப்புமை உவமையாம்.

## 5. சந்தான வுவமை

இதுகாறும் கூறப்பட்ட உவமைகள் பலவும் இடையீடின்றி ஒன்றோடொன்று தொடர்புடையனவாகப் புணர்க்கப்படுவது சந்தான உவமை யாகும்.

"ஈர்ந்து நிலந்தோயு மிரும்பிடித் தடக்கையிற்
சேர்ந்துடன் செறிந்த குறங்கு குறங்கென
மால்வரை யொழுகிய வாழை வாழைப்
பூவெனப் பொலிந்த வோதி யோதியென
அளிச்சினை வேங்கை நாண்மலர் நாண்மலர்க்
களிச்சுரும் பரற்றுஞ் சுணங்கு சுணங்குபிதிர்ந்
தியாணர்க் கோங்கின விரைமுகை முகையெனப்
பூணகத் தொடுங்கிய வெம்முலை முலையென
வண்டோட்டுப் பெண்ணை வளர்த்த நுங்கின்
செறிநீர் தரும்எ யிற்றின்."

பொருள் : இழுக்கப்பட்டுப் பூமியிலே தோயப் பெற்ற பெண் யானையினது பெரிய துதிக்கை போலத் திரண்டுருண்டு ஒன்றோடொன்று நெருங்கிப் பொருந்திய தொடைகளையும் அந்தத் தொடைகளைப் போலப் பெரிய மலையிலே வரிசையாகப் பொருந்தின வாழை மரங்கள்; அந்த வாழை மரங்களின் பூவைப் போல அழகுடனமைந்த கூந்தல் முடியையும், அக் கூந்தல் முடியைப் போன்று கரிய குளிர்ந்த கிளைகளையுடைய வேங்கையின் புதிய மலர் (மலர்ந்திருந்தன); அவ்வேங்கையின் புதிய மலர் எனக் கருதிக் களிப்பையுடைய வண்டுகள் (சூழ்ந்துகொண்டு) ஆரவாரிக்கும் தேமலையும், அத் தேமல் பொறியாகப் பரந்தாற் போலக் கோங்க மரத்தினது அழகிய அன்றலர்ந்த மலர்கள் (தோன்றும்); அந்த அரும்பைப்போல (விளங்கும்) அணிகளைத் தன்னிடத்தே கொண்ட கொங்கைகளையும், வளவியமடல்

களையுடைய பனைமரம் அந்தக் கொங்கைகளைப் போல வளர்த்த நுங்கு போன்று இனிமை பொருந்திய நீரைத்தரும் பற்களையும்.''

சந்தான உவமையும், மாலையுவமையும் ஒன்றென்று கூறுவர் ஒரு சாரார். பிறிதொருசாரார் மாலை யுவமை சந்தானவுவமையினின்றும் வேறுபட்டது என்று கூறுவார். அங்ஙனம் கூறுவார் மாலையுவமை ஒன்றோடொன்று தொடர்புடைய பல பொருள்களை ஒரு பொருளுக்கு உவமையாக வைக்கப்படுவதாம் எனவும், ஆனால் சந்தான உவமை என்பது ஒன்றோடொன்று தொடர்புடைய பல பொருள்களை வெவ்வேறு பொருள்களுக்கு உவமையாக வைக்கப்படுவதாம் எனவும் கூறுவர்.

### 6. விலக்குவமை

ஒரு பொருளைப்புலப்படுத்துதற்காக உவமையைக் காட்டிப், பொருள் தோன்றியவளவில் அவ்வுவமையை விலக்குதல் விலக்குவமை யாகும்.

''பாரி பாரி யென்றுபல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே.''

பொருள் : (புலமையினாற்) செம்மை பெற்ற நாவினையுடைய புலவர்கள் 'பாரி பாரி' என்று கூறி (அவனுடைய புகழ்)பலவற்றையும் ஏத்தி (அவன்) ஒருவனையே புகழ்வர். உலகத்தைப் பாதுகாத்தற்குப் 'பாரி' ஒருவன் மட்டும் அல்லன்; மழையும் உண்டு.

இவை போன்று வருவனவற்றையெல்லாம் உவமையின்பாற் சார்த்தியுணர்க. உருவகத்தையும் உவமையையும் ஓரினமாக்கிக் கூறினமையால், உருவகத்திற்குக் கூறிய இலக்கணம் உவமைக்கு ஆதலும், உவமைக்குக்

கூறிய இலக்கணம் உருவகத்திற்கு ஆதலும் உரை. அவ்வாறு வருவனவற்றை உய்த்துணர்க.

இப் பாடலுள், பாரி வள்ளலுக்கு மேகத்தை உவமை கூறுதல் புலவர்க்குக் கருத்தல்ல வென்பதைத் தோன்றச் செய்து உவமையை விலக்குதலால் இது விலக்குவமையாகும். இதில் உபமேயமாகிய பாரியை ஒருபுடை விலக்கி உபமானமாகிய மாரியை உடன் நிறுத்தினமையால், விலக்குவமையாயிற்று எனக் கொள்ளினும் கொள்க.

## 4. தீவக அணி

தீவகவணி என்பது (தீபகம்—தீவகம்—விளக்கு) ஓரிடத்தில் வைக்கப்பட்ட விளக்கானது, பலவிடங்களுக்கும் சென்று பொருள்களை விளக்குதல்(காட்டுதல்) போல, இதுவும் (சொல்லும்) ஓரிடத்து நின்று பலவிடங்களினும் சென்று பொருள்களை விளக்குவது ஆகும்.

38. குணந்தொழில் சாதி பொருள்குறித் தொருசொல்
ஒருவயி னின்றும் பலவயிற் பொருடரின்
தீவகஞ் செய்யுள் மூவிடத் தியலும்.

பொருள் : குணம், தொழில், சாதி, பொருள் ஆகிய நான்கனுள் யாதானும் ஒன்றைக் குறித்து ஒரு சொல் ஓரிடத்து நின்று, செய்யுளில் பலவிடத்து நின்ற சொற்களோடு பொருந்திப் பொருள் விளைப்பது தீவகமென்னும் அணியாம். அது முதனிலைத் தீவகம், இடைநிலைத் தீவகம், கடைநிலைத் தீவகம் என மூன்றாகி நடக்கும்.

எனவே, முதனிலை, இடைநிலை, கடைநிலை என்னும் மூன்றையும் குணம், தொழில், சாதி, பொருள் என்னும் நான்கனுடன் கூட்டி யுறழப் பன்னிரண்டாம்.

### 1. முதனிலைக் குணத்தீவகம்

முதற்கண் உள்ள பண்புணர்த்தும் சொல் ஏனைய சொற்களுடனும் சென்று பொருந்தி பொருளுணர்த்துவது முதனிலைக் குணத்தீவகம் ஆகும்.

"சேந்தன வேந்தன் றிருநெடுங்கண் தெவ்வேந்தர்
ஏந்து தடந்தோ ளிழிகுருதி—பாய்ந்து
திசையனைத்தும் வீரச் சிலைபொழிந்த வம்பும்
மிசையனைத்தும் புட்குலமும் வீழ்ந்து."

பொருள் : அரசனது அழகிய நீண்ட கண்கள் (கடுஞ் சினத்தால்) சிவந்தன; (அவை சிவந்த அளவில்) மாற்ற ரசர்களுடைய உயர்ந்த பெரிய தோள்கள் (அம்புகள் பட்டு இரத்தங்குழம்பிச்) சிவந்தன; (அத்தோள்களி லிருந்து) பெருகி வருகின்ற இரத்தம் பாய்தலால் திசைகள் சிவந்தன; (அந்தக் குருதியில் தோய்தலால்) வன்மை யுடைய வில்லினாற் சொரியப்பட்ட அம்புகள் சிவந்தன. அந்த இரத்தம் மேலே வீழ்தலால் பறவைக் கூட்டங்கள் யாவும் சிவந்தன.

இப் பாடலுள், முதலில் உள்ள சேந்தன என்னும் பண்பு, கண், தோள், திசை, அம்பு, பறவைக் கூட்டம் ஆகியவற்றோடும் சேர்ந்து பொருளுணர்த்தினமையால், இது முதனிலைக் குணத் தீவகமாம். சேந்தன என்னுஞ் சொல் வினைச்சொல்லாயினும் அதனால் உணர்த்தும் பொருள் செந்நிறமாகிய பண்பாகலின் அது பண்பெனப் பட்டது. சேந்தன என்னும் சொல்லும் செம்மை என்னும் பண்புப் பெயரினடியாகப் பிறந்த வினைச் சொல்லா தலையும் அறிக.

### 2. முதனிலைத் தொழிற்றீவகம்

முதற்கண் நிற்கும் தொழிலையுணர்த்துஞ் சொல் ஏனைய சொற்களோடும் சென்றியைந்து பொருளை யுணர்த்துவது முதனிலைத் தொழிற் றீவகம் ஆகும்.

"சரியும் புனைசங்குந் தண்டளிர்போல் மேனி
வரியும் தனதடஞ்சூழ் வம்பும்—திருமான
வாரந் தழுவுந் தடந்தோ ளகளங்கன்
கோரந் தொழுத கொடிக்கு".

பொருள்: திருமகள் அமர்ந்துறையும் மேன்மையினை யுடைய முத்துமாலையை அணிந்த பெருமையுடைய தோள்களையுடைய குற்றமில்லாத சோழனுடைய குதிரையைத் தொழுத பூங்கொடியைப் போன்றவளாகிய பெண்ணுக்கு, (கையில்) அணிந்த வளையல்களும் சரிந்தன; தட்பம் பொருந்திய தளிரைப் போன்ற உடலின் அழகும் சரிந்தது; பெரிய முலைகளிற் கட்டிய கச்சும் சரிந்தது.

சோழ அரசன் உலாப்போன காட்சியைக் கண்ட நங்கை ஒருத்தி அவன்பால் தனக்குண்டாகிய வேட்கையை ஆற்றாளாகி உடல்மெலிந்து, கை வளையல் கழன்றுவீழ, உடலின் அழகு குறையக் கச்சுக் கட்டவிழ நின்றனள் என்பது இப்பாடலின் கருத்து. இப்பாடலுள் முதற்கண் நின்ற சரியும் என்னும் தொழிலுணர்த்துஞ் சொல் வளையல், அழகு, கச்சு ஆகியவற்றுடன் இயைந்து பொருள் புலப்படுத்தினமையான் இது முதனிலைத் தொழிற்றீவகம் ஆயிற்று.

### 3. முதனிலைச் சாதித் தீவகம்

முதற்கண் சாதியையுணர்த்தும் சொல் நின்று, ஏனைய சொற்களோடும் சென்றியைந்து பொருள் புலப்படச் செய்தல் முதனிலைச் சாதித் தீவகம் ஆகும்.

"தென்ற லனங்கன் றுணையாம் சிலகொம்பர்
மன்றற் றலைமகனாம் வான்பொருண்மேற் —
சென்றவர்க்கு
சாற்றவிடுந் தூதாகும் தங்கும் பெரும்புலவி
மாற்ற வருவிருந்து மாம்."

பொருள்: தென்றல் காற்றானது (ஆசையை மிகுத்த லால்) மன்மதனுக்குத் துணையாகும்: சில பூங்கொம்பர் களுக்குத் (தான் வந்து தீண்டியவளவில் அவற்றைத் தழைக்கச் செய்தலால்) மணம் புரிந்து கொண்ட தலைவ னாகும்: சிறந்த பொருளின்மேற் காதல் கொண்டு (தம் முடைய காதலிகளைப் பிரிந்து) சென்ற தலைவர்களுக்கு (அத்தலைவியர்கள் மாட்டுக் காதலைத் தூண்டுதலால் அவர்களால் தம்முடைய வருத்தங்களைச்) சொல்லும்படி அனுப்பப்பட்ட தூதாகும்; (தலைவனிடத்துத் தலைவி யர்க்கு உண்டான பெரிய ஊடலைப் போக்குதலால்) அவ்வூடலைப் போக்க வந்த புதுமகனுமாகும்.

இப்பாடலுள் கொண்டல், கோடை, தென்றல் என் னும் பல்வகையின, காற்றில் ஒன்றாகிய தென்றல் முதற் கண் நின்று, 'துணையாம்' என்பது முதலியவற்றோடு சென்று பொருந்திப் பொருள் புலப்படுத்தியமையால் இது முதனிலைச் சாதித் தீவகம் எனக் கூறப்படுகிறது.

### 4. முதனிலைப் பொருள் தீவகம்

முதலில் நிற்கும் பொருட்பெயர் ஏனைய சொற் களோடும் சென்று பொருந்திப் பொருள்புலப்படுத்துவது முதனிலைப் பொருள் தீவகம் ஆகும்.

"முருகவேள் சூர்மா முதறடிந்தான் வள்ளி
புரிகுழன்மேன் மாலை புனைந்தான்—சரணளித்து
மேலாய வானோர் வியன்சேனை தாங்கினான்
வேலா னிடைகிழித்தான் வெற்பு."

பொருள்: முருகன் சூரபத்மனாகிய மாமரத்தை அடி யோடு சாய்த்தான்; வள்ளியினுடைய சுருண்ட குழலின் கண் மாலையைச் சூட்டினான்; அடைக்கலமாக நின்று மேன்மை மிக்க தேவர்களினுடைய திரண்ட பெருஞ்

சேனையைக் காத்தருளினான்; வேலாயுதத்தினாலே (கிரௌஞ்ச கிரியை) இடையிலே பிளந்தான்.

இப்பாடலுள், முருகவேள் என்னும் பொருட்பெயர் தடிந்தான், புனைந்தான், தாங்கினான், கிழித்தான் என் பனவற்றோடு சென்று பொருந்திப் பொருட்புலப்படுத்தின மையால் இது முதனிலைப் பொருள் தீவகம் ஆயிற்று.

### 5. இடை நிலைக் குணத்தீவகம்

இடையில் நிற்கும் குணப்பொருள் உணர்த்தும் சொல் ஏனையவற்றோடும் சென்றியைந்து பொருள் புலப் படுத்துவது இடைநிலைக் குணத் தீவகம் ஆகும்.

"எடுத்த நிரைகொணா வென்றலுமே வென்றி
வடித்திலங்கு வைவாளை வாங்கத்—துடித்தனவே
தண்ணார மார்புந் தடந்தோளும் வேல்விழியும்
எண்ணாத மன்னர்க்கு இடம்."

பொருள்: குறிப்பிட்ட பசுக்கூட்டங்களைக் கொண்டு வருக என்று (அரசன்) சொன்ன அளவில், (வீரன்) வென்றியைக் கொடுப்பதாகிய வடித்தெடுக்கப் பட்டு விளங்கும் கூர்மை பொருந்திய வாளைக் கையிலே தாங்கி யவனாக, பகையரசர்களுக்குக் குளிர்ச்சி பொருந்திய முத்து மாலையை அணிந்த மார்பும், பெரிய தோள்களும், வேலனைய கண்களும் இடப்புறத்துத் துடித்தன.

இப்பாடலுள், இடையில் நின்ற 'துடித்தன' என்னும் பண்புணர்த்துஞ் சொல் மார்பு, தோள், விழி என்பனவற் றோடும் சென்று பொருந்திப் பொருள் தோற்றுவித்தமை யின் 'இடைநிலைக் குணத்தீவகம்' ஆயிற்று.

### 6. இடைநிலைத் தொழிற் றீவகம்

இடையில் நிற்கும் தொழிலுணர்த்துஞ் சொல் ஏனைய வற்றோடுஞ் சென்றியைந்து பொருள் புலப்படுத்துவது இடைநிலைத் தொழில் தீவகம் ஆகும்.

"எடுக்குஞ் சிலைநின் றெதிர்ந்தவருங் கேளும்
வடுக்கொண் டுரந்துணிய வாளி—தொடுக்கும்
கொடையும் திருவருளுங் கோடாத செங்கோல்
நடையும் பெரும்புலவர் நா."

பொருள்: அரசன் கையில் ஏந்திய வில்லிலே அம்புகள் நிற்றலால், (உடனே அவன்) பகைவர்களும், அவர்களைச் சார்ந்தவர்களும் வடுப்பட்டுத் (தம்முடைய மார்பு) துண்டிக்கப்பட்டனராக (அவ்வளவில்) புலவர்களுடைய நாக்கள் (இவ்வரசனுடைய) ஈதலையும், மேம்பட்ட அருளையும், முறை பிறழாச் செங்கோலினது நடையையும் (பாட்டுகளிலே) தொடுத்துப் புகழ்வனவாயின.

இப்பாடலுள், இடையில் நின்ற தொடுக்கும் என்னும் தொழிலுணர்த்துஞ்சொல், கொடை, அருள், செங்கோலின் நடை என்பவற்றோடு சென்றியைந்து பொருள் புலப்படுத்தியமையால், இஃது 'இடைநிலைத் தொழிற் றீவகம்' ஆயிற்று.

## 7. இடைநிலைச் சாதித் தீவகம்

இடையில் நின்ற சாதியுணர்த்தும் பெயர் ஏனையவற்றோடும் சென்றியைந்து பொருள் புலப்படுத்துவது இடைநிலைச் சாதித் தீவகம் ஆகும்.

"கரமருவு பொற்றொடியாம் காலிற் கழலாம்
பொருவில் புயவலய மாகும்—அரவரைமேல்
நாணா மரற்கு நகைமணிசேர் தாழ்குழையாம்
பூணாம் புனைமாலை யாம்."

பொருள்: பாம்பானது சிவபெருமானுடைய கையிற் பொருந்தும் அழகிய வளையலாகும்; காலிலே பூணும் வீர கண்டையாகும்! ஒப்பில்லாத தோள் வளையாகும்; அரையில் அணியும் அரைஞாணாகும்; ஒளியுடைய

மணிகளால் இழைக்கப் பெற்ற தொங்குகின்ற குண்டலம் எனும் காதணியாகும்; மற்றும் பல அணிகளாகும்; அழகு பொருந்திய மாலையும் ஆகும்.

இப்பாடலின் இடையில் நின்ற அரவு என்னும் பாம்பு களின் ஒரு (பிரிவை) சாதியையுணர்த்தும் பெயர் 'தொடி யாம்' என்பனவற்றோடு சென்று பொருந்திப் பொருள் புலப்படுத்தினமையின் இஃது இடைநிலைச் சாதித் தீவகம் என்னும் பெயர்த்தாயிற்று.

### 8. இடைநிலைப் பொருள் தீவகம்

இடையில் நின்ற பொருளையுணர்த்தும் சொல், ஏனையவற்றோடும் சென்றியைந்து பொருள் புலப்படுத்து வது இடைநிலைப் பொருள் தீவகம் ஆகும்.

"மானமரும் கண்ணாள் மணிவயிற்றில் வந்துதித்தான்
தானவரை யென்றும் தலையழித்தான்—
யானைமுகன்
ஓட்டினான் வெங்கலியை யுள்ளத் தினிதமர்ந்து
வீட்டினா னம்மேல் வினை."

பொருள்: யானைமுகக் கடவுள் (விநாயகன்) மானும் விரும்பும்படியான கண்களையுடைய உமையம்மையினு டைய அழகிய வயிற்றில் வந்து பிறந்தான்; எக் காலத் தும் அசுரர்களுடைய தலைமையை (தலைகளை) அழித் தான்; கொடுமை மிக்க வறுமையைப் போக்கினான்; நம் முடைய உள்ளத்தின் கண்ணே இனிதமர்ந்து நம்மேல் வரும் (கொடு) வினைகளைப் போக்கினான்.

இதனுள், இடையில் நின்ற யானைமுகன் என்னும் பொருளையுணர்த்தும் சொல் உதித்தான் என்பனவற் றோடு சென்றியைந்து பொருள் புலப்படுத்தினமையின், இஃது இடைநிலைப் பொருள் தீவகம் என்னும் பெயர்த் தாயிற்று.

## 9. கடைநிலைக் குணத் தீவகம்

இறுதியில் நிற்கும் குணத்தை உணர்த்தும் சொல், ஏனையவற்றோடு சென்றியைந்து பொருள் புலப்படுத்துவது கடைநிலைக் குணத் தீவகம் ஆகும்.

"ஒருவன் அறிவானு மெல்லாமியா தொன்றும்
ஒருவ னறியா தவனும்—ஒருவன்
குணடனங்கக் குற்ற முளானும் ஒருவன்
கணனடங்கக் கற்றானும் இல்.

பொருள்: ஒருவன் எல்லாம் அறிவானாகவும் உலகின்கண் இல்லை; யாதொன்றும் அறியாதவனும் உலகிலே எவனும் இல்லை; ஒருவன் முழுமையான நற்குணங்களை உடையவனாகவும் உலகில் இல்லை; ஒருவன் முழுக்கக் குற்றமுடையவனாகவும் இல்லை; இவ்வாறே எல்லாத் துறைகளிலும் முழுமையாகக் கற்றிருந்தவன் எனவும் இல்லை.

இங்கே 'இல்' என்னும் குணச்சொல் கடையில் நின்று, முன்னர்ச் சென்று பொருள் விளக்கிற்று.

## 10. கடைநிலைத் தொழில் தீவகம்

இறுதியில் நிற்கும் தொழிலையுணர்த்தும் சொல், ஏனையவற்றோடு சென்றியைந்து பொருள் புலப்படுத்துவது கடைநிலைத் தொழில் தீவகம் ஆகும்.

"துறவுளவாச் சான்றோ ரிளிவரவுந் தூய
பிறவுளவா ஹூன்றுறவா ஹூணும்—பறைகறங்கக்
கொண்டா னிருப்பக் கொடுங்குழையாள்
தெய்வமுமொன்(று)
உண்டாக வைக்கற்பாற் றன்று"

பொருள்: மெய்யுணர்வால் சிறந்த பெரியோர்க்குத் துறவாகிய ஒழுக்கம் உள்ளபொழுதே இழிந்ததாகிய (கூடா) ஒழுக்கமும், தூய்மையான வேறு உணவுகள் பல உள்ள பொழுதே ஊன் (புலால்) கலந்த உணவும் ஒரு பெண்ணுக்குப் பல இசைக் கருவிகள் ஒலிக்க மணம் புரிந்து கொண்ட (அவளுக்குரிய) கணவன் இருக்கும் பொழுதே வேறொரு கடவுளும் உள்ளதாகக் கொண்டு வைத்தற்குரிய தன்மையது அன்று.

இளிவரவு—இழிவு; அஃது இவ்விடத்து இழிவாகிய ஒழுக்கத்தை உணர்த்திற்று. ஊன்—புலால் உணவு. ஊண்—உணவு. பறை—ஒரு இசைக்கருவி. கறங்கல்—ஒலித்தல். கொடுங்குழையாள்—வளைந்த குழை என்னும் காதணியை யணிந்த பெண்.

இதனுள் இறுதியில் நின்ற வைக்கற்பாற்றன்று என்னும் தொழிலையுணர்த்தும் சொல் இளிவரவு என்பன வற்றோடு சென்றியைந்து பொருள் புலப்படுத்தினமை யால் இது கடைநிலைத் தொழில் தீவகம் என்னும் பெயர்த் தாயிற்று.

## 11. கடைநிலைப் பொருள் தீவகம்

இறுதியில் நிற்கும் பொருளையுணர்த்தும் பெயர், ஏனையவற்றோடும் சென்றியைந்து பொருள் புலப் படுத்துவது கடைநிலைப் பொருள் தீவகம் ஆகும்.

"புறத்தன ஊரன நீரன மாவின்
திறத்தன கொற்சே ரியவே—அறத்தின்
மகனை முறைசெய்தான் மாவஞ்சி யாட்டி
முகனை முறைசெய்த கண்."

பொருள்: (ஆவின் கன்றின்மேல் தேரூர்ந்து கொன்ற வனாகிய தன்) மகனை (அரசர்க்குரிய) அறத்தின்படி

கொன்றவனாகிய மனுநீதிச் சோழனுடைய மேன்மை பொருந்திய வஞ்சி நாட்டிலே வாழ்பவளாகிய ஒரு பெண்ணினுடைய முகத்தை அணி செய்த கண்கள், வெளியிடத்துள்ள மான்களினுடைய கண்களைப் போன்றனவும், நாட்டின் கண்ணுள்ள அம்புகளைப் போன்றனவும், நீரிலுள்ள தாமரை மலர்களைப் போன்றனவும், மாவடுக்களைப் போன்றனவும், கொல்லன் சேரியில் செய்யப்படும் வாள்களைப் போன்றனவுமாயிருக்கின்றன.

புறத்தன—மான். ஊரன—அம்பு. நீரன—தாமரை. மாவின்திறத்தன—மாவடு. கொற்சேரிய—வாள். நீரன—குவளை மலருமாம்.

இதனுள், இறுதிக்கண் நின்ற கண் என்னும் பொருட் பெயர் புறத்தன என்பனவற்றோடு சென்றியைந்து பொருள் புலப்படுத்தினமையால் இது கடைநிலைப் பொருள் தீவகம் என்னும் பெயர்த்தாயிற்று.

அப்படியானால், குணமென்று கூறப்பட்டனவும், தொழிலாய்க் காலத்துடன் பொருந்தி நின்றனவேயெனில், அவ்வாறே குணமும் தொழிலும் காலத்தோடு கூடியல்லது வாரா. தொழிலென்பது பொருளினது இயக்கம். குணமென்பது அப்பொருளுக்குப் பண்பாய்த் தனக்கு வேறு பொருளின்றிப் பொருளை நீங்காது நிற்பது. அது முன்னரேயே உணர்த்தப்பட்டது.

### 12. கடைநிலைச் சாதித் தீவகம்

இறுதியில் நிற்கும் சாதியை உணர்த்தும் ஒரு சொல், ஏனையவற்றோடு சென்றியைந்து பொருள் புலப்படுத்துமாறு அமைவது கடைநிலைச் சாதித் தீவகம் ஆகும்.

இதற்குத் தகுதியான மேற்கோட் செய்யுள் வருமிடத்துக் கண்டு உணர்ந்து கொள்க.

### இதுவும் அது
(உருவக வகை தொடர்ச்சி)

39. அதுவே,
மாலை விருத்தம் ஒருபொருள் சிலேடையென
நால்வகை யானு நடைபெறு மென்ப.

அத் தீவகம் என்னும் அணி பிற அணிகளோடும் கூடி வரும் முறைமையை உணர்த்துகிறது.

மேலே கூறப்பட்ட தீவகம் என்னும் அணி, மாலைத் தீவகம், விருத்த தீவகம், ஒரு பொருள் தீவகம், சிலேடை தீவகம் என்னும் நால்வகை அணிகளோடு கூடியும் வரு மென்று கூறுவர், புலவர்.

#### 1. மாலைத் தீவகம்

ஒரு சொல் எல்லாவற்றோடும் சென்றியைந்து மாலை போன்று தொடர்ந்து வந்து பொருள் புலப்படச் செய் வது மாலைத் தீவகம் ஆகும்.

''மனைக்கு விளக்க மடவார் மடவார்
தமக்குத் தகைசால் புதல்வர்—மனக்கினிய
காதற் புதல்வர்க்குக் கல்வியே கல்விக்கும்
ஓதிற் புகழ்சால் உணர்வு''

பொருள்: குடும்பத்திற்கு (இல்லறத்திற்கு) விளக்கம்) மடப்பத்தினையுடைய பெண்கள் இருத்தல்; அப்பெண் களுக்கு விளக்கம் அழகமைந்த மக்களைப் பெறுதல்; அம்மக்கட்கு விளக்கம் இனிமை சான்ற கல்வியைப் பெறுதல்; அக்கல்விக்கு விளக்கம் மறவாதிருத்தல்.

இப் பாடலுள், 'விளக்கம்' எனும் சொல்லை எல்லா விடத்தும் மாலை போலத் தொடர்புடையதாய்க் கூட்டிக் கொண்டு பொருளுணர்க.

## 2. விருத்த தீவகம்

ஒரு பொருளே நின்று, இரண்டு குணங்களைத் தோற்றுவித்து, சொல்லும் பொருளும் மாறுபட வருதல் விருத்த தீவகம் ஆகும்.

"வரிவண்டு நாணா மதுமல ரம்பாப்
பொருவெஞ் சிலைக்குப் பொலிவும்—பிரிவின்
விளர்க்கு நிறமுடையார் தம்மேன் மெலிவும்
வளர்க்கு மலையா நிலம்"

பொருள்: அழகிய புள்ளிகளைத் தாங்கிய வண்டே நாணாகவும், தேன் நிறைந்த மலரே அம்பாகவும் கொண்டு, காமன் தனித்திருப்பாரைப் பொருகின்ற விருப்பத்தையுடைய வில்லுக்குப் பொலிவினையும், பிரிந்திருக்கும் மகளிர் மேல் பசலை (தேமல்) யுறுதலான் மெலிவினையும் வளர்க்கும் தென்றற் காற்று.

மலையம் + ஆநிலம் — மலையாநிலம். மலையம்—பொதிகை மலை. ஆநிலம்—தென்றல். பொதிகைமலையிலிருந்து வருகின்ற தென்றல்.

இதனுள், மலையாநிலம் என்னும் ஒரு பொருளே வில்லின்கண் பொலிவினையும், பிரிவுற்றார்தம் மேனியின்கண் மெலிவினையும், ஆகிய இரண்டு குணம் செய்தலின் விருத்தம்; எனவே சொல்லும் பொருளும் மாறுபட வருதல் விருத்தம் என்பது பெறப்பட்டது.

## 3. ஒரு பொருள் தீவகம்

பல சொற்கள் நின்று ஒரு பொருளையே தோற்றுவிக்க, ஒரு சொல் தீவகமாக நின்று அப் பல சொல்லோடும் சென்றியைந்து அவ்வொரு பொருளே புலப்படுத்துவது ஒரு பொருள் தீவகம் ஆகும்.

"வியன்ஞாலம் சூழ்திசைக ளெல்லாம் விழுங்கும்
அயலாந் துணைநீத் தகன்றார்—உயிர் பருகும்
விண்கவரும் வேரிப் பொழில்புதைக்கு
மென்மயில்கள்
கண்கவரு மீதெழுந்த கார்".

பொருள்: அகன்ற உலகத்தைச் சூழ்ந்திருக்கின்ற திசைகள் எல்லாவற்றையும் தன்னிடத்து அடக்கும்; வாழ்க்கைத் துணையைப் பிரிந்து அயலார் போலப் போயினார் உயிரை யுண்ணும்; விண்ணை மறைக்கும்; நறு நாற்றம் பொருந்திய சோலையை மூடும்; மென்மைசால் மயில்களின் கண்ணைக் கவரும், உயர வெழுந்த மேகம்.

இதனுள் விழுங்கும், பருகும், கவரும், புதைக்கும் எனவந்த பல சொற்கள் ஒரு பொருளையே உணர்த்தி நிற்க, கார் என்னும் சொல் விழுங்கும் என்பது முதலிய பலவிடங்களிலும் சென்றியைந்து பொருள் புலப் படுத்தினமையால் இஃது ஒரு பொருள் தீவகம் என்னும் இப் பெயர்த் தாயிற்று.

### 4. சிலேடைத் தீவகம்

இரு பொருள் தரும் சொற்களால் அமைந்து, ஒரு சொல்லே தீவகமாக நின்று அச் சொற்களோடு சென்றி யைந்து பொருள் புலப்படுத்துவது சிலேடைத் தீவகம் ஆகும்.

"மான்மருவி வாளரிகள் சேர்ந்து மருண்டுள்ளம்
தான்மருக நீண்ட தகைமையவாம்—கான
வழியு மொருதனிநாம் வைத்தகலு மாதர்
விழியுந் தருமான் மெலிவு."

மான்கள் மருவி, விளங்கித்தோன்றும் சிங்கங்கள் சேர்ந்து, மயங்கிக் கண்டாருள்ளம் அஞ்சும்படி நீண்ட

தன்மையையுடைத்தாய காட்டு வழியும், மயக்கம் பொருந்தி ஒளியுடன் விளங்கும் செவ்வரி பரந்து கண்டார் உள்ளமானது மயங்கித்தடுமாறும்படி பெரிதாய நான் தனியே இருக்கச்செய்துவிட்டுச் சென்ற தலைவி யுடைய கண்ணும், நமக்கு வருத்தத்தைத் தருகின்றன.

இப் பாடலில் வழிக்கும் விழிக்கும் சிலேடை அமைந்துகிடக்கிறது. வழிமேற் சொல்லுங்கால்: மான் மருவி—மான்கள் பொருந்தி. வாள் அரிகள் சேர்ந்து—ஒளியையுடைய சிங்கங்கள் சேர்ந்து. உள்ளம் மருண்டு மருக—மனம் மயங்கி வருந்த. விழிமேற் செல்லுங்கால்—மான் மருவி—மயக்கம் பொருந்தி. வாள்அரிகள்சேர்ந்து—ஒளியையுடைய செவ்வரிகள் சேர்ந்து. உள்ளம் மருண்டு மருக—மனம் மயங்கித் தடுமாற.

இந்நூற்பாவில் (39) வரும் நால்வகையானுமென் கின்ற முற்றும்மையை எச்சவும்மையாக்கிப் பிறவகையில் வருவனவற்றையும் கொள்க. அவை வருமாறு :

### உவமைத் தீவகம்

ஒரு சொல் தீவகமாக நின்று, பல பொருளை உவமை யாகக் கொண்டு, பொருள் புலப்படுத்துவது உவமைத் தீவகம் ஆகும்.

"முன்னம் குடைபோல் முடிநா யகமணிபோல்
மன்னும் திலகம்போல் வாளிரவி—பொன்னகலம்
தங்கு கவுத்துவம்போ லுந்தித் தடமலர்போல்
அங்கண் உலகளந்தாற் காம்."

அழகிய இடத்தினையுடைய உலகங்களை அளந்த திருமாலுக்கு (அங்ஙனம் உலகளந்தபோது) ஒளியுடைய சூரியன் முன்னே குடைபோன்றிருந்தது; பின்பு முடியணி யின் நடுவிலுள்ள தலைமைசான்ற மணி போன்றிருந்தது; பிறகு நெற்றியிலே யணிந்த திலகம் போன்றிருந்தது;

பின்னர் அழகிய மார்பிலே பொருந்திய கவுத்துவ மணி போன்றிருந்தது; பிறகு உந்தித்தடாகத்தில் முளைத் தெழுந்த செந்தாமரை மலர் போல் இருந்தது.

### உருவக தீவகம்

ஒருசொல் தீவகமாக நின்று பலவிடத்தும் சென்றியைந்து உருவகப் பொருளைப் புலப்படுத்துவது உருவக தீவகம் ஆகும்.

"கானற் கயலாம் வயலிற் கமலமாம்
ஏனற் கருவிளையாம் இன்புறவில்—மானாம்
கடத்துமேல் வேடர் கடுஞ்சரமா நீங்கிக்
கடத்துமேல் மெல்லியலாள் கண்."

பொருள் : மனமே! இம் மெல்லியலாளைப் பிரிந்து செல்வோமாயின் இவளது கண் நெய்தல் நிலத்திலே கயல் மீனாய்த் தோன்றியும், முல்லை நிலத்திலே கரு விளை மலராய்த் தோன்றியும், குறிஞ்சி நிலத்திலே மானாய்த் தோன்றியும், பாலைநிலத்திலே வேட்டுவரது கையிலுள்ள கொடிய அம்பாய்த் தோன்றியும், நமது செலவினைத் தடுக்கும்; (ஆகையால்) இவளைப் பிரிந்து போதல் நமக்கு அரிதாகும்.

கானல்—நெய்தல். வயல்—மருதம். ஏனல்—முல்லை. புறவு—குறிஞ்சி. கடம்—பாலை. சரம்—அம்பு.

இப்பாடலுள், கண் என்னும் ஒரு சொல் பலவிடத்தும் சென்றியைந்து பொருள் புலப்படுத்தினமையால் தீவகமாயிற்று. இதனோடு கண்ணைக் கயல் முதலியனவாக உருவகப் படுத்தியமையால் உருவக தீவகம் என்னும் பெயர்த்தாயிற்று.

## 5. பின்வரு நிலையணி

40. முன்வரும் சொல்லும் பொருளும் பலவயிற்
பின்வரும் என்னிற் பின்வரு நிலையே.

ஒரு செய்யுளுள், முன்னர் வந்த சொல்லாவது பொருளாவது, பின்னரும் பலவிடத்தும் ஒரு செய்யுளில் வருமாயின், அது 'பின்வருநிலை' என்னும் அணியாம். (இது மூவகைப் படும்)

### 1. சொற்பின் வருநிலை

முன்வந்த சொல்லே பின்னும் பலவிடத்தும் வந்து பொருள் வேறு உணர்த்துவது சொற்பின் வருநிலை ஆகும்.

"மால்கரி காத்தளித்த மாலுடைய மாலைசூழ்
மால் வரைத்தோ ளாதரித்த மாலையார்—
மாலிருள்சூழ்
மாலையின் மால்கட லார்ப்ப மதன்றொடுக்கு
மாலையின் வாளி மலர்.''

பொருள்: மதத்தால் மயக்கமுற்ற யானையினுடைய துன்பத்தைப் போக்கி அருள்செய்த திருமாலுடைய மாலை சூழப் பட்ட பெரிய மலையைப் போன்ற தோளை விரும்பிய தன்மையுடையார்மேல், மயங்கிய இருட்பொழுது சூழ்ந்த அந்திப் பொழுதில் கருங்கடல் ஒலிக்கக் காமன் இடைவிடாது மலராகிய அம்புகளைத் தொடுப்பான்.

இதனுள், 'மால்' என்னும் முன்வந்த சொல்லே, பின்னும் பலவிடத்தும் வந்து, பொருள் வேறு உணர்த்தின.

"பேர் பரவை பெண்மையினில் பெரும்பரவை
விரும்பல்குல்
ஆர்பரவை அணிதிகழும் மணிமுறுவல் அரும்பரவை
சீர்பரவை யாயினாள் திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை யிடைப்பட்ட என்னாசை எழுபரவை''

என்னும் சேக்கிழாரடிகள் செய்யுளும் இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

## 2. பொருட் பின்வரு நிலையணி

ஒரு பொருளே பின்னும் பின்னும் வருமாறு சொற்கள் அமைந்து வருவது பொருட்பின் வருநிலை அணியாகும்.

"அவிழ்ந்தன தோன்றி யலர்ந்தன காயா
நெகிழ்ந்தன நேர்முகை முல்லை—மகிழ்ந்திதழ்
விண்டன கொன்றை விரிந்த கருவிளை
கொண்டன காந்தள் குலை."

பொருள் : கார்த்திகைப் பூக்கள் மலர்ந்தன; காயாம் பூக்கள் மலர்ந்தன; அழகிய அரும்புகளையுடைய முல்லைகள் மலர்ந்தன; கொன்றைப் பூக்கள் தட்பமுற்று இதழ்கள் மலர்ந்தன; கருவிளை மலர்கள் மலர்ந்தன; காந்தள் குலைகளை எடுத்தன.

இப் பாடலுள் அவிழ்தலும், அலர்தலும், நெகிழ்தலும், விள்ளலும், விரிதலும் 'மலர்தல்' என்னும் ஒரு பொருளின் மேல் நின்றன. ஆகலின், பொருட்பின்வரு நிலையணி ஆயிற்று.

நூற்பாவில், 'வருவது' என்று கூறாது, 'வருமென்னின்' என்று கூறியவதனான், முன்னர் வந்த சொல்லும் பொருளும் பின்னர்ப் பலவிடத்தும் வருவது, 'சொற் பொருட்பின் வருநிலை' யணி எனக் கொள்க.

## 3. சொற் பொருட் பின்வரு நிலையணி

முன்வந்த சொல்லே பின்னும் பலவிடத்தும் வந்து ஒரு பொருளே தருமாறு அமைவது, சொற்பொருட் பின்வருநிலை அணியாகும்.

"வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாள்மேல் வைகுதல்
வைகலும் வைத்துணரா தார்."

பொருள் : நாடொறும் பொழுது கழிதலைத் தமது ஆயுளின்மேல் தங்குதலாக வைத்து, அப் பொழுது கழிவை உணரும் இயல்பில்லாதவர்கள், நாடொறும் பொழுது கழிவு வருவதைக் கண்கூடாகக் கண்டிருந்தும், அப்பொழுது கழிவை யுணர்ந்து துன்புறாமல், நாடொறும் அப்பொழுது கழிவைத் தட்டுப்பாட்டின்றிக் கழியா நிற்கும் என்று மகிழ்வர்.

இதனுள், 'வைகல்' என்னும் முன்வந்த சொல் பின் னும் பலவிடத்தும் வந்து ஒரு பொருளே காட்டினமை யின், இது சொற்பொருள் பின்வருநிலை யணியாம்

இன்னும் மேலே கூறிய 'வருமென்னின்' என்ற அவ்விலேசானே பிறவணிகளோடும் கூடிவருவனவுங் கொள்க. எடுத்துக்காட்டாக, உவமைப் பொருட் பின் வருநிலையணியைக் காண்போம்.

### 4. உவமைப் பொருட் பின்வருநிலை யணி

ஒரு பொருளையே பின்னும் உணர்த்தும் பல சொற் கள் வந்து அவை பலபொருட்களுக்கு உவமையாய் வரு வது உவமைப் பொருட் பின் வருநிலை அணியாகும்.

"செங்கமல நாட்டம் செழுந்தா மரைவதனம்
பங்கயம் செவ்வாய் பதுமம்போல்—செங்கரங்கள்
அம்போ ருகந்தா ளரவிந்த மாரனார்
தம்போர் உகந்தாள் தனம்."

பொருள்: மன்மதனது அழகிய போரை (காமப் போரை) விரும்பியவளது கண்கள், செவ்விய தாமரை

மலரைப் போல்வனவாம்; முகம் செழுமையுடைய தாமரையைப் போல்வதாம்; செந்நிறவாய் தாமரையைப் போல்வதாம்; சிவந்த கைகள் தாமரையைப் போல்வனவாம்; திருவடிகள் தாமரையைப் போல்வனவாம்; முலைகள் தாமரையைப் போல்வனவாம்.

இதனுள், 'கமலம்', 'தாமரை', 'பங்கயம்', 'பதுமம்', 'அம்போருகம்', 'அரவிந்தம்', என்னும் சொற்கள் 'தாமரை' என்னும் ஒரு பொருளையே உணர்த்தி நின்றன. எனவே, இது பொருட் பின் வருநிலையணியாம்; அவை கண்கள் முதலிய உறுப்புகளுக்கு உவமையாய் வந்தமையின், இஃது உவமைப் பொருட்பின் வருநிலையணி என்றும் கூறப்படும்.

## 6. முன்னவிலக் கணி

41. முன்னத்தின் மறுப்பினது முன்ன விலக்கே
மூவகைக் காலமும் மேவிய தாகும்.

ஒரு பொருளைக் குறிப்பினால், விலக்கினால் அது முன்னவிலக்கென்னும் அணியாம். அஃது இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் மூவகைப் பட்ட காலங்களோடும் கூடியதாகும்.

நூற்பாவில் 'மறுப்பது' என்னாது 'மறுப்பின்' என்று கூறியதனால், கூற்றினால் மறுப்பினும் அவ்வணியாம். குறிப்பினால் மறுப்பது, பொருளழகும் செய்யுட் சிறப்பும் நோக்கி எடுத்தோதினார். ஏனையது அத்தன்மையது அல்லாமையின், இலேசான் ஒப்பினர் என்பதாம்.

இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என்பன மூன்றையும் கூற்றினோடும் குறிப்பினோடும் கூட்ட இவ்வணி அறுவகையாகும்.

முன்னம்—குறிப்பு. விலக்கு—தடை.

### 1. இறந்தகால விலக்கு

இறந்த காலத்து நடந்த வினையை விலக்கிக் கூறுவது இறந்த கால விலக்கு ஆகும்.

"பாலன் தனதுருவாய் ஏழுலகுண் டாலிலையின்
மேலன்று கண்துயின்றாய் மெய்யன்பர் — ஆலன்று
வேலைநீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ
சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்"

பொருள்: சோலை சூழ்ந்த குன்றத்தைக் குடையாய் எடுத்த மாயவனே நீ உலகம் ஏழையும் உண்டு குழந்தை உருவத்தைக் கொண்டு ஆலின் இலையிலே உறங்கினாய் என்பது உலகத்துள்ளோர் மெய்யென்று சொல்வர். நீ உலகத்தை உண்டு உறங்கிய ஆலமரமானது, அன்று கடலுள்ளே நின்றதோ? மண்ணிலே நின்றதோ? விண்ணிலே நின்றதோ? சொல்வாயாக.

உலகம் முழுவதையும் உண்ணப்பட்ட காலத்து ஆலின் இலை யொன்று தனியாக இருந்ததென்பது பொருந்தாது என அதைக் குறிப்பால் விலக்கப்பட்டது.

### 2. எதிர்கால விலக்கு

எதிர்காலத்தில் நிகழக் கூடியவற்றை முன்னரே கூறுதல் பொருந்தாது என விலக்குவது எதிர்கால விலக்கு ஆகும்.

"முல்லைக் கொடிநடுங்க மொய்காந்தள்
கைகுலைப்ப
எல்லை யினவண் டெழுந்திரங்க — மெல்லியன்மேல்
தீவாய் நெடுவாடை வந்தாற் செயலறியேன்
போவாய் ஒழிவாய் பொருட்கு"

பொருள்: தலைமகனே! முல்லைக் கொடியானது நடுங்க, நெருங்கிய காந்தள் மலரானது விரிய, ஒளியுடைய

வண்டின் கூட்டங்கள் எழுந்து ஒலிக்க, தீயையுடைய நெடிய வாடையானது மென்னடையாகிய இவள் மேல் வந்தால் பின் விளைவனவற்றை அறியமாட்டேன்; ஆதலின், பொருளீட்டுதற்குப் போதலை ஒழிவாயாக.

### 3. நிகழ்கால விலக்கு

என்பது, நிகழ்காலத்தில் நடைபெறும் வினையே பொருந்தாது என விலக்குவது நிகழ்கால விலக்கு ஆகும்.

"மாதர் நுழைமருங்குல் நோவ மணிக்குழைசேர்
காதின் மிகைநீலம் கைபுனைவீர்—மீதுலவு
நீணீல வாட்கண் நெடுங்கடையே செய்யாவோ
நாணீலம் செய்ய நலம்."

பொருள்: விருப்பத்தை வளர்க்கும் நுண்ணிய இடையானது வருந்த, மணியாலாகிய குழையென்னும் காதணியை உமது காதின் மீது மிகையாக நீலப் பூவைச் சாத்துகின்றவரே! அக் காதின் மீது உலாவுகின்ற நீண்ட நீலநிறத்தையுடைய கண்களின் நெடிய கடையே செய்யாவோ நீவிர் நன்றாகச் சூடிய நீலப்பூவின் அழகை.

42. அதுவே,
பொருள் குணம் காரணம் காரியம் புணரும்.

மேலே கூறிய முன்னவிலக்கு என்னும் அணியே பொருள் விலக்கணி, குணவிலக்கணி, காரண விலக்கணி, காரிய விலக்கணி என நான்கு வகையானும் வரும்.

### 4. பொருள் விலக்கு

உண்மைப் பொருளினை விலக்கிப் பிறிதொன்றினைப் புலப்படுத்தல் பொருள் விலக்கு ஆகும்.

"கண்ணு மனமும் கவர்ந்தவள் ஆடிடமென்(று)
அண்ணல் அருளும் அடையாளம் — தண்ணிழலின்
சுற்றெல்லை கொண்டுலவும் சோதித் திரளல்லால்
மற்றில்லை காணும் வடிவு."

பொருள்: நம்முடைய தலைவன், தன்னுடைய கண்களையும் மனத்தையும் கவர்ந்து கொண்ட மடப்பம் பொருந்தியவள் விளையாடும் இடமென்று நமக்கு அருளிச் செய்த சோலையின்கண் உண்டாக்கிய குளிர்ந்த நிழலைச் சேர்ந்த சூழலிடத்தைக் கைக்கொண்டு உலாவித்திரிவதொரு ஒளிவடிவமல்லது, அவ்வொளி வடிவின் உறுப்புக்களைக் காண்டற்கு அரிதாயிருந்தது. இஃது ஓர் உருவத்தன்மை இருந்தவாறு.

## 5. குணவிலக்கு

பலகுணங்களை எடுத்துக் காட்டிப்பின் விலக்கிப் பிறிதொரு குணத்தைத் தேடுதல் குணவிலக்கு ஆகும்.

"மாதர் துவரிதழ்வாய் வந்தென் னுயிர்கவரும்
சீத முறுவல் அறிவழிக்கும்—மீதுலவி
நீண்ட மதர்விழியென் னெஞ்சம் கிழித்துலவும்
யாண்டையதோ மென்மை யிவர்க்கு."

பொருள்: இவருடைய அழகிய பவழம் போன்ற வாயானது, என்னுடைய உயிரை வந்து கவருகின்றது; குளிர்ந்த நகையானது அறிவையழிக்கின்றது; காதின் மீது உலாவி அழகுடன் நீண்ட விழியானது என்னுடைய உள்ளத்தைக் கிழித்து உலவா நின்றது; ஆதலால் இவர்க்கு மென்மைத்தன்மை யாண்டுளதோ சொல்வாயாக.

## 6. காரண விலக்கு

நிகழ்கின்ற காரியத்திற்கு இருக்கவேண்டிய மெய்ப்பாடு இல்லாமைக்குரிய காரணத்தை எடுத்துக் காட்டி விலக்குதல் காரண விலக்கு ஆகும்.

"மதரரிக் கண்சிவப்ப வார்புருவங் கோட
அதரம் துடிப்ப வணிசேர்—நுதல்வியர்ப்ப
நின்பால் நிகழ்வனகண்(டு) அஞ்சாதா
லென்னெஞ்சம்
என்பால் தவறின்மை யால்."

பொருள்: பெண்ணே! செவ்வரி பரந்து அழகுற்ற கண்சிவப்ப, நீண்ட புருவம் வளைய, அதரம் துடிக்க, அழகு சேர்ந்த நெற்றியானது வியர்ப்ப, உன்னிடத்தில் நிகழ்வனவற்றைக் கண்டு என்னுடைய நெஞ்சம் அஞ்ச மாட்டாது, என்பால் குற்றமில்லாமையால்.

7. காரிய விலக்கு

நிகழ்கின்ற காரணங்களுக்கு ஏற்புடைத்தான காரியத்தை நிகழாமைக் காட்டி விலக்குதல் காரிய விலக்கு ஆகும்.

"மன்னவர் சேயா மயிலகவி யாடலும்
பொன்னலரும் கொன்றையும் பூந்தளவின்—
மென்மலரும்
இன்னுயிரா நீண்முகிலு மெய்யென்று கொள்வதேல்
என்னுயிரோ வின்னும் உளது."

பொருள்: நம் காதலர் (வினை காரணமாக) சேய்மையான நாட்டினிடத்து உளதாம் போது, மயிற் கூட்டங்கள் கூவியாடுதலும், கொன்றைகள் பொன் போல் மலர்தலும் அழகிய முல்லையின் மென்மையான மலரும் மின்னலைக்' கொடுக்கின்ற பெருமைக்குரிய எழிலியுமாகிய இவை மெய்யென்று கொள்வோமானால், என்னுயிரோ இன்னும் உடலோடு பொருந்தி நின்றது.

43. வன்சொல் வாழ்த்து தலைமை யிகழ்ச்சி
துணைசெயல் முயற்சி பரவசம் உபாயம்

கையறல் உடன்படல் வெகுளி இரங்கல்
ஐயம் என்றாங் (கு) அறிந்தனர் கொளலே.

வன்சொல் விலக்கு, வாழ்த்து விலக்கு, தலைமை விலக்கு, இகழ்ச்சி விலக்கு, துணைசெயல் விலக்கு, முயற்சி விலக்கு, பரவசவிலக்கு, உபாய விலக்கு கையறல் விலக்கு, உடம்படல் விலக்கு, வெகுளிவிலக்கு, இரங்கல் விலக்கு, ஐயவிலக்கு என்று சொல்லிய பதின் மூன்று பாகு பாட்டையுடையதென்று அறிந்து கொள்ளுதலை யுடைத்து அவ்விலக்கணியாம்

8. வன்சொல் விலக்கு

வன்மையான சொற்களைச் சொல்லி விலக்குதல் வன் சொல் விலக்கு ஆகும்.

"மெய்யே பொருள்மேல் பிரிதியேல் வேறொரு
தையலை நாடத்தகு நினக்கு—நெய்யிலைவேல்
வள்ளல் பிரிவற்றம் பார்த்தெங்கள் வாழ் நாளைக்
கொள்ள உழலுமாம் கூற்று"

பொருள்: உறுதியாகப் பொருள் மேல் விருப்புற்றுப் பிரிவையாயின், இப்பொழுதே உனக்கொரு வாழ்க்கைத் துணைவியைத் தேடத் தகுவதாயிருந்தது. நெய் பூசிய வேலினையுடைய வள்ளலே! நீ பிரிந்த காலத்தைப் பார்த்து, அப்பொழுதே எங்கள் வாழ் நாளைக் கவர்வ தாக நினைத்துத் திரிகின்றது கூற்றம்.

9. வாழ்த்து விலக்கு

வாழ்த்தி வைத்து விலக்குதல் வாழ்த்து விலக்கு ஆகும்.

"செல்லும் நெறியனைத்தும் சேம நெறியாக
மல்க நிதியம் வளஞ்சிறக்க—வெல்லும்
அடற்றேர் விடலை யகன்றுறைவ தாங்கோர்
இடத்தே பிறக்க வியாம்"

பொருள்: வெற்றியினையும் வலியினையுமுடைய தேரினையுடைய வீரனே! நீ எம்மைப் பிரிந்து போகக் கருதிப் போகும் வழியனைத்தும் உனக்குக் காவலாகித் துணை செய்வதாக! நினக்குப் பொருள் வருவாயும் பெருகுவதாக! செல்வம் பெருகுக! நீ இப்படிப் பிரிந்து நிலையாக வாழ்வது எவ்விடம்? அவ்விடத்தை எங்கட்குச் சொல்வார்களேயானால் நாங்களும் அவ்விடத்தே அறிந்து பிறப்போம்.

இதனுள் சேமநெறியாக, நிதியம் மல்க, வளம் சிறக்க என வாழ்த்தி, "விடலை யகன்றுறைவது, ஆங்கோர் இடத்தே பிறக்க" என்பதனால் மரணம் நேரும் என்பது பெறப்படக் கூறிச் செலவினை விலக்கியவாறு அறிக.

இவ்விடத்து, இறக்கும் காலத்துத் தோன்றிய நினைவு, இறந்த பின்னர் வந்து ஊட்டும் என்பதனை அறிய வேண்டும்.

### 10. தலைமை விலக்கு

தன்னிடத்துத் தலைமைப்பாடு தோன்றுமாறு கூறி விலக்குவது தலைமை விலக்கு.

"பொய்ம்மை நெறிதீர் பொருளு மிகப்பயக்கும்
எம்முயிர்க்கு மேது மிடரில்லை—வெம்மைதீர்ந்
தேக வினிய நெறியணிய வென்றாலும்
போக லொழிவாய் பொருட்கு"

பொருள்: பொய்மை தீர்ந்த வழியில் வரும் பொருளும் மிகுதியாக உண்டாகும்; எங்கள் உயிர்க்கும் ஓரிடர் உண்டாகமாட்டாது; அவ்வழி நடையும் வருத்தமின்றி இன்பமுண்டாக்கும்; அவ்வழி தானும் சிறிய அளவினதாகும் என்று சொன்னோமே யாயினும் பொருள் கருதிப் போகும் செலவினை நீ நீக்குவாயாக.

இதனுள், "எம்முயிர்க்கு மேது மிடரிலை" என்று கூறு வதனாலே தலைமைத் தன்மைத் தோன்றுதலைக் காண்க.

## 11. இகழ்ச்சி விலக்கு

விலக்குதற்குரிய காரணத்தை இகழ்ந்து கூறி விலக்கு வது இகழ்ச்சி விலக்கு.

"ஆசை பெரிதுடையே மாருயிர்மே
லப்பொருண்மேல்
ஆசைசிறிது மடைவிலமால்—தேசு
வழுவா நெறியின் வருபொருண்மே லண்ணல்
எழுவா யொழிவா யினி"

பொருள்: தலைமை கெடாதவாறு நல்வழிக் கண்ணே யொழுகுகின்ற பொருள்கருதிப் பிரிகின்ற அண்ணலே! யாம் எங்கள் அரிதாகிய உயிரின் மேல் மிகுதியான ஆசை யுடையேம்; நீவிர் எண்ணிச் செல்கின்ற பொருள்மேல் ஆசையுண்டாவதற்குக் காரணம் சிறிதும் இல்லேம்; ஆத லால் நீ பொருள் மேற் செல்வாய்; அல்லது அதனின் நீங்குவாய் எங்கள் தன்மை இதுவாகும்.

உயிர் மேல் விருப்பினையும், பொருள்மேல் வெறுப் பினையும் தோற்றுவித்தலால், பிரிந்து செல்லுவதற்குக் காரணமான பொருளை இகழ்ந்து கூறிச் செலவினை விலக்கியவாற்றை யுணர்க.

## 12. துணை செயல் விலக்கு

செல்வார்தம் செலவிற்குத் துணை செய்வாரைப் போலக் கூறி விலக்குவது துணைசெயல் விலக்கு ஆகும்.

"விளைபொருண்மே லண்ணல் விரும்பினையே
லீண்டெம்
கிளையழுகை கேட்பதற்கு முன்னே—விளைதேன்

புடையூறு பூந்தார்ப் புனைகழலர்ய் போக்கிற்
கிடையூறு வாராமல் ஏகு''

பொருள்: நிறைந்த தேனூறுகின்ற பூமாலையினையும், அணியுறுத்தப்பட்ட கழலினையுமுடைய தலைவனே! நன்மை பயக்கும் பொருள் மேலே போதல் விரும்பினையாயின், எங்கள் சுற்றத்தார் அழுவது கேட்பதற்கு முன்னே யிப்பொழுதே உன்னுடைய செலவிற்கு விலக்கு வாராதவாறு சொல்வாயாக.

### 13. முயற்சி விலக்கு

செல்வார் தம் செலவிற்கு முயற்சி தோன்றுமாறு கூறி விலக்குவது முயற்சி விலக்கு ஆகும்.

''மல்லணிந்த தோளாய்! இதென்கொலோ
வான்பொருள்மேற்
செல்க விரைந்தென் றுளந்தெளிந்து—
சொல்லுதற்கே
ஏன்று முயல்வலியான் ஏகல்நீ யென்றிடையே
தோன்றுகின்ற தென்வாயிற் சொல்.''

பொருள்: வளப்பமுடைய தோளினையுடையாய்! நீ நன்மை பயக்கும் பொருளினை ஈட்டுதற்கு விரைந்து செல்வாயாக என்று என்னுள்ளமானது மயக்கமறக் கூறுவதாக நினைத்துத் தொழிற்படுகின்றது. அப்பொழுதே ஒருசொல் போகாதொழிவாயாக என்று சொல்லுவதாகத் தோன்றுகின்றது. இஃது என் பயக்குமோ? சொல்வாயாக.

### 14. பரவச விலக்கு

தன்னுணர்வு இல்லாமை தோன்றக் கூறி விலக்குவது பரவச விலக்கு ஆகும்.

"செல்கை திருவுளமேல் யானறியேன் தேங்கமழ்தார்
மல்லகலம் தங்கு மதர்விழியின்—மெல்லிமைகள்
நோக்கு விலக்குமே னோவா ளிவள்காதல்
போக்கி யகல்வாய் பொருட்கு"

பொருள்: இவளைப் பிரிவதே செயத்தக்கதாகத் திருவுளத்து நிறைத்துப் பொருட்குப் பிரிவாயானால், அதன் மேல் நடக்கும் செயல் என்னால் அறியப்படாதாகலான், நறுமணமுடைத்தாகிய மாலையினையும் வளப்பத்தினையுமுடைத்தாகிய நின்னுடைய மார்பின்கண்ணே பிரியாது தங்கப்பட்ட விழியினிடத்து உண்டாகிய மென்மைத்தாகிய இமைகள் எம்முடைய தலைவன் மார்பினைப் பார்க்கின்ற பார்வையினை விலக்குகின்றன என்றதற்கு வருந்தும் இவள், நின்பால் வைத்த ஆசையினைப் போக்கிப் பின் செல்வாயாக.

### 15. உபாய விலக்கு

விலக்குங்கால் ஒரு சூழ்ச்சியைக் காரணமாக வைத்து விலக்குவது உபாய விலக்கு ஆகும்.

"இன்னுயிர் காத்தளிப்பாய் நீயே இளவேனில்
மன்னவனும் கூற்றுவனும் வந்தணைந்தால்—அன்னோர்
தமக்கெம்மைத் தோன்றாத் தகைமையதோர் விஞ்சை
எமக்கின் றருள்புரிந்தே யேகு."

பொருள்: எங்களுடைய இனிய உயிரைக் காக்கும் தன்மையையுடையையாகிய நீ பிரியக் கருதினையாயின், எங்களிடத்து இளவேனிற்காலத்துத் தலைவனாகிய மன்மதனும், கூற்றுவனும் வந்தணைந்தால் அவர் கண்ணுக்கு தோன்றாமல் இருப்பதொரு வித்தையை எங்களுக்குத் தந்து பின்போவாயாக.

## 16. கையறல் விலக்கு

தத்தமக்கு வேண்டிய பொருளின் மேல் முயலும் முயற்சி இல்லாமை தோன்றக் கூறி விலக்குவது கையறல் விலக்கமாகும். எனவே, செய்யாதொழிந்த வினைகளுக்கு வருந்துமுகத்தான் விலக்குதலாம் இது எனலாம்.

"வாய்த்த பொருள்விளைத்த தொன்றில்லை
மாதவமே
ஆர்த்த வறிவில்லை யம்பலத்துக்—கூத்துடையான்
சீலம் சிறிதேயும் சிந்தியேன் சென்றொழிந்தேன்
காலம் வறிதே கழித்து."

பொருள்: நற்பொருளைத் தோற்றுவித்தற்கு ஏது வாகிய யாதொரு முயற்சியையும் செய்யவில்லை; பெரிய தவத்தைத் தேடியடைத்தக்க அறிவுமில்லை; ஞானவெளி யில் இன்பக் கூத்தினைச் செய்கின்ற கூத்தனுடைய பெருமையைச் சிறிதளவேனும் நினைக்கவில்லை; ஆத லால், என் வாழ்நாளை வீழ்நாளாக்கி விட்டேன்.

## 17. உடன்படல் விலக்கு

செயற்படத் துணிவார் தம் செயலுக்கு உடன்பட்டார் போலவே நின்று விலக்குவது உடன் படல் விலக்காம்.

"அப்போ தடுப்ப தறியே னருள்செய்த
இப்போ திவளு மிசைகின்றாள்—தப்பில்
பொருளோ புகழோ தரப்போவீர் மாலை
இருளோ நிலவோ வெழும்."

பொருள்: குற்றமற்ற பொருள், புகழ் இவற்றை யுண் டாக்குதற்குப் பிரிந்து போவீர்; நீவிர் பிரிந்த அப்பொழுதே இவளுக்கு அடுப்பதொன்றும் என்னாலறியப்படாது. நீவிர் கூறிய இப்பிரிவிற்கு இப்போது இவளும் உடன் படுகின்றாள்; இது கிடக்க, மாலைக்காலம் வந்தவுட

னேயே அதனோடு இருளோ நிலவோ வருதல் செய்யும், இதனை நீவிர் அறிவீர்.

### 18. வெகுளி விலக்கு

வெகுளி தோன்றக் கூறி விலக்குவது வெகுளி விலக்கு ஆகும்.

''வண்ணங் கருக வளைசரிய வாய்புலர
எண்ணந் தளர்வே மெதிர்நின்று—கண்ணின்றிப்
போதல் புரிந்து பொருட்காதல் செய்வீரால்
யாதும் பயமிலேம் யாம்''

பொருள்: இவளுடைய நிறம் கருகி வேறுபடவும், கையில் அணிந்துள்ள வளையல்கள் கழலவும், வாயானது ஈரமற்று உலரவும், நன்மையடையலாம் என்று நாங்கள் எண்ணிய எணணமெல்லாம் பழுதாகவும் எங்களிடத்துப் பரிவின்றிப் பிரிதல் விரும்பி எங்களை வெறுத்துப் பொருள் மீது ஆசைப்படுவீரானால் இனி எங்களுக்கு ஒரு பயனும் இல்லை.

இப்பாடலுள், தலைவன் பிரியின் நிறம் வேறுபடுதல் முதலிய நிகழா நிற்கவும், எதிர் நின்று ''யாதும் பயமிலேம் யாம்'' என்று கூறியவதனால் வெகுளி தோன்றக் கூறிச் செலவை விலக்கியவாறு காண்க.

### 19. இரங்கல் விலக்கு

பிரிவு வருத்தம் தோன்றக் கூறி விலக்குவது இரங்கல் விலக்கு ஆகும்.

''ஊசல் தொழிலிழக்கும் ஒப்பு மயிலிழக்கும்
வாசம் சுனையிழக்கும் வள்ளலே !—தேசு
பொழிலிழக்கும் நாளையெம் பூங்குழலி நீங்க
எழிலிழக்கு மந்தோ விவண்.''

பொருள் : எம்முடைய பூவினால் அழகுறுத்தப் பட்ட கூந்தலினையுடைய இவள் உயிரிழப்பதேயன்றி நாளை ஆடுகின்ற ஊசலும் விளையாடல் தொழிலை யிழக்கும்; மயிலும் உவமையையிழக்கும்; சுனைகளும் நறுமணத்தை யிழக்கும்; பொழிலும் ஒளியையிழக்கும்; இவ்விடமும் அழகையிழக்கும். தலைவனே! இப் பொழுதுஉன் விருப்பம்போல் செய்வாயாக.

## 20. ஐய விலக்கு

ஐயப்பட்டதனைக் கூறி விலக்குவது ஐயவிலக்கு ஆகும்.

''மின்னோ பொழிலின் விளையாடு மிவ்வுருவம்
பொன்னோ வெனுஞ்சுணங்கிற் பூங்கொடியோ
என்னோ
திசையுலவுங் கண்ணும் திரள்முலையும் தோளும்
மிசையிருளும் தாங்குமோ மின்.''

பொருள் : இச்சோலையிடத்து விளையாடுகின்ற இவ்வுருவம், மின்னலினது உருவமோ அன்றி, பொன்னோவென்று ஐயப்படும் நிறத்தையுடைய சுணங்கை யுடைத்தாயிருப்பதொரு உருவத்தையுடைத் தாகிய கொடியோ? யாதோவென்று ஐயுறுகின்ற நெஞ்சமே! திசையனைத்தும் பரந்து உலாவித் திரிகின்ற கண்ணினையும், திரண்ட முலையினையும், இரண்டு தோளினையும், தன்மேலே யிருளினையும் தாங்கியிருப்ப தொரு மின்னுமுண்டோ? சொல்வாயாக.

இதனுள், மின்னோ கொடியோ என்னும் ஐயம், கண் முதலியவைகளை மின்னல் சுமந்திருத்தல் வொண்ணாது என்பதனால் விலக்கப்பட்டது.

**44. வேற்றுப்பொருள் சிலேடை யேதுவென் றின்னவை
மேற்கூ றியற்கையின் விளங்கித் தோன்றும்.**

வேற்றுப்பொருள் வைப்பு, சிலேடை, ஏது என்பன வற்றோடு இவ் விலக்கென்னும் அணி கூடி மேற்கூறப் பட்ட அணிகள் போல வரும்.

### 21. வேற்றுப் பொருள் வைப்பு விலக்கு

உலகறிந்த பெருமையுடைய பொருளை வைத்து உணர்த்த வந்தவற்றைச் சிறப்பித்து, அதற்கு இனமான வற்றை விலக்குதல் வேற்றுப் பொருள் வைப்பு விலக்கு ஆகும்.

"தண்கவிகை யாலுலகம் தாங்கு மனபாயன்
வெண்கவிகைக் குள்ளடங்கா வேந்தில்லை—
எங்கும்
மதியத் துடனிரவி வந்துலவும் வானிற்
பொதியப் படாத பொருள்."

பொருள் : உள்ளமானது குளிர்ந்து கொடுக்கும் கொடையையுடைய அனபாய சோழனுடைய வெண் கொற்றக் குடைக்கீழ் அடங்காத வேந்தர் எங்குமில்லை. மதியும், இரவியும் தவழுகின்ற வானில் அடங்காத பொருளும் எங்கும் இல்லை.

### 22. சிலேடைவிலக்கு

ஒப்புமையுடைய இரு பொருளை எடுத்துக் கொண்டு ஒருமையுடைய இருபொருள் காட்டி ஒன்றனை விலக்கு தல் சிலேடை விலக்கு ஆகும்.

"அம்போ ருகஞ்செற் றமுத மயமாகி
வம்பார் முறுவ லொளிவளர்க்க—இம்பர்
முகைமதுவார் கோதை முகமுண் டுலகின்
மிகைமதியும் வேண்டுமோ வேறு."

பொருள் : தாமரையினது அழகை யழித்து, அமுதத் தன்மைத்தாய்ப் புதுமையோடு கூடி விரிகின்ற ஒளியை யுடைத்தாதற்கு, முல்லை முகைகளையுடைய

கோதையை யுடையாளுடைய முகமல்லது, தாமரையைக் கருகச் செய்து அமுத கலைகளாலியன்ற வடிவுடைத் தாய்ச் செவ்வி தருகின்ற ஒளி நிலாவிரி மதி உலகத்திற்கு மிகை.

இதனுள், முகத்திற்கும் மதிக்கும் சிலேடை கூறி, முகமே அமையும், மதிவேறு எற்றுக்கு என விலக்கு தலின் சிலேடை விலக்காயிற்று.

### 23. ஏது விலக்கு

இதனால் இது நிகழ்ந்ததென்று கூறத்தக்க காரணமே இல்லாமல் காரியம் நிகழ்தலைக் கூறுதல், ஏது விலக்காம்.

''பூதலத்துள் எல்லாப் பொருளும் வறியராய்க்
காதலித்தார் தாமே கவர்தலால்—நீதி
அடுத்துயர்ந்த சீர்த்தி யனபாயா ! யார்க்கும்
கொடுத்தியெனக் கொள்கின் றிலேம்.''

பூவுலகத்தினுள்ளே வறிஞராய் விரும்பியார் யாவரும், தாம் விரும்பிய பொருள்களைத் தடையின்றித் தாமே யெடுத்துக்கொள்ளுகின்றா ராதலால், நீ உலகத்து வறி யோர்க்குக் கொடுக்கின்றாயாக நினைக்கின்றிலேம், நீதியை நிலைநிறுத்துதலாலே உயர்ந்த புகழையுடைய அனபாயனே !

## 7. வேற்றுப் பொருள் வைப்பணி

45. முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப்
பின்னொரு பொருளை யுலகறி பெற்றி
ஏற்றிவைத் துரைப்பது வேற்றுப் பொருள்வைப்பே.

முன்னர் ஒருபொருளின் தன்மையைக் கூறத்தொடங்கிப் பின்னர் அது முடித்தற்கு வலியுடைய பிறிதொரு பொருளை உலகறிந்த பெருமையுடையனவாக வைத்துச் சொல்வது வேற்றுப்பொருள் வைப்பென்னும் அணியாம்.

46. முழுவதுஞ் சேறல் ஒருவழிச் சேறல்
முரணித் தோன்றல் சிலேடையின் முடித்தல்
கூடா வியற்கை கூடும் இயற்கை
இருமை யியற்கை விபரீதப் படுத்தலென்[று]
இன்னவை யெட்டும் அதனது இயல்பே.

முழுவதுஞ் சேறலும், ஒருவழிச் சேறலும், முரணித் தோன்றலும், சிலேடையின் முடித்தலும், கூடாவியற்கையும், கூடுமியற்கையும், இருமையியற்கையும், விபரீதப் படுத்தலும் என எட்டு வகையான் வரும் வேற்றுப் பொருள் வைப்பணி.

### 1. முழுவதுஞ் சேறல்

ஒரு கோட்பாட்டினையுரைத்தால், அக்கோட்பாடு எல்லாவற்றின் மேலும் முழுதும் சொல்லுமாறு உரைப்பது முழுவதும் சேறல்.

''புறந்தந் திருளிரியப் பொன்னேமி யுய்த்துச்
சிறந்த வொளிவளர்க்கும் தேரோன்—மறைந்தான்
புறவாழி சூழ்ந்த புவனத்தே தோன்றி
இறவாது வாழ்கின்றார் யார்.''

பொருள் : இருளைப் புறங்காட்டி ஓடுமாறு அழகிய சக்கரத்தைச் செலுத்திச் சிறந்த ஒளியை மிகுவிக்கும் தேரை உடையவனாகிய பரிதி மறைந்தான்; புறத்தே கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தில் இறவாமல் வாழ்பவர் யார்?

## 2. ஒருவழிச் சேறல்

ஒரு கோட்பாட்டினை உரைத்தால், அக் கோட்பாடு எல்லாவற்றின் மேலும் முழுதும் செல்லாது, சிலவற்றின் மேலே மட்டும் சென்று முற்றுப் பெறுவது, ஒரு வழிச் சேறல்.

"எண்ணும் பயன்தூக்கா(து) யார்க்கும் வரையாது
மண்ணுலகில் வாம னருள்வளர்க்கும்—
மின்னுறுந்தேன்
பூத்தளிக்கும் தாராய் புகழாளர்க் கெவ்வுயிரும்
காத்தளிக்கை யன்றோ கடன்."

மண்ணுலகில் திருமால் (உயிர்களால்) கருதப்படும் பயனொன்றையும் (தனக்காக) நினையாமல், யாவர்க்கும் வரையறை யில்லாமல் கருணையை வளர்ப்பவன்; குளிர்ந்த நல்லதேனை மலர்ந்து கொடுக்கின்ற (மலர்) மாலையை உடையவனே! புகழையுடையவர்களுக்குக் கடமையாவது எல்லாவுயிர்களையும் காத்தளிப்ப தல்லா?

இப் பாடலுள், 'அருள் வளர்க்கும் பெற்றிமை திருமால் அளவிலே சென்று முற்றுப் பெற்றமையின் ஒருவழிச் சேறலாயிற்று. 'வாமன்' என்பது திருமாலையே யன்றி, அருகன், சிவன் ஆகிய இவர்கட்கும் பெயராய் வழங்கும்.

## 3. முரணித் தோன்றல்

தம்முள் மாறுபடும் தன்மைத்தாகிய பொருள் அமைந் திருப்பது முரணித் தோன்றல்.

"வெய்ய குரல்தோன்றி வெஞ்சினஏ(று)
உட்கொளினும்
பெய்யு முகில்தன்னைப் பேணுவரால்—வையத்(து)

இருள் பொழியும் குற்றம் பலவரினும் யார்க்கும்
பொருள் பொழிவார் மேற்றே புகழ்.''

பொருள்: கொடிய இடியோசையைத் தோற்றுவித்து (அதற்கு ஏதுவான) மிக்க கொடுமையான இடியை உட்கொண்டிருந்தாலும், மழைபொழியும் மேகத்தை யாவரும் விரும்புவர். யாவர்க்கும் புகழ்தல், இருளினது தன்மையனைய பல குற்றங்கள் உளவாயினும் பொருளைச் சொரிவார் மேலதேயாம்.

இதில், மழைக்கும், கொடுமை நிறைந்த இடிக்கும், ஈகைக்கும் இருள் பொழியும் குற்றத்திற்கும் முரண்பாடிருத்தலைக் காண்க.

### 4. சிலேடையின் முடித்தல்

முன்னே வைத்த பொருளையும், பின்னே வைத்த பொருளையும் ஒரு சொற்றொடரிலேயே சொல்லி முடிப்பது சிலேடையில் முடித்தல்.

''எற்றே கொடிமுல்லை தன்னை வளர்த்தெடுத்த
முற்றிழையாள் வாட முறுவலிக்கும்—முற்று
முடியாப் பரவை முழங்குலகத் தென்றும்
கொடியார்க்கு முண்டோ குணம்.''

பொருள்: முல்லைக் கொடியானது தன்னை வளர்த்தெடுத்த முற்றுப்பெற அழகுறுத்தப்பட்ட அணிகளையணிந்த தலைவி மனம் வாடும்படி செய்கிறது. என்றும் முடிவினைக் காணாத கடல் முழங்கிக் கொண்டிருக்கும் இவ்வுலகத்தில் கொடியவர்களுக்கும் குணமுண்டோ?

இதில், 'கொடியார்' என்றது முல்லைக் கொடிகளையும் கொடியவர்களையும் உணர்த்தியது; எனவே கொடுமையுடையார்க்கும் கொடிக்கும் சிலேடை வந்தவாற்றைக் காண்க.

### 6. கூடா வியற்கை

கூட வியலாததனைக் கூடுவதாகக் கொண்டு கூறுவது கூடா வியற்கை. கூடா வியற்கை—இயைபு இல்லாத தன்மை.

"ஆர வடமு மதிசீத சந்தனமும்
ஈர நிலவு மெரிவிரியும்—பாரில்
துதிவகையான் மேம்பட்ட துப்புரவும் தத்தம்
விதிவகையான் வேறு படும்."

பொருள்: (த ண் ணி ய) முத்துமாலையும், மிக்க குளிர்ச்சியாகிய சந்தனமும், குளிர்ந்த நிலவும் (காதல் நோயுடையார்க்கு) அழலின் தன்மையை விரிக்கின்றன. இப்பூமியின் கண் புகழ்தற்குரிய வகையினான் மேம்பட்ட அனுபவப் பொருள்களும், தமது தமது விதியினது வகையினால் மாறுபடுவனவாம்.

இதில் தண்மை பொருந்திய முத்துமாலை முதலியவற்றில் அழலின் தன்மையாகிய இயலாததனை இயலுவதாக முறைமை காட்டி நிறுத்தியமை யுணர்க.

### 6. கூடுமியற்கை

கூடுவதனைக் கூடுவதாகவே கொண்டு கூறுதல் கூடும் இயற்கையாகும்.

"பொய்யுரையா நண்பர் புனைதேர் நெறிநோக்கிக்
கைவளை சோர்ந்தாவி கரைந்துருகுவார்—
மெய்மெதும்பப்
பூத்தகையுஞ் செங்காந்தள் பொங்கலிநீர்
ஞாலத்துத்
தீத்தகையார்க் கீதே செயல்."

பொருள்: எக்காலத்தும் பொய்யுரை நிகழ்த்தாத காதலரது தேர் வரும் வழியைப் பார்த்துக் கொண்டு

கையிலுள்ள வளையல்கள் கழன்று வீழ, உயிர் நைந்து வருந்துகின்ற பெண்களினுடைய உடல் வெதும்பும்படி செங்காந்தள் மலர்கள் மலர்ந்து வருத்தா நின்றன; மிக்க ஒலியினையுடைய கடலால் சூழப்பட்ட பூவுலகில் தீக் குணம் உடையவர்களுக்கு இது தான் செயல்.

தீத்தகையார் — தீக்குணமுடையார்; தீயனைய வண்ணமுடைய செங்காந்தட் பூக்கள்.

### 7. இருமை யியற்கை

கூட வியலாததனையும், கூடும் இயல்புடையன வற்றையும் ஒருங்கு வைத்துக் கூறுவது இருமை இயற்கை யாகும்.

''கோவலர்வாய் வேய்ங்குழலே யன்றிக் குரைகடலும்
கூவித் தமியோரைக் கொல்லுமால்—பாவாய்
பெரியோரும் பேணாது செய்வாரே போலும்
சிறியோர் பிறர்க்கியற்றுந் தீங்கு.''

பொருள்: பாவையனைய பெண்ணே! இடைக்குல மக்களாகிய ஆயர்களின் வாயிலுள்ள புல்லாங்குழலே யன்றி ஒலிக்கின்ற கடலும் கத்தித் தலைவர்களைப் பிரிந் திருக்கின்ற பெண்களைக் கொல்லுகின்றது. சிறியோர் பிறர்க்குச் செய்யும் தீமையைப் பெருமைக் குணம் உடையாரும் விசாரியாமற் செய்வார் போல் தோன்று கிறது!

இதனுள், சிறியோர் பிறர்க்கு விசாரியாமல் தீங்கு செய்தலாகிய கூடுமியற்கையும், பெரியோரும் பிறர்க்கு விசாரியாமல் தீங்கு செய்தலாகிய கூடாமையும் ஒருங்கு வந்தமையைக் காண்க.

### 8. விபரீதப் படுத்தல்

மாறுபடப் பொருளுணர்த்துமாறு சொல்லுவது விபரீதப் படுத்தல் ஆகும்.

"தலையிழந்தான் எவ்வுயிரும் தந்தான் பிதாவைக்
கொலைபுரிந்தான் குற்றம் கடிந்தான்—உலகில்
தனிமுதன்மை பூண்டுயர்ந்தோர்
வேண்டுவரேல் தப்பாம்
வினையும் விபரீத மாம்."

பொருள்: எல்லாவுயிர்களையும் படைத்த அயன் (தன்) தலையை யிழந்தான்; (தன்) தந்தையைக் கொன்ற சண்டீசன் (தன்னுடைய) குற்றங்களினின்று விடுபட்டான்; உலகில் ஒப்பற்ற மேன்மையைக் கொண்டு உயர்ந்துள்ளோர் நினைத்தால் நல்வினைக்குத் தீப்பயனும் தீவினைக்கு நற்பயனுமாகவும் மாறுபடும்.

## 8. வேற்றுமையணி

47. கூற்றினும் குறிப்பினும் ஒப்புடை யிருபொருள்
வேற்றுமைப் படவரின் வேற்றுமை யதுவே.

கூற்றினாலும், குறிப்பினாலும் ஒப்புடைய இரு பொருளை ஒரு பொருளாக வைத்து, இவற்றைத் தம்முள் வேற்றுமைப்படச் சொல்லுவது, வேற்றுமை யென்னும் அணியாம்.

நூற்பாவில், 'வேற்றுமை' என்று கூறியதோடு அமையாது 'அதுவே' என்று மிகையாகக் கூறியதனால், அவை ஒரு பொருளால் வேற்றுமை செய்தலும், இரு பொருளால் வேற்றுமை செய்தலும் உடையன. அல்லது, அம் மிகையானே வேற்றுமைப்படக் கூறுதலோடன்றி, ஒன்றைக் காட்டினும் ஒன்று மிகுதிபடக் கூறவும் படும்.

### 1. ஒருபொருள் வேற்றுமைச்சமம்

இரண்டு பொருளை எடுத்துக் கொண்டு அதற்கு வெளிப்படையாக ஒப்புமை கூறி, பின் ஒரு பொருளுக்கு ஒரு காரணத்தான் வேறுபாடு கூறுதல் ஒரு பொருள்

வேற்றுமை யாகும். ஆயினும் எடுத்துக் கொண்ட இரண்டு பொருளுக்கும் உயர்வு தாழ்வு இல்லாமையால் ஒப்பு (சமம்) ஆயிற்று. ஆதலின் ஒரு பொருள் வேற்றுமைச் சமம் ஆகும்.

"அனைத்துலகும் சூழ்போ யரும்பொருள்
கைக்கொண்டு
இனைத்தளவைத் தென்றற் கரிதாம்—பனிக்கடல்
மன்னவநின் சேனைபோன் மற்றது நீர்வடிவிற்(று)
என்னும் இதுவொன்றே வேறு."

பொருள்: அரசனே! உலகம் முழுதும் சூழ்ந்து அருமையுடைய பொருள்களைத் தம்மிடத்துக் கொண்டு இவ்வளவினதென்று அறிய முடியாத குளிர்ச்சி பொருந்திய கடலானது, பகைவர்களின் நாடுகளையெல்லாம் வளைத்து அந் நாட்டு மன்னர்களின் அரிய பொருள்களையெல்லாம் கைக்கொண்டு இவ்வளவிற்று என்று அறிதற்கு அரிதாயுள்ள உன்னுடைய சேனை போன்றிருக்கின்றது. (ஆனால்) அது நீர் வடிவாயுள்ளது என்னும் இவ்வொரு பண்பளவால் வேறுபட்டிருக்கின்றது.

இதனுள், 'சேனை', 'கடல்' என்னும் இரண்டு பொருளுக்கும் தெளிவாகவே ஒப்புமை கூறிப், பிறகு 'கடல்' என்னும் ஒரு பொருளுக்கு மட்டும் 'நீர் வடிவினது' என்னும் வேறுபாடு காட்டினமையான், ஒரு பொருள் வேற்றுமையாயிற்று.

'போலும்' என்பது ஈற்றயல் உகரம் கெட்டுப் 'போன்ம்' என நின்றது; இதன் ஈற்று மகரமெய் வருமொழி முதலில் மெல்லினம் வந்தமையால் கெட்டு 'போன் மற்றது' என நின்றது.

## 2. இருபொருள் வேற்றுமைச் சமம்

இரண்டு பொருள்களை எடுத்துக் கொண்டு அவற்றிற்கு ஒப்புமை கூறிப் பிறகு, அவ்விரு பொருள்களுக்கும் வேறுபாடு கூறுதல் இருபொருள் வேற்றுமையாகும். அவ்விரு பொருள்களுக்கும் உயர்வு தாழ்வு தோன்றாதும் உரைப்பதால், ஒப்பு (சமம்) ஆகும்.

''சென்று செவியளக்கும் செம்மையாய்ச்
சிந்தையுள்ளே
நின்றளவில் இன்ப நிறைப்பவற்றுள்—ஒன்று
மலரிவரும் கூந்தலார் மாதர்நோக் கொன்று
மலரிவருங் கூத்தன்தன் வாக்கு!'

பொருள் : போய்க் காதை அளவிட்டுப் பார்க்கும் செம்மையையுடையனவாய், உளத்தில் நிலைபெற்ற அளவில் அளவில்லாத இன்பத்தை நிறையச் செய்வனவற்றுள், ஒன்று மலர்கள் தங்கிய கூந்தலையுடைய பெண்களின் அழகிய கண்ணாகும்; ஒன்று மலரி என்னும் ஊரில் தோன்றிய கூத்தன் என்னும் இயற்பெயரையுடைய புலவரது பாடலாகும்.

இப் பாடலுள் 'மலரிவரும்' என்னும் சொற்கள் இரண்டனுள் முதற்கண் வருவதை மலர்+இவரும் என்றும், இரண்டாவது வருவதை மலரி+வரும் என்றும் பிரித்துப் பொருளுணர்க.

இதனுள் முதலிரண்டடிகளாலும் (வெளிப்படையாக) இருபொருள்களுக்கு ஒப்புமை கூறிப்பிறகு ஒன்று 'மாதர் நோக்கு' ஒன்று 'கூத்தன் தன் பாடல்' என அவ்விரு பொருள்களுக்கும் வேறுபாடு கூறினமையின், இஃது இருபொருள் வேற்றுமையாயிற்று. அவ்விரு பொருள்களுக்குள்ளும் உயர்வு தாழ்வு கூறாமையின், ஒப்பு(சமம்) ஆயிற்று. இருபொருளில் ஒன்று கண்ணாகவும், பிறி

தொன்று பாடலாகவும் நின்றவாற்றையுணர்க. 'மலரி' என்பது ஓர் ஊராகும்.

### 3. உயர்ச்சி வேற்றுமை

உபமானத்தினின்றும் பொருளுக்கு(உபமேயத்திற்கு) உயர்ச்சியாகிய வேற்றுமையைச் சொல்வது உயர்ச்சி வேற்றுமையாகும்.

"மலிதேரான் கச்சியு மாகடலும் தம்முள்
ஒலியும் பெருமையும் ஒக்கும்—மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ வெல்லாம் படும்."

பொருள் : மிகுதியான தேர்ப்படையையுடைய (எம்முடைய) மன்னனது கச்சிமாநகரமும், பெரியகடலும் தமக்குள் ஒலியினாலும் பெருமையினாலும் ஒப்பனவாம்; (ஆனால்) மிக்க தேர்ப்படையையுடைய எம்முடைய அரசனது கச்சிப்பதியில் உண்டாவனவெல்லாம் கடலில் உண்டாகா; கடலில் உண்டாவனவெல்லாம் கச்சிப்பதியில் உண்டாகும்.

இப் பாடலில் முதலிரண்டடிகளால் ஒலியாலும் பெருமையாலும் வெளிப்படையாகக் கச்சி மாநகரத்துக்கும், கடலுக்கும் ஒப்புமை கூறிப் பிறகு கடலினும் கச்சிக்கு உயர்வுகாட்டினமையுணர்க. இவை கூற்று (சொல்) வேற்றுமை.

### 4. இருபொருள் வேற்றுமைச் சமம்

இரண்டு பொருள்களை எடுத்துக்கொண்டு அவற்றிற்கு ஒப்புமை கூறிப், பிறகு அவ்விரு பொருள்களுக்கும் வேறுபாடு கூறின் இருபொருள் வேற்றுமையாகும். அவ்விருபொருள்களுக்கும் உயர்வு தாழ்வு தோன்றாவிடத்து ஒப்பும் (சமம்) ஆகும். ஆதலின் இப் பெயர்த்தாயிற்று.

''கார்க்குலமும் பாய்திரையும் காட்டும் கடல்படையும்
போர்க்களிறும் பாய்மாவும் பொங்குமால்—ஏற்ற
கலமுடைத்து முந்நீர் கதிராழித் திண்டேர்
பலவுடைத்து வேந்தன் படை.

பொருள் : கடலானது மேகக் கூட்டங்களையும், கரையில் மோதுகின்ற அலைகளையும் (தன்னிடத்து) காட்டும்; (எம்முடைய) மன்னனது படையிலும், போர்க் குரிய ஆண் யானைகளும், பாய்ந்து செல்லும் குதிரை களும் மிக்கிருக்கும்; கடல் தனக்கேற்ற மரக்கலத்தைக் கொண்டிருக்கின்றது; எம்முடைய மன்னனது படை, ஒளி யினை உடைய சக்கரங்களையும் வன்மையினையும் உடைய பல தேர்களைக் கொண்டிருக்கின்றது.

'ஏற்று கலம்', எனவும் பாடம் கொள்ளுதல் உண்டு. அப்பாடம் கொள்ளின் (பல பொருள்களையும் ஏற்றுதற் குரிய மரக்கலம்' எனப் பொருள் கொள்ளுதல் வேண் டும்.

இப்பாடலுள், மேகக் கூட்டத்தையும், பாய் திரையை யும் உடைய கடலுக்கும், போர்க்களிற்றையும், பாய் மாவையும் உடைய படைக்கும் (குறிப்பாக) ஒப்புமை கூறிப் பிறகு அவ்விரு பொருள்களுக்கும் வேறுபாடு கூறினமையின், இஃது இருபொருள் வேற்றுமையாயிற்று. உயர்வு தாழ்வு கூறாமையின் ஒப்பு (சமம்) ஆயிற்று.

### 5. உயர்ச்சி வேற்றுமை

இரண்டு பொருள்களை எடுத்துக் கொண்டு ஒப்புமை காட்டிப் பிறகு ஒன்றற்கு உயர்ச்சி கூறி வேறுபடுத்தின் உயரிச்சி வேற்றுமை ஆகும்.

''பதுமம் களிக்கும் அளியுடைத்துப் பாவை
வதன மதர்நோக் குடைத்துப்—புதையிருள்சூழ்

அப்போ தியல்பழியும் அம்போ ருகவதனம்
எப்போது நீங்கா தியல்பு!''

பொருள் : தாமரைமலர் (தன்னிடத்து) களிக்கின்ற வண்டுகளை உடையது; (எமது) தலைவியின் முகம் மதர்த்த கண்களை உடையது; (ஆனால்) தாமரைமலர் (உலகத்தை) மறைக்கும் இருள்சூழும் இரவுக்காலத்தில் தன் தன்மை யழியும்; (எமது) தலைவியின் முகம் எப் பொழுதும் தன் தன்மை யழியாது.

இப்பாடலில், களிக்கும் வண்டுகளையுடைய தாமரைக்கும், மதர்த்த கண்களையுடைய முகத்துக்கும் (குறிப்பால்) ஒப்புமை கூறிப் பிறகு தாமரையினும் முகத் திற்கு உயர்வு கூறினமையின் உயர்ச்சி வேற்றுமை என் னும் பெயர்த்தாயிற்று. இவை குறிப்புவேற்றுமை. பிற வும் வருவழியுணர்க.

48. அதுவே

குணம்பொருள் சாதி தொழிலொடும் புணரும்

அவ்வேற்றுமை என்னும் அணி, குணத்தோடும், பொருளோடும், சாதியோடும், தொழிலோடும் கூடியும் வரும்.

### 6. குணவேற்றுமை

இரண்டு பொருள்களை எடுத்துக் கொண்டு அவற் றின் குணங்களை வேறுபடுத்திக் காட்டுதல் குண வேற்றுமை ஆகும்.

''சுற்றுவிற் காமனும் சோழர் பெருமானாம்
கொற்றப்போர்க் கிள்ளியும் கேழொவ்வார்—
பொற்றொடியே!

ஆழி யுடையான் மகன்மாயன் செய்யனே
கோழி யுடையான் மகன்.''

பொருள்: பெற்றொடியே! விசைத்துக் கட்டப்பட்ட வில்லையேந்திய காமனும், சோழர்களில் பெருமைக்குரியவனாய் வெற்றியே காணும் போர்வல்ல கிள்ளி என்பானும் தம்மில் நிறத்தால் ஒப்பாகார். சக்கரத்தையுடையனாகிய மாலினுடைய மகனாகிய காமன் கறுத்திருப்பான்; உறையூரை யுடையவனாகிய சோழனுடைய மகன் சிவந்திருப்பான்.

### 7. பொருள் வேற்றுமை

இரண்டு ஒப்பற்ற பொருள்களை எடுத்துக்கொண்டு அவற்றை வேறுபடுத்திக் காட்டுதல் பொருள் வேற்றுமை ஆகும்.

''ஓங்க லிடைவந் துயர்த்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும் — ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரோன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்.''

பொருள்: உதயகிரியிற்றோன்றி, உயர்ந்தோரால் தொழுதேத்த விளங்கி, இரைந்தொலிக்கும் கடலால் சூழப்பட்ட உலகத்திருளை அகற்றுவதாயும், பொதியமலையிற்றோன்றி, அறிவுடையோர் தொழுதேத்த விளங்கி, இரைந்தொலிக்கும் கடல்சூழுலகத்தில் மக்களுள்ளத்து உள்ள மயக்கம் நீக்குவதாயும் இருக்கின்றவற்றுள் ஒன்று ஒளியும் அழகும் ஒற்றைக்கால் தேரும் உடைய சூரியன்; ஏனையது தன்னிகரற்றதமிழ்.

### 8. சாதி வேற்றுமை

எடுத்துக் கொண்ட இரு பொருளும் ஒரு சாதியாதல் வைத்துப் பின் அவற்றிடையே வேற்றுமை கற்பித்தல் சாதி வேற்றுமையாகும்.

"வெங்கதிர்க்கும் செந்தீ விரிசுடர்க்கும் நீங்காது
பொங்கு மதியொளிக்கும் போகாது—தங்கும்
வளமையான் வந்த மதிமருட்சி மாந்தர்க்(கு)
இளமையான் வந்த விருள்."

வெம்மையுடைய சூ ரி ய னு க் கு ம் செந்நிறத்தீயினை விரிக்கின்ற விளக்கிற்கும் நீங்காது; பொங்கியெழும் மதியின் ஒளிக்கும் போகாதே நிற்கும்; இளமைப் பருவத்தில் செல்வக்களிப்பான் வந்த அறியாமையாகிய இருள்.

இதனுள், மருட்சி, இருள் என்னும் இரண்டும் இருளென்னும் ஒரு சாதியாதல் பற்றி ஒன்றாக வைத்து வேற்றுமை கூறப்பட்டமை அறிக.

### 9. தொழில் வேற்றுமை

இரண்டு விதமான தொழில் நிகழ்ச்சியை எடுத்துக் கொண்டு அவற்றை வேறு படுத்திக் காட்டுதல் தொழில் வேற்றுமை யாகும்.

"புனல்நாடர் கோமானும் பூந்துழாய் மாலும்
வினைவகையான் வேறு படுவர்—புனனாடன்
ஏற்றெறிந்து மாற்றலர்பா லெய்தியபார் மாயவன்
ஏற்றிரந்து கொண்டமையி னால்."

பொருள்: நீர்நாடர் தலைவனாகிய சோழனும், பொலிவுடைய துளசி மாலையையணிந்த திருமாலும் தொழிலால் வேறுபட்டிருப்பர்; சோழன் பகைவர் எறிந்த வேலைத் தம்மீது ஏற்றும், தனது வேலைப் பகைவர் மேல் எய்தும் கைக்கொண்ட உலகத்தை மாயத் தன்மையானாகிய திருமால் நீரேற்றும், யாசித்தும் கொண்டமையினால்.

அஃதேல் மேற்கூறியவற்றுள் இந்நான்கும் நீங்கலாகக் கூறியன உளவோவென்றால், இல்லை. இந் நூற்பா வேண்டாது கூறினார்; ஏனெனில், வேண்டியது முடித்துக்

கோடற்கு. மற்றும் வேண்டற்பாலது என்னையோ வெனின், இவ்வணி பிற அணிகளோடும் கூடிவருவனவற்றைக் கொள்ளுதற்கு என்பது. என்னை?

''விலக்கியல் சிலேடையின் மேவவும் பெறுமே'' என்று பிறாண்டும் கூறுதலின் என்க.

## 10. விலக்கியல் வேற்றுமை

எடுத்துக் கொண்ட இரண்டு பொருட்கும் வேற்றுமை தோற்றுங்கால், விலக்கொடு கூடிவருதல் விலக்கியல் வேற்றுமை ஆகும்.

''தம்மால் பயன்தூக்கா(து) யாவரையும் தாங்கினும்
கைம்மாறும் கால முடைத்தன்றே—எம்மாவி
அன்னவனை யாழி யனபா யனையலராள்
மன்னவனை மானுமோ வான்.''

உலகத்தாரால் பயனை விரும்பாது எல்லோரையும் பாதுகாக்கினும் மேகம் கைம்மாறும் காலவரையறையும் உடைத்து. ஆதலால், கை ம் மா று ம் காலவரையறையும் இன்றிக் கொடுக்கின்ற எம்முடைய உயிரை ஒத்தவனை—அனபாயனை—திருமகள் தலைவனை மேகம் ஒப்பாகுமோ?

இதனுள், மேகத்திற்கும், சோழனுக்கும் ஒப்புமை கூறிப், பின்னர் மேகத்திற்கு இருக்கின்ற கைம்மாறும், காலவரைவும் சோழனுக்கு இல்லையென வேற்றுமைப் படுத்தி மேகத்தை விலக்குதலின் இப்பெயர்த்தாயிற்று.

## 11. சிலேடை வேற்றுமை

சிலேடைப் பொருள் கூறி எடுத்துக் கொண்ட பொருளை வேற்றுமைப் படுத்திக் காட்டுதலின் இப்பெயர்த்தாயிற்று.

"ஏறடர்த்து வில்முருக்கி யெவ்வுலகும் கைக்கொண்டு
மாறடர்த்த வாழி வலவனைக் — கால்தொழுதற்(கு)
எஞ்சினா ரில்லெனினு மாய னிகனெடுமால்
வஞ்சியான் நீர்நாட்டார் மன்."

பொருள்: விடையேறுதழுவி, வில்லினை முறித்து, மூன்றுலகத்தையும் அளந்து கைக் கொண்டு, பகைவரை அழித்த சக்கரத்தையுடைய திருமாலை, உலகத்துள்ளார் யாவரும் வழிபடுவாரெனினும், மாயனென்றே சொல்லப் படுவான். பாண்டியனுடைய சுறாமீன் கொடியை அழித் துச் சேரனுடைய விற்கொடியைச் சிதைத்து எல்லா நாட்டையும் கைக் கொண்டு தன்னோடு ஒப்பாவார் உல கத்தில் இல்லையெனச் சக்கரம் செலுத்திய சோழனைத் தொழுதற்கு ஒழிந்தாரில்லையென மாயனொடு ஒப்பிட்டுக் கூறினும் சோழன், வஞ்சியான் (கருவூருடையான்).

இப் பாடலுள், திருமாலுக்கும், சோழனுக்கும் சிலே டைப் பொருள் கூறி வேற்றுமை காட்டினமையின் இப் பெயர்த்தாயிற்று.

ஏறென்பது, ஆனேறு, சுறவேறு முதலிய சொற்களின் ஆன், சுறவு என்னும் முன்மொழிகெட்டு ஏறு என்னும் பின் மொழி மட்டும் நிற்றலின் முன்மொழி கெட்டபின்மொழி நிலையல் என்று கூறுவர். 'ஏற்றுக் கொடி' என்பதற்குக் 'காடவர் கோன் கொடி' எனக் கூறுவாருமுளர்.

## 9. விபாவனையணி

49. உலகறி காரணம் ஒழித்தொன்(று) உரைப்புழி
வேறொரு காரணம் இயல்பு குறிப்பின்
வெளிப்பட வுரைப்பது விபாவனை யாகும்.

ஒன்றன் வினையை யுரைக்குமிடத்து அவ்வினைக் குப் பலரும் அறிய வரும் காரணமொழித்துப், பிறிதொரு



காரணத்தான் வெளிப்படையாகவும், குறிப்பாகவும் கூறுவது விபாவனை அணியாம்.

விபாவனை — விசேடமாக (சிறப்பாக) எண்ணுதல். குறிப்பின் வெளிப்படல் — சிந்தித்து ஆய்தலினாலே வெளிப்படல்.

### 1. அயற்காரணவிபாவனை

எடுத்துக் கொண்ட பொருளுக்கு ஏற்புடைக் காரண மின்றிப் பிறிதோர் காரணத்தான் சிறப்பிக்கப்படுதல் அயற்காரண விபாவனை யாகும்.

"தீயின்றி வேம்தமியோர் சிந்தை செழுந்தேறல்
வாயின்றி மஞ்ஞை மகிழ்தூங்கும்—வாயிலார்
இன்றிச் சிலர்ஊடல் தீர்ந்தார் அமரின்றிக்
கன்றிச் சிலைவளைக்கும் கார்."

பொருள்: துணையாவாரைப் பிரிந்து தனித்திருக்கும் காமவிழைவுடைய மகளிரது உள்ளமானது, நெருப் பின்றியேவேகும்; மயில்கள் செழுமையான தேனை வாயிற் கொள்ளாமலே களிப்புற்று ஆடும்; சிலமகளிர் ஊடல் போக்குவார் இல்லாமலே பிணக்கொழிந்தார்கள்; மேகமானது, போரில்லாமலே வெகுண்டு வில்லை வளையாநிற்கும்.

தூங்குதல்—ஆடுதல். வாயிலார்—ஊடல்நீக்குவோர். கன்றல் — கறுத்தல் (வெகுளி). சிலை — வில், வானவில்.

இதனுள், வெந்துபோதல் முதலியவற்றிற்கு உலகறிந்த காரணமாகிய நெருப்பு முதலியவைகளை நீக்கக் கார்ப்பருவம் என்பதாகிய ஒரு காரணம் நினைக்கப்படுவதால், இஃது அயற்காரண விபாவனை யாயிற்று. அயற்

காரணம் — பிறிதொருகாரணம்; வேறொரு காரண விபாவனை எனினும் பொருந்தும்.

## 2. இயல்பு விபாவனை

அமைந்து கிடக்கும் இயல்பினைச் சிறப்பித்துக் காட்டல் இயல்பு விபாவனை ஆகும்.

"கடையாமே கூர்த்த கருநெடுங்கண் தேடிப்
படையாமே யேய்ந்ததனம் பாவாய் !—
கடைஞெமிரக்
கோட்டாமே கோடும் புருவம் குலிகச்சே(று)
ஆட்டாமே சேந்த அடி."

பொருள் : பாவாய்! உன்னுடைய நீண்ட கரிய கடைக் கண்கள், எவரும் கடையாமலே கூர்மையைப் பெற்றன; முலைகள், ஆராய்ந்து செய்யாமலே தகுதி வாய்ந்த உருவத்தோடு பொருந்தின; புருவங்கள், கடைப் பகுதி வளைவு அழுங்கும்படி வளைக்கப் படாமலே வளைவுற்றன; அடிகள், சாதிலிங்கக் குழம்பில் தோய்க் கப்படாமலே சிவப்புற்றன.

ஞெமிர்தல்—வளைதல். கோட்டுதல்—வளைத்தல். குலிகம்—சாதிலிங்கம். சேத்தல்—சிவத்தல்.

இப்பாடலுள், கடைதல் முதலிய காரணத்தை நீக்கக் கூர்த்தல் முதலாகிய காரியங்களை இயற்கையாகவே அமைந்தனவென்று நினைக்கப்படுதலால், இஃது இயல்பு விபாவனையாயிற்று.

இதனைக் குறிப்புக்காரண விபாவனையென்றும், அயற்காரணவிபாவனையை இயல்பு காரண விபாவனை யென்றும் கூறுவர்.

நூற்பாவில் 'விபாவனை' என்று கூறாது 'ஆகும்' என்ற மிகையானே வினையெதிர் மறுத்துப் பொருள்

புலப்படுப்பினும், பொதுவகையாற் காரணம் விலக்கிக் காரியம் புலப்படுப்பினும் அவ்வணியாம் என்க.

**வினையெதிர் மறுத்துப் பொருள் புலப்படுத்தல்**

வினையை மறுக்கு முகத்தான் பொருளைப் புலப் படுத்துதல் வினை எதிர்மறுத்துப் பொருள் புலப்படுத் தல் ஆகும்.

"பூட்டாத விற்குனித்துப் பொங்கு முகிலெங்கும்
தீட்டாத அம்பு சிதறுமால்—ஈட்டமாய்க்
காணாத கண்பரப்பும் தோகை கடும்பழிக்கு
நாணா(து) அயர்த்தார் நமர்."

பொருள் : மிக்குப் பரந்தெழுந்த மேகங்கள், நாண் பூட்டப்படாத வில்லை வளைத்து, (வானவில்லைத் தன் பாற் கொண்டு) கூர்மையாக்கப்படாத அம்புகளை (மழைத்துளிகளை) எத்திக்கிலும் பொழிகின்றன; மயில் கள் கூட்டமாகிக் காணாத கண்களை (தோகையிலுள்ள கண்களைப்) பரப்புகின்றன; (இத்தகைய கார்காலத்தில் பிரிந்துவாழும் யாம் இறந்து போதல் உளதாம்) கடுமை யாகிய பழிக்கு நாணாமல் நம் தலவைர் நம்மை மறந்து வாழ்வாராயினார்.

பூட்டாதவில்—வானவில். குனித்தல்—வளைத்தல். தீட்டாத அம்பு—மழைத்துளி. அம்பு—நீர். கண்—மயிற்றோகையிலுள்ளகண்.

இப்பாடல், கார்ப்பருவத்தில் வருவதாகக்கூறிக் காலம் குறித்துச் சென்ற தலைவன், அப்பருவம் வந்த பின்னரும் வாராதொழிய, அது குறித்து வருந்துகின்ற தலைவி இரக்கமுற்றுக் கூறும் கூற்று.

இதனுள், பூட்டாத, தீட்டாத, காணாத என்பனவற் றால் வில், அம்பு, கண் என்பனவற்றின் வினையை எதிர்

மறுத்து, வானவில், நீர், தோகைக் கண் என்பவற்றின் பொருளைப் புலப்படுத்தியமை யுணர்க.

### காரணம் விலக்கிக் காரியம் புலப்படுத்தல்

காரணங்களைப் பொதுவாக விலக்கி அக்காரியங் களைப் புலப்படுத்தல் காரணம் விலக்கிக் காரியம் புலப் படுத்தல் ஆகும்.

"காரண மின்றி மலயா நிலம்கனலும்
ஈர மதிவெதும்பற் கென்னிமித்தம்—காரிகையார்க்(கு)
யாமே தளர வியல்பாக நீண்டனகண்
தாமே திரண்ட தனம்."

பொருள் : பொதிகை மலையிலிருந்து வருகின்ற தென்றற் காற்றானது, காரணமில்லாமலே வெதுப்பு கின்றது; இயல்பாகக் குளிர்ச்சியையுடைய மதி, இப் போது சுட்டு வருத்தற்குக் காரணம் யாது? யாம் தளர் வெய்துமாறு இவ்வழகிய பெண்களுக்குக் காரணமில்லா மலே கண்கள் இயல்பாக நீண்டுள்ளன. முலைகளும் காரணமில்லாமல் இயல்பாகவே திரட்சி பெற்றன.

நிமித்தம்—காரணம். மலையாநிலம்—பொதிகை மலையிலிருந்து வரும் தென்றற்காற்று. மலையம்+ அநிலம்—மலையாநிலம். அநிலம்—தென்றல். மலையம்— பொதிகைமலை. காரிகை—அழகு.

இதனுள், கனலல், வெதுப்பல், நீளல், திரளல் என் பனவற்றின் காரணங்களைப் பொதுவாக நீக்கி அக்காரி களை மட்டும் உணர்த்தியமை அறிக.

### வினையெதிர் மறுத்துப் பொருள் புலப்படுத்தல்

வினையை மறுக்கும் முகத்தான் பொருளைப் புலப் படுத்தல் வினை எதிர் மறுத்துப் பொருள் புலப்படுத்தல் ஆகும்.

"பாயாத வேங்கை மலரப் படுமதமா
பூவாத புண்டரிகம் என்றஞ்சி—மேவும்
பிடிதழுவி மாறதிரும் கானிற் பிழையால்
வடிதவழும் வேலோய் வரவு.''

பொருள் : கூர்மையாக வடித்தெடுக்கப் பெற்ற வேலாயுதத்தையுடையாய் ! பாயாத வேங்கை (வேங்கை மரம்) மலர, அதனை மலராத புண்டரிகமென்று (புலியென்று) நினைத்து அச்சமுற்றுத் தம்மிடத்திற் பொருந்தும் பெண் யானைகளை, மதம் பொருந்திய ஆண் யானைகள், தழுவிக் கொண்டு அப் புலியினுக்கு எதிராகக் கர்ச்சிக்கின்ற காட்டில் நீ இரவில் தனியே வருதல் தவறுடைத்தாகும்.

பாயாத வேங்கை—வேங்கைமரம். பாயும்வேங்கை—புலி. பூவாத புண்டரிகம்—புலி. பூக்கும் புண்டரிகம்—தாமரை. வடி—கூர்மை. பிடி—பெண்யானை. இது குறிப்பு விபாவனையின் வேறுபாடாம்.

## 10. ஒட்டணி

50. கருதிய பொருள்தொகுத் ததுபுலப் படுத்தற்(கு)
ஒத்ததொன்(று) உரைப்பினஃ தொட்டென மொழிப.

புலவன், தன்னால் கருதப்பட்ட பொருளை மறைத்து, அதனை வெளிப்படுத்தற்குத் தகுதியுடைய பிறிதொன்றினைச் சொல்லின், அஃது ஒட்டு என்னும் அணியாம்.

இவ் வொட்டணியை உவமைப்போலி, பிறிதுமொழிதல், நுவலாநுவற்சி என்னும் வேறு பெயர்களாலும் அழைப்பர்.

51. அதுவே,
அடையும் பொருளும் அயல்பட மொழிதலும்

அடைபொது வாக்கி யாங்ஙன மொழிதலும்
விரவத் தொடுத்தலும் விபரீதப் படுத்தலும்
எனநால் வகையினும் இயலும் என்ப.

மேலே கூறிய ஒட்டு என்னும் அணி, கூறுகின்ற பொருளும் அதனது அடையும் வேறுபட மொழிதலும் அடை பொதுவாக்கிப் பொருள் வேறுபடமொழிதலும் அடைவிரவி (கலந்து)ப் பொருள் வேறுபடமொழிதலும், அடையைத் திரிபுபடுத்திப் பொருள் வேறுபட மொழிதலும் என நான்கு வகையினையுடைத்து.

1. அடையும் பொருளும் அயல்பட மொழிதல்

அடையையும் பொருளையும் அயலாகுமாறு கூறுதல் இது வாகும்.

"வெறிகொள் இனச்சுரும்பு மேவியதோர் காவிக்
குறைபடுதேன் வேட்டுங் குறுகும்—நிறைமது
சேர்ந்(து)
உண்டாடும் தன்முகத்தே செவ்வி யுடையதோர்
வண்டா மரைபிரிந்த வண்டு."

பொருள் : தன்னிடத்து அழகையும் வளப்பத்தையுமுடைய தாமரைக் கண் குறைவற்ற நிறைந்த தேனைப் பெற்று உண்டு களித்து விளையாடுகின்ற வண்டும்—களித்த பல வண்டுகள் சேர்ந்து உண்டு வெறுத்து நீக்கிய குறைபட்ட கருங்குவளையின் தேனை விரும்பிச் சேருமோ?

இப் பாடலுள், தாமரை—தலைமகள். காவி—பரத்தையர். வண்டு—தலைமகன். இது பரத்தையிற் பிரிந்துறைந்து மீண்ட தலைமகனுக்கு வாயில் உடன் பட்ட தோழி கூறியது.

## 2. அடைபொதுவாக்கிப் பொருள் வேறுபடமொழிதல்

அடை மொழிகளைப் பொதுவாக வைத்துப் பொருளை மட்டும் வேறுபடக் கூறுதல் இதுவாகும்.

"உண்ணிலவு நீர்மைத்தாய் ஓவாப் பயன்சுரந்து
தண்ணளி தாங்கு மலர்முகத்துக்—கண்ணெகிழ்ந்து
நீங்கல் அரிய நிழலுடைத்தாய் நின்றெமக்கே
ஓங்கியதோர் சோலை யுளது."

பொருள் : உள்ளத்தின்கண்ணே உண்டாகிய குண முடைத்தாய்ப், பலர்க்கும் ஏற்றமுற உதவி செய்து தண்ணளியுடைத்தாகிய விரிந்த முகத்தையும், கண் ணோட்டத்தையும் (இரக்கம்) உடைத்தாய்ப் பிரிதற்கு அரிய சாயலோடுகூடி நிற்பதென ஒரு வள்ளல் மேலும், நடுவில் உண்டாகிய நீரையுடைத்தாய் மாறாது பலவளங் களைக் கொடுத்துத் தட்பமுடைய வண்டுகளைத் தாங் கிய மலர்களைத் தோற்றத்திலேயுடைத்தாய்த் தேனொழுகி விட்டுப் போதற்கரிய நிழலுடைத்தாய் ஓங்கி நிற்பதென்று சோலை மேலும் செலுத்துக.

## 3. அடைவிரவிப் பொருள் வேறுபட மொழிதல்

அடைமொழிகள் விரவிவந்து பொருள் வேறுபட மொழிதல் இதுவாகும்.

"தண்ணளிசேர்ந் தின்சொான் மருவும் தகைமைத்தாய்
எண்ணிய வெப்பொருளும் எந்நாளும்—
மண்ணுலகில்
வந்து நமக்களித்து வாழு முகிலொன்று
தந்ததான் முன்னைத் தவம்."

குளிர்ந்த கருணையையும் இன்சொல்லையுமுடைத் தாய், எல்லாரும் விரும்புகின்ற எல்லாப் பொருளையும் காலம் வரையறுக்காது மண்ணுலகிலே பிறந்து எம்போல்

உயிர்க்கு அளித்து வாழும் ஒன்று ஓர் வள்ளல் மேலும், உலகத்தார்க்குக் குளிர்ச்சியோடு கூடக் கொடுக்கின்ற கொடை சேர்ந்து நல்ல புகழ் மருவி, எண்ணுகின்ற எல்லாப் பொருளையும், எக்காலமும் உலகிற்குச் சேர்ந்து கொடுத்து வாழும் என மேகத்தின் மேலும் செலுத்துக.

உலகத்தில் காணப்படும் பொருள்களுக்கு மூல காரணம் நீராதலால் அக் காரணத்தை மேகம் கொடுத்தலால் அதன் காரியமாகிய பொருளெல்லாம் புலப்படும் என்பதாம்.

### 4. அடையை விபரீதப்படுத்துப் பொருள் வேறுபட மொழிதல்

அடைமொழிகளை மாறுபடக் கொண்டு பொருளை வேறுபடக் கூறல் இதுவாகும்.

''கடைகொல் உலகியற்கை காவத்தின் தீங்கால்
அடைய வறிதாயிற் றன்றே—அடைவோர்க்(கு)
அருமை யுடைத்தன்றி யம்தேன் சுவைத்தாய்க்
கருமை விரவாக் கடல்.''

பொருள் : மிகவும் எளிமையுடைத்துப் போலும் உயர்ந்தோர் தொழில், காலவியற்கையாலே இன்மையாற் சென்று இரப்பவும் வறுமையுற்றது! சேர்வோர்க்கு அருமையில்லாமல் தேன்போலும் ஒலியுமுடைத்தாய் வெகுளியில்லாக் கடல்.

இப்பாடல், வறுமையடைந்தான் ஒருவன் ஓர் வள்ளலை அடைய நின்றது. சேர்வோர்க்கு அருமையும், இனிமையின்மையும், கருமையும் கடலுக்கு உண்டென்க.

நூற்பாவில் 'வகையினும்' எனக் கூறிய மிகையான் இது பிற அணிகளோடும் கூடிவருவனவும் கொள்க.

## 11. அதிசயவணி

52. மனப்படும் ஒருபொருள் வனப்புவந் துரைப்புழி
உலகுவரம் பிறவா நிலைமைத் தாகி
ஆன்றோர் வியப்பத் தோன்றுவ ததிசயம்.

புலவன், தான் எண்ணிய பொருளினது அழகை விரும்பிச் சொல்லுங்கால், உலகியலைக் கடவாத தன்மைத்தாகி உயர்ந்தோர் வியப்புறுமாறு சொல்லுவது அதிசயம் என்னும் அணியாம்.

53. அதுவே,
பொருள்குணம் தொழிலையம் துணிவே திரிபெனத்
தெருளுறத் தோன்று நிலைமைய தென்ப.

மேற்கூறப்பட்ட அவ்வதிசயவணி பொருளதிசயம், குணவதிசயம், தொழிலதிசயம், ஐயவதிசயம், துணிவதிசயம், திரிபதிசயம் என ஆறு வகையான் தெளிவுறத் தோன்றும் நிலைமையையுடைத்து.

### 1. பொருளதிசயம்

கூறப்படும் பொருள் வியப்பிற்குரியனவாக விருத்தல் பொருள் அதிசயம் ஆகும்.

"பண்டு புரமெரித்த தீமேற் படர்ந்தின்றும்
அண்ட முகடு நெருப்பறா(து)—ஒண்தளிர்க்கை
வல்லி தழுவக் குழைந்த வடமேரு
வில்லி நுதல்மேல் விழி."

பொருள் : ஒளியுடைய தளிர்க்கைக் கொடியாகிய மலைமகள் தழுவியதால் குழைந்த (திருமேனியையும்) வடமேரு மலையாகிய வில்லினையும், மேல்நோக்கிய

நெற்றிக்கண்ணினையும் உடைய பரமசிவன் முற்காலத்துத் திரிபுரத்தைச் சிரித்து எரித்த தீயானது விரைந்து போதலால், இக்காலத்தும் அண்டத்தின் உச்சியில் நெப்பு (இடி) ஆறாது.

## 2. குணவதிசயம்

காணப்படும் குணம் வியப்பிற்குரியதாக விருத்தல் குணவதிசயம் ஆகும்.

"மாலை நிலவொளிப்ப மாதரிழை புனைந்த
நீல மணிகள் நிழலுமிழ மேல்விரும்பிச்
செல்லும் இவள்குறித்த செல்வன்பாற் சேர்தற்கு
வல்லிருளா கின்ற மறுகு."

மாலைப்போதில் தோன்றிய நிலவானது மறைய, விருப்பினாற் பூண்ட அணிகளிலுள்ள நீலமணிகள் ஒளியைக் கக்க, இவள் காதலொடு விரும்பிச் செல்லும்படி எண்ணப்பட்ட தலைவனிடத்திற் போதற்குத் தெருக்கள் செறிந்த இருளாகின்றன.

## 3. தொழிலதிசயம்

தொழில் வியப்புறுமாறு அமைந்துகிடத்தல் தொழிலதிசயம் ஆகும்.

"ஆளும் பரியும் கரியும் சொரிகுருதி
தோளும் தலையும் சுழித்தெறிந்து—நீள்குடையும்
வள்வார் முரசு மறிதிரைமேற் கொண்டொழுக
வெள்வாள் உறைகழித்தான் வேந்து."

பொருள் : வீரர்களும், குதிரைகளும், யானைகளும் சொரிகின்ற இரத்த வெள்ளமானது, தோள்களையும், தலைகளையும் சுழித்து வீசி, நீண்ட குடைகளையும் வாரால் இழுத்துக் கட்டப்பட்ட பேரிகை (முரசு)களை

யும் மடங்குகின்ற அலைகளையுடைய கடலின்மேல் அடித்துக் கொண்டு ஓடும்படி அரசன் வெண்மையாகிய வாளை உறையிலிருந்து எடுத்தான்.

### 4. ஐயவதிசயம்

ஐயப்பாடு தோன்றுங்கால் வியப்புடன் எண்ணுமாறு அமைந்து கிடத்தல் ஐயவதிசயம் ஆகும்.

"உள்ளம் புகுந்தே யுலாவும் ஒருகாலென்
உள்ளம் முழுதும் உடன்பருகும்—ஒள்ளிழைநின்
கள்ளம் பெருகும் விழிபெரிய வோகவல்வேன்
உள்ளம் பெரிதோ வுரை."

பொருள் : ஒட்பம் பொருந்திய அணிகளையுடையாய்! நினது கள்ளமிக்க விழிகளானவை எனது உள்ளத்துப் புகுந்து உலாவுதலால் சிறிதாய்த் தோன்றின; அவை புகுந்து என்னுள்ளம் முழுதும் தமதுள்ளே அடக்கினமையின் அவ்வுள்ளம் சிறிதாய்த் தோன்றிற்று. இவற்றுள் விழிபெரியவோ? உள்ளம் பெரிதோ? சொல்வாயாக.

### 5. துணிவதிசயம்

துணியுங்கால் அதிசயமாகக் காட்டித் துணியுமாறு அமைந்து கிடத்தல் துணிவதிசயம் ஆகும்.

"பொங்கிச் செறிந்து புடைதிரண்டு மீதிரண்டு
செங்கலசக் கொங்கை திகழுமால்—எங்கோன்
தில்லையே யன்னார் இவரல்குல் தேரின்மேல்
இல்லையோ வுண்டோ இடை.!"

பொருள் : வளர்ந்து நெருங்கி அடிப்பரப்புமிக்குத் திரண்டு மேலே இரண்டு சிவந்த குடம் போன்ற முலைகள் விளங்கின; ஆதலால், எம் தலைவனாகிய சிவபெருமானுடைய தில்லைப்பதியை ஒத்த இவருடைய அல்குலாகிய தேரின் மேல், இடையில்லையோ? உண்டு.

இல்லையோ என்பதனுள் உள்ள ஓகாரம் எதிர் மறைப்பொருளது; உண்டோ என்பதனுள் உள்ள ஓகாரம் அசைநிலை.

### 6. திரிபதிசயம்

ஒன்றனை வேறொன்றாகத் துணியும் வழி அதிசயம் தோன்றுமாறு கூறுதல் திரிபதிசயம் ஆகும். சிலர் இதனை 'மயக்கவணி' யென்றும் கூறுவர்.

"திங்கள் சொரிநிலவு சேர்வெள்ளி வள்ளத்துப்
பைங்கிள்ளை பாலென்று வாய்மடுக்கும்—
அங்கயலே
காந்தர் முயக்கொழிந்தார் கைவறிதே நீட்டுவரால்
ஏந்திழையார் பூந்துகிலா மென்று!"

பொருள் : நிலாமுற்றத்திருந்த வெள்ளிக்கிண்ணத்து உள்ள நிலவைப் பசுங்கிளிகள், பாலென்று கருதி வாய் மடுக்கும். அதுவேயன்றி, அங்கு ஓர் புறத்துத் தம் கணவரைப் புணர்ந்து நீங்கினாராகிய மகளிர் தாம் நீக்கிய துகிலென (ஆடையென)க் கருதி அந்நிலவிலே கையை நீட்டுவார்.

## 12. தற்குறிப்பேற்ற வணி

54. பெயர்பொரு ளல்பொரு ளெனவிரு பொருளினும்
இறல்பின் விளைதிற னன்றி யயலொன்று
தான்குறித் தேற்றுதல் தற்குறிப் பேற்றம்.

புடை யெர்ச்சியுடைய பொருளும், புடைபெயர்ச்சி இல்லாப் பொருளும் என்னும் இரண்டு பொருளிடத்தும் இயல்பாக நிகழும் தன்மையன்றிப் புலவன் தான் எண்ணிய வேறொன்றினை அவற்றின் கண் ஏற்றிச் சொல்வது தற்குறிப்பேற்றமென்னும் அணியாம்.

### 1. பெயர் பொருள் தற்குறிப்பேற்றம்

இயக்கமுடைய பொருளின் மீதும் புலவன் தான் கருதிய கருத்தினை ஏற்றிக் கூறுதல் இதுவாகும்.

"மண்படுதோட் கிள்ளி மதயானை மாற்றரசர்
வெண்குடையைத் தேய்த்த வெகுளியால்—
விண்படர்ந்து
பாயுங்கொ லென்று பனிமதியம் போல்வதூஉம்
தேயும் தெளிவிசும்பில் நின்று."

பொருள்: நிலவுலகினைச் சுமந்த தோள் வலியுடைய சோழனுடைய மதயானையானது மாறுபட்ட மன்னர்களுடைய வெண்கொற்றக் குடையைச் சீறிச் சிதைத்த வெகுளியாலே நம்மேலும் வந்து பாயுமோ வென்று குளிர்ச்சியுடைய விண்ணிலே நிறைமதியம் எனப்படுவதும் தேயாநிற்கும், தெளிவுடைய விசும்பின்கண் நின்று.

### 2. பெயராத பொருள் தற்குறிப்பேற்றம்

இயக்கமில்லாத (நிலையான) பொருளைப் பற்றிக் கூறுங்காலும் புலவன் தான் கருதியவற்றை ஏற்றிக் கூறுதல் இது.

"வேனில் வெயிற்குலர்ந்த மெய்வறுமை கண்டிரங்கி
வானின் வளஞ்சுரந்த வண்புயற்குத்—தானுடைய
தாதுமே தக்க மதுவும் தடஞ்சினையாற்
போதுமீ தேந்தும் பொழில்."

பொருள்: முதுவேனிற் காலத்துச் சூரியன் வெப்பத்திற்கு ஆற்றாது வாடிய தமது மெய் வறுமை கண்டு இரக்கமுற்று, வானின்கண் நின்று மழை வளத்தைப் பொழிந்து தமது வாட்டம் நீங்கின முகிலுக்குப் பொழில்கள் தங்களிடத்து உண்டாகிய மேன்மை பொருந்திய

தாதோடு கூடிய மலர்களையும், தங்களிடத்துள்ள தேனையும், தமது பெரிய கிளைகளாகிய கைகளாலே மேல் நோக்கித் தாங்கி நிற்கும்.

55. அன்ன போலெனும் அவைமுத லாகிய
சொல்நிலை விளங்கும் தோற்றமும் உடைத்தே.

'அன்ன', 'போல' என்பவை முதலாகிய உவமை உருபுகள் சில புணர்ந்து விளங்கும் தன்மையுமுடைத்தாம்; அத் தற்குறிப்பேற்றம் என்னும் அணி.

''காமருதேர் வெய்யவ னெங்கும் கரம்பரப்பித்
தேமருவு சோலை மலர்திறக்கும்—தாமரையின்
தொக்க விதழ்விரித்துப் பார்க்கும்
தொலைந்திருள் போய்ப்
புக்க புரைதிளைப்பான் போல்.''

பொருள்: அழகு பொருந்திய தேரினையுடைய சூரியனானவன் இருளானது தனக்குப் புறங்கொடுத்து மறைந்துபுகுந்த இடத்தை ஆய்ந்து பார்ப்பவன் போல எவ்விடத்திலும் தன்னுடைய கதிர்களாகிய கைகளை விரித்து நீட்டித் தேன் பொருந்திய சோலையிலுள்ள மலர்களை மலரச் செய்து பார்ப்பான்; மூடிய தாமரை மலரின் இதழ்களைத் திறந்து நோக்குவான்.

புரை—இடம். திளைத்தல்—ஆராய்தல். தொக்க—குவிந்த. இங்குப் 'போல்' என்ற உவமவுருபு தற்குறிப்பேற்ற வுருபாக வந்தவாறு காண்க.

## 13. ஏதுவணி

56. யாதன் திறத்தினு மிதனின்இது விளைந்தென்(று)
ஏதுவிதந் துரைப்ப தேது வதுதான்
காரக ஞாபக மெனவிரு திறப்படும்.

யாதாயினும் ஒரு பொருள் கூறுபாட்டிடத்து இத னால் இது நிகழ்ந்ததென்று காரணத்தைச் சிறப்பாக எடுத்துச் சொல்லுவது ஏதுவென்னும் அணியாம்; அது காரகவேது என்றும், ஞாபக வேது என்றும் இரண்டு கூறு படும்.

கூறு—வகை. ஏது—காரணம். சந்திரலோகம் என்னும் அணிநூலுடையார், காரணத்துடன் காரியத்தையும் சேர்த்துச் சொல்லுவது ஏதுவணி என்று கூறுவர்.

### (1) காரக வேது

57. முதல்வனும் பொருளும் கருமமும் கருவியும்
ஏற்பது நீக்கமும் எனவிவை காரகம்.

கருத்தா, பொருள், காரியம், கருவி, ஏற்பது, நீக்கம் எனச் சொல்லப்பட்ட இவையாறும் காரணமாகத் தோன்றுவது காரக (செயல்) ஏதுவாம்.

#### 1. கருத்தா காரக வேது

கருத்தாவின் செயலினை ஏதுவாகக் காட்டல் இது.

''எல்லைநீர் வையகத்(து) எண்ணிறத்த
எவ்வுயிர்க்கும்
சொல்லரிய பேரின்பம் தோற்றியதால்—முல்லைசேர்
தாதலைத்து வன்கொன்றைத் தாரலைத்து
வண்டார்க்கப்
பூதலத்து வந்த புயல்.''

முல்லைப் பூவிலுள்ள மகரந்தங்களை அசைத்து, வளப்பம் பொருந்திய கொன்றை மலர்களையும் அசைத்து, வண்டுகள் இசையைச் செய்யும்படி, பூமி யினிடத்து வந்த காற்றானது, கடலால் சூழப்பட்ட அப் புவியிலுள்ள அளவில்லாத எல்லா உயிர்கட்கும் அள

விட்டுத் சொல்லுதற்கரிய பெரிய இன்பத்தைக் கொடுத்தது.

இஃது ஆக்கம், அதாவது நன்மை செய்தல். எல்லை நீர்—கடல்; பூமிக்கு எல்லையாக வுடையது என்பது இதன் பொருள். புயல்—காற்று; மேகமெனினுமாம்.

## 2. பொருட்காரக வேது

பொருட்களின் செயலினை ஏதுவாக்கிக் காட்டல் இது.

''கனிகொள் பொழிலருவி கைகலந்து சந்தின்
பனிவிரவிப் பாற்கதிர்கள் தோய்ந்து—
தனியிருந்தோர்
சிந்தை யுடனே யுயிருணக்கும் தென்மலயம்
தந்த தமிழ்மா ருதம்.''

தென் திசையிலுள்ள பொதிகை மலையினால் தரப் பெற்ற தமிழோடு கூடிய தென்றற் கற்றானது சோலைகளால் உதிர்க்கப்பட்ட கனிகளோடு கலந்து பாய்கின்ற அருவியினிடத்தே கலந்து, சந்தனத்தின் குளிர்ச்சி யுடனே பொருந்தி, பாலன்ன நிலவுக் கதிர்களிற் படிந்து, தன்னியற்கை யொழிந்து, தலைவரைப் பிரிந்து தனியாக விருந்தோரின் உள்ளத்துடனே உயிரையும் வாட்டியது.

இஃது அழிவுப் பொருளையுணர்த்திற்று; என்னை! தீங்கு செய்தல் கூறப்பட்டமையால் இஃது அழிவெனப் பட்டது. கை—இடம். உணக்கல்—வாட்டுதல். சந்து—சந்தனம்.

## 3. கருமகாரக வேது

வினையின் செயற்பாட்டினை ஏதுவாக்கிக் காட்டுதல் இது.

"மலையின் அலைகடலின் வாளரவின் வெய்ய
தலையிற் பயின்ற தவத்தால்—தலைமைசேர்
அம்மாதர் புல்லு மபயன் புயம்புணர
எம்மா தவம்புரிந்தோம் யாம்."

பொருள்: விந்திய மலையிலும், அலையுடைய கடலிலும் கொடுமை மிக்க அரவின் வெய்ய தலையிலும் நின்று செய்த தவத்தினாலே தலைமை பெற்ற வெற்றித் திரு, பொருட் செல்வி, பூ மடந்தை ஆகிய அந்த மகளிர்கள் மூவராலும் தழுவப்பட்ட சோழனுடைய தோளைத் தழுவுதற்கு யாம் எவ்வகைச் சிறந்த தவம் ஆற்றினோம்.

மலை—விந்திய மலை; வெற்றிக்குத் தலைவியாகிய கொற்றவை விந்திய மலையில் வாழ்பவள். இலக்குமி பாற்கடலில் வாழ்பவள். பூமடந்தை ஆதிசேடன் தலையின் மேற்றங்குபவள். அபயன்—பயமற்றவன்; சோழன்.

### 4. கருவிகாரக வேது

துணைக் காரணத்தின் செயலினை ஏதுவாக்கிக் கூறுதல் இது.

கரடத்தான் மாரியும் கண்ணால் வெயிலும்
நிரைவயிரக் கோட்டால் நிலவும்—சொரியுமால்
நீளார்த் தொடையதுல னேரார் கலிங்கத்து
வாளால் கவர்ந்த வளம்.

பொருள் : மதநீர் ஒழுக்கினாலே மழையையும், கண்ணின் கோபத்தாலே வெயிலையும், நிரையான வயிரப் பூனையுடைய தந்தங்களின் வெண்மையால் நிலவையும் சொரிந்தது, நீண்ட ஆத்திப்பூ மாலையையுடைய ஒப்

பற்றவனாகிய சோழன், தன் பகைவர் வாழும் கலிங்க நாட்டிற் சென்று வாளாண்மையாலே கைப்பற்றிக் கொணர்ந்த செல்வமாகிய யானைத்திரள்.

கரடம்—மதநீர்—நிரை—வரிசை. சொரிதல்—கொடுத்தல். ஆர்—ஆத்தி. அதுலன்—ஒப்பில்லாதவன்.

### (2) ஞாபக வேது

58. அவையல பிறவின் அறிவது ஞாபகம்.

மேலே கூறப்பட்ட வரையறுக்கப்பட்ட காரண மின்றிப் பிற காரணங்களால் உய்த்துணரத் தோன்றுவது ஞாபக வேதுவாம்.

"காதலன்மே லூடல் கரையிறத்தல் காட்டுமால்
மாதர் நுதல்வியர்ப்ப வாய்துடிப்ப—மீது
மருங்குவளை வின்முரிய வாளிடுக நீண்ட
கருங்குவளை சேர்ந்த கருத்து.''

பொருள் : பெண்களின் நெற்றி வியர்க்கவும், வாய் துடிக்கவும் பக்கங்கள் வளையப் பெற்ற புருவங்களாகிய விற்கள் மேலே நெறித்தல் செய்யவும், வாட்படையானது தோற்றுக் குறுகிப்போகும்படி கூர்மைபெற்று நீண்ட கருங்குவளை மலர்போன்ற கண்கள் சிவந்ததன் குறிப்பு, அவர்கள் தம்முடைய தலைவன் மீது கொண்ட பிணக்கு அளவு கடத்தலைத் தெரிவிக்கும்.

ஊடல்—பிணக்கு. கரையிறத்தல்—அளவில்லாமற் போதல்.

### (3) அபாவ வேது

59. அபாவந் தானு மதன்பாற் படுமே.

அபாவம் என்பதுவும் அந்த ஏதுவணியின் பகுதியாக வரும். அபாவம் என்பது ஒன்றனுடைய இன்மையாம்.

60. என்றும் அபாவமும் இன்மைய தபாவமும்
ஒன்றினொன் றபாவமும் உள்ளதன் அபாவமும்
அழிவுபாட் டபாவமும் எனவைந் தபாவம்

1. என்றும் அபாவம், 2. இன்மையதபாவம், 3. ஒன்றினொன்றபாவம், 4. உள்ள தனபாவம், 5. அழிவுபாட்டபாவம் என்று அபாவம் ஐந்து வகையாகச் சொல்லப்பெறும்.

### 1. என்றுமபாவவேது

என்றுமபாவம் என்பது, எக்காலத்தினும் இல்லாத ஒரு தன்மை.

"யாண்டும் மொழிதிறம்பார் சான்றவர் எம்மருங்கும்
ஈண்டு மயில்கள் இனமினமாய்—மூண்டெழுந்த
காலையே கார்முழங்கும் என்றயரேல் காதலர்தேர்
மாலையே நம்பால் வரும்."

பொருள் : இன்று காலையிலே மயில்கள் எல்லாவிடத்திலும் கூட்டங் கூட்டமாகச் சேர்ந்தெழுந்து அகவா நின்றன. அதனால் கார் முழங்குமென்று நீ வருந்தாதொழிக. அறிவுமிகுந்த பெரியோர்கள் எக்காலத்திலேயும் சொன்ன சொல் தவறமாட்டார்கள். ஆகையால் அத்தன்மையினையுடையவராகிய நம்முடைய காதலர் தேரானது மாலையிலே நம்மிடத்தில் வரும். (இங்கே மொழி திறம்புதல் சான்றவர்க்கு எக்காலத்தும் இல்லாத தன்மை).

### 2. இன்மைய தபாவ வேது

இன்மையதபாவம் என்பது இல்லாமையினது இல்லாமை.

"காரார் கொடிமுல்லை நின்குழல்மேற் கைபுனைய
வாராமை யில்லை வயவேந்தர்—போர்கடந்த
வாளையேய் கண்ணி! நுதல்மேல் வரும்பசலை
நாளையே நீங்கும் நமக்கு".

பொருள் : கார்காலத்து ஓங்கிய கொடியை உடைய முல்லையினது பூவை நின்னுடைய கூந்தலின்கண் அழகு பொருந்தச் சூட்ட வருகின்றார் வெற்றியை உடைய அரசர்; ஆகையால் போர்த்தொழில் முடித்த வாளைப் போன்ற கண்களையுடையாய்! நின்னுடைய நெற்றி யின்மேல் உண்டாகிய பசலை விடியற்காலத்தே நீங்கும்.

வாராமை இல்லை என்பது இன்மையது அபாவம்.

### 3. ஒன்றினொன்றபாவ வேது

ஒன்றினொன்றபாவம் என்பது ஒன்றன்கண் ஒன்றனது இல்லாமை.

"பொய்ம்மை யுடன்புணரார் மேலானோர் பொய்ம்மையும்
மெய்ம்மை சூழ் மேலாரை மேவாவாம்—இம் முறையால்
பூவலர்ந்த தாரார் பிரிந்தாற் பொலங்குழையார்
காவலர்சொல் போற்றல் கடன்.

பொருள் : மேலான அறிவையுடையவர்கள் பொய் யோடு சேரமாட்டார்கள்; அப்பொய்யும் மெய் பொருந் திய மேலான அறிவுடையாரைப் பொருந்தாதாகும். இம் முறைமையினால் பொலிவமைந்த மாலையை உடைய தலைவர் பிரிந்த காலத்தில் பொற்குழையை உடைய தலைவியர் குறித்தபருவத்தை நோக்குதல் கடமையாகும்.

இங்கே பொய்ம்மையை மேலானோர் சேராமையும், மேலானோரைப் பொய்ம்மை சேராமையும் ஒன்றின்கண் ஒன்றினது இன்மை.

### 4. உள்ள தனபா வேது

உள்ள தனபாவம் என்பது ஓரிடத்தில் உள்ள பொருள் வேறோரிடத்திலும் வேறோர் காலத்திலும் இல்லாமை.

''கரவொடு நின்றார் கடிமனையிற் கையேற்
றிரவொடு நிற்பித்த தெம்மை—அரவொடு
மோட்டாமை பூண்ட முதல்வனை முன்வணங்க
மாட்டாமை பூண்ட மனம்''.

பொருள் : இரப்போருக்கஞ்சி மறைந்திருக்கின்றவர் களுடைய இல்லத்திற்குப் போய் எங்களைக் கையேற்று நிற்கும்படி செய்தது பாம்பையும் பெரிய ஆமையோட்டையும் அணிந்த சிவபிரானை முன்பிறவியில் வணங்காத மனம்.

இங்கே உள்ளது மனம். அதனது இன்மை வணங்காமை.

### 5. அழிவுபாட்டபாவ வேது

அழிவுபாட்டபாவம் என்பது முன்னுள்ளது அழிந்து இல்லாமற் போதல்.

''கழிந்த திளமை களிமயக்கம் தீர்ந்த
தொழிந்தது காதல்மேல் ஊக்கம்—சுழிந்து
கருநெறியுங் கூந்தலார் காதல்நோய் தீர்ந்த
தொருநெறியே சேர்ந்த துளம்.

பொருள் : இளமைப்பருவம் நீங்கிப்போய்விட்டது. செல்வத்தினால் வரும் மனக்களிப்பாகிய அறியாமையும் போய்விட்டது. விரும்பிய பொருள்களை அடைய வேண்டி எழுந்த ஊக்கமும் ஒழிந்து போய்விட்டது. சுருண்டு நெறித்தலையுடைய கரிய கூந்தலமைந்த

பெண்கள்மேல் வைத்த விருப்பமும் தீர்ந்து போய்விட்டது. என்னுடைய உள்ளம் ஒரே வழியை நாடியது.

இங்கே, 'இளமை கழிதல்', 'மயக்கந் தீர்தல்' முதலியன அழிவுபாட்டபாவம்.

### (4) சித்திர வேது

61. தூரகா ரியமும் ஒருங்குடன் தோற்றமும்
காரணம் முந்துறூஉம் காரிய நிலையும்
யுத்தமும் அயுத்தமும் முத்தையோ டியலும்

தூர காரியம் முதலாக அயுத்தம் ஈறாகச் சொல்லப் பட்ட இவை ஐந்தும் முன்னையதான ஏது அணியுடன் சேர்ந்து நடக்கும்.

#### 1. தூர காரியவேது

தூரகாரியம் என்பது ஓரிடத்தில் காரணம் நிகழ வேறோர் இடத்தில் காரியம் நிகழ்வது.

"வேறொரு மாதர்மேல் வேந்தன் நகநுதியால்
ஊறுதர இம்மா துயிர்வாடும்—வேறே
இருவரே மெய்வடிவின் ஏந்திழை நல்லார்
ஒருவரே தம்மில் உயிர்.

பொருள் : தலைவியானவள் தலைமகன் வேறொரு பெண்ணின் மார்பகத்தே நகத்தின் நுனியினால் குறியிட இவள் உயிர்வாடுவாள். இம்மாதரார் உருவத்தால் இருவரெனினும் உயிரால் ஒருவரேயாவர்.

வேறொரு பெண் என்றது காதற்பரத்தையை. உயிர் வாடுதல் அப் பரத்தையிடம் நிகழாது வேறோர் இடத்துள்ள தலையிவிடம் நிகழ்ந்து தூரமாயிற்று.

#### 2. ஒருங்குடன் தோற்ற வேது

ஒருங்குடன் தோற்றம் என்பது, காரணமுங் காரியமும் ஒன்றாக நிகழ்வது.

"விரிந்த மதிநிலவின் மேம்பாடும் வேட்கை
புரிந்த சிலைமதவேள் போரும்—பிரிந்தோர்
நிறைதளர்வும் ஒக்க நிகழ்ந்தனவால் ஆவி
பொறைதளரும் புன்மாலைப் போழ்து.

பொருள் : முழுத்திங்கள் நிலவின் மேம்பாடும் வேட்கை மிகுந்த சிலையை உடையவனாகிய காமவேளு டைய போரும் பிரிந்தவர்களுடைய நிலைதளர்வும் ஒன்றாக நிகழ்ந்தன. ஆகையால் தனித்தோர் உயிராகிய பாரத்தைத் தாங்க முடியாத தன்மையையும் புன்கண்மை யையும் இம்மாலைப் பொழுது உடையது.

இங்கே நிலவின் மேம்பாடு, மதனவேள் போர் என்னும் காரணங்கள் 'நிலைதளர்த'லாகிய காரியத்தோடு ஒருங்கே நிகழ்ந்தன.

### 3. காரணம் முந்துறூஉப் காரியநிலையேது

காரணம் முந்துறூஉம் காரியநிலை யென்பது காரணத்திற்கு முன்னர்க் காரியம் நிகழ்வது.

"தம்புரவு பூண்டோர் பிரியத் தனியிருந்த
வம்புலவு கோதையர்க்கு மாரவேள்—அம்பு
பொருமென்று மெல்லாகம் புண்கூர்ந்த மாலை
வருமென் றிருண்ட மனம்

பொருள் : தம்மைக் காப்பாற்றும் தொழிலைப் பூண்ட தலைவர் பிரிதலாலே தனிமையாக விருந்த வாசனை பொருந்திய கூந்தலையுடைய பெண்களுக்குக் காமனுடைய கணை தைக்குமென்று மென்மையை உடைய மார்பு புண்ணாகின்றது. மாலைக்காலம் வரு மென்று அவர்களுடைய மனம் இருண்டது.

### 4. யுத்த வேது

யுத்தம் என்பது காரணத்திற் கேற்ற காரியம் நிகழ் வது.

"பொன்னி வளநாடன் கைவேல் பொழிநிலவால்
முன்னர் அசைந்து முகுளிக்கும்—தன்னேர்
பொரவந்த வேந்தர் புனைகடகச் செங்கை
அரவிந்தம் நூறா யிரம்.

பொருள் : சோழனானவன் கையில் தாங்கிய வேலானது பொழிகின்ற நிலவினால் முன்பு நடுங்கிக் குவியாநிற்கும்; முன்னே நின்று போர் செய்தற்கு எதிர்த்த அரசருடைய அணியப்பட்ட கடகத்தையுடைய சிவந்த கையாகிய தாமரைகள் பலவும் உண்டு.

### 5. அயுத்தவேது

அயுத்தம் என்பது காரணத்திற்குப் பொருந்தாத காரியம் நிகழ்வது.

"இகன்மதமால் யானை அநபாயன் எங்கோன்
முகமதியின் மூரல் நிலவால்—நகமலர்வ
செங்கயற்கண் நல்லார் திருமருவு வாள்வதன
பங்கயங்கள் சாலப் பல.

பொருள்: வெற்றியையும் மதத்தையும் உடைய பெரிய யானைகட்குரியவனாகிய அநபாயன் என்னும் எங்கள் அரசனுடைய முகமாகிய முழுத்திங்களின்கண் உண்டாகின்ற முறுவலின் வெள்ளிய நிலவினால், செம்மையான கயல் போன்ற கண்களையுடைய பெண்களின் அழகு பொருந்திய ஒளி தங்கிய முகத்தாமரைகள் பல விளங்குமாறு மலர்கின்றன.

### (5) ஐய வேது

"மாத ருமைவாய் மழலை மொழியாலோ
ஓது மறையின் ஒலியாலோ—யாதாலோ
கோலம் இருதிறனாக் கொண்டான் திருமிடற்றின்
ஆலம் அமிழ்தான வாறு."

பொருள்: உமையாளுடைய வாயில் உள்ள இனிய மழலைச் சொல்லாலோ, அல்லது ஓதப்படுகிற மறையின் ஒலியாலோ இரண்டனுள் எக்காரணத்தாலோ இரண்டு வடிவமாகத் திருமேனியைக் கொண்ட சிவபிரானுடைய அழகிய கண்டத்தில் உள்ள நஞ்சம் அமுதாகியது.

## 14. நுட்பவணி

62. தெரிபுவேறு கிளவாது குறிப்பினுந் தொழிலினும்
அரிதுணர் வினைத்திறம் நுட்பமாகும்.

அறிந்து கொண்டு வேறு வகையாகக் கூறாது, குறிப்பினாலாவது தொழிலினாலாவது அரிதாக நோக்கி யுணருந்தன்மையை உடையது நுட்பம் என்னும் அலங் காரமாகும்.

### 1. குறிப்புநுட்பம்

"காதலன் மெல்லுயிர்க்குக் காவல் புரிந்ததால்
பேதையர் ஆயம் பிரியாத—மாதர்
படரிருள்கால் சீக்கும் பகலவனை நோக்கிக்
குடதிசையை நோக்குங் குறிப்பு.

பொருள்: பேதைமை தங்கிய மாதர் கூட்டத்தைப் பிரி யாத தலைவியானவள் உலகத்தில் பரவுகின்ற இருளைப் போக்கும் கதிரவனைப் பார்த்துப் பிறகு மேற்குத் திக்கைப் பார்க்குங் குறிப்பானது தலைவனுடைய மென்மையான உயிருக்குப் பாதுகாவலைச் செய்தது.

### 2 தொழில்நுட்பம்

"பாடல் பயிலும் பணிமொழி தன்பணைத்தோள்
கூடல் அவாவால் குறிப்புணர்த்தும்—ஆடவற்கு
மென்றீந் தொடையாழின் மெல்லவே தைவந்தாள்
இன்றீங் குறிஞ்சி யிசை

பொருள்: பாடுந்தொழிலைச் செய்கின்ற குளிர்ந்த மொழிகளையுடையவள் தன்னுடைய பெருத்த தோள் களினாலே தலைவனைத் தழுவவேண்டும் என்னும் அவா வால் தலைவனுக்குத் தன்னுடைய உள்ளக் கருத்தை உணர்த்தா நின்றாள். இனிய ஓசையினையுடைய குறிஞ்சி யாகிய பண்ணை மெல்லிய நல்ல நரம்பையுடைய யாழிலே முறையாகப் பாடினாள்.

## 15. இலேசவணி

63. குறிப்பு வெளிப்படுக்குஞ் சத்துவம் பிறிதின்
மறித்துரை யாடல் இலேச மாகும்.

எண்ணியதனை வெளிப்படுத்தும் நன்மையாகிய குணங்களை வேறொன்றால் நிகழ்ந்தனவாக மறைத்துக் கூறுவது இலேசம் என்னும் அணியாகும்.

"கல்லுயர்தோட் கிள்ளி பரிதொழுது கண்பனிசோர்
மெல்லியலார் தோழியர்முன் வேறொன்று—சொல்லு
வரால்
பொங்கும் படைபரப்ப மீதெழுந்த பூந்துகள் சேர்ந்
தெங்கண் கலுழ்ந்தனவால் என்று.

பொருள்: மலைபோன்ற பெரிய தோள்களை யுடைய சோழமன்னன் ஏறிய குதிரையைத் தொழுது நீரொழுகுங் கண்களையுடைய மெல்லிய நடையை உடைய பெண்கள் எம்முடைய கண்களில் நீர் ஒழுகு வதற்குக் காரணம் சினத்தையுடைய படையானது பரவி வருதலால் விண்ணில் எழுந்த பூந்துகள் எம்முடைய கண் களிலே சேர்ந்த படியினாலேதான் என்று கூறுவர்.

இதனில் கண்ணீர் சிந்தியதற்குக் காரணம் சோழ மன்னனைக் கண்டதனால் ஆகவும் அதனை மறைத்துப் புழுதியானது கண்ணிற் சேர்ந்தபடியால் கண்ணீர் ஒழுகா நின்றது என்று கூறியமை காண்க.

"மதுப்பொழிதார் மன்னவனை மால்கரிமேல் கண்ட
விதிர்ப்பும் மயிரரும்பும் மெய்யும்—புதைத்தாள்
வளவா ரணநெடுங்கை வண்டுவலை தோய்ந்த
இளவாடை கூர்ந்த தென."

பொருள்: தேன்பொழிகின்ற மாலையை அணிந்த சோழன் பெரிய யானையின்மேல் வருதலைப்பார்த்து, அதனால் உண்டாகிய தன்னுடைய உடல் நடுக்கத்தையும் மெய்ம்மயிர்ப் பொடிப்பையும், அவன் ஏறிவந்த வளப்பம் உடைய யானையின் நெடிய கையில் உண்டாகிய சிறந்த நீர்த் திவலையைக் கொண்டு வந்த இளவாடை நனைத்ததனாலே நேர்ந்ததென்று மறைத்துக் கூறினாள்.

### இதுவுமது

64. புகழ்வது போலப் பழித்திறம் புனைதலும்
பழிப்பது போலப் புகழ் புலப்படுத்தலும்
அவையும் அன்னவென் றறைகுநர் உளரே.

ஒன்றைப் புகழ்வதைப் போலப் பழித்துரைத்தலும் பழித்தலைப் போலப் புகழ்ந்து உரைத்தலும் ஆகிய இவைகளும் முன்கூறிய இலேச வணியின் கூறாகும் என்று சொல்லுகின்றவர்களும் இருக்கின்றனர்.

### 1 புகழ்வது போலப் பழித்தல்

"மேய கலவி விளைபொழுது நம்மெல்லென்
சாயல் தளராமல் தாங்குமால்—சேயிழாய்!
போர்வேட்ட மேன்மைப் புகழாளன் யாம் விரும்பித்
தார்வேட்ட தோள்விடலை தான்.

பொருள்: தோழியே! எப்பொழுதும் போர்த் தொழிலையே விரும்பிய மேன்மையான புகழையுடையவனும் நம்மால் விரும்பி மாலையணியப்பட்ட தோள்களை

யுடையவனுமாகிய தலைவன், பொருந்திய கலவி நிகழும் பொழுது நம்முடைய மென்மை தளராதவாறு பார்த்துக் கொள்ளுவான்.

### 2. பழிப்பது போலப்புகழ்தல்

"ஆடன் மயிலியலி அன்பன் அணியாகம்
கூடுங்கால் மெல்லென் குறிப்பறியான்—ஊடல்
இளிவந்த செய்கை இரவாளன் யார்க்கும்
விளிவந்த வேட்கை யிலன்

பொருள்: ஆடுகின்ற மயில்போலுஞ் சாயலையுடைய வளே! நம்முடைய காதலனது அழகிய தோளை யாம் கூடும் பொழுது நம்முடைய இனிய நலத்தைப் பாராட்ட அறியானாகையாலும் ஊ ட ற் க ண் தகுதியல்லாதவை களைச்செய்து இரக்கின்ற இரவாளனாகையாலும் எவர்க் கும் வெறுக்கத்தக்க ஆசையுடையவனல்லவாகையாலும் இகழ்தற்கு ஏதுவாயினான்.

## 16. நிரனிறையணி

65. நிரல்நிறுத் தியற்றுதல் நிரல்நிறை அணியே

சொல்லையும் பொருளையும் வரிசையாக நிறுத்தி நேரே பொருள் கொள்வது நிரல்நிறை என்னும் அணி யாகும்.

1. வரிசையாக நிறுத்தி நேராகப் பொருள் கொள்வது

"காரிகை மென்மொழியால் நோக்கால் கதிர்
முலையால்
வார்புருவத் தாலிடையால் வாய்த்தளிரால்—நேர்
தொலைந்த
கொல்லி வடிநெடுவேல் கோங்கரும்பு விற்கரும்பு
வல்லி கவிர்மென் மலர்".

பொருள்: அழகமைந்த மாதினுடைய மென்மையான சொல்லாலும்,பார்வையாலும், ஒளி பொருந்திய கொங்கை களாலும், நீண்டபுருவத்தினாலும், இடையினாலும், தளிர் போன்ற மெல்லிய வாயாலும், கொல்லியென்கின்ற இனிமையான பண்ணும் கூர்மை தங்கிய நீண்ட வேலும் கோங்கின் அரும்பும் காமனுடைய வில்லாகிய கரும்பும், பூங்கொடியும் மென்மையுள்ள முருக்கமலரும் அழகை இழந்தன.

சொல், பார்வை, கொங்கை, புருவம், இடை, வாய்த் தளிர் ஆகியவைகளை ஒருவரிசையாகவும், பண், வேல், கோங்கரும்பு, வில், கொடி, முருக்கமலர் ஆகியவைகளை ஒருவரிசையாகவும் கூறியமை காண்க.

2. வரிசையாக நிறுத்தி மொழிமாற்றிப் பொருள்கொள்வது

"ஆடவர்கள் எவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமும் ஊரகமும் பஞ்சரமா—நீடியமால்
நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவன்றோ
மன்றார் மதிற்கச்சி மாண்பு.

பொருள்: நீண்ட திருக்கோலத்தையுடைய திருமால் வெஃகாவையும், பாடகத்தையும், ஊரகத்தையும் தனக்கு இடங்களாகக் கொண்டு அவற்றில் முறையே படுத்தான் இருந்தான் நின்றான். இதுவன்றோ பல அவைகள் பொருந்தியதும் மதிலாற் சூழப் பெற்றதுமாகிய காஞ்சிப் பதியின் பெருமை. இத்தகைய பெருமை வாய்ந்த அப் பதியை மனிதர்கள் எவ்வாறு விட்டு நீங்குவார்கள்?

வெஃகா படுத்த திருக்கோலம்; பாடகம் இருந்த திருக் கோலம், ஊரகம் நின்ற திருக்கோலம்.

## 17. ஆர்வமொழியணி

66. ஆர்வமொழி மிகுப்ப தார்வ மொழியே.

உள்ளே நிகழ்ந்த ஆர்வம்பற்றி நிகழும் மொழி மிகுதியாகத் தோன்றச் சொல்வது ஆர்வமொழி என்னும் அணியாம்.

சொல்ல மொழிதளர்ந்து சோருந் துணைமலர்த்தோள்
புல்ல விருதோள் புடைபெயரா—மெல்ல
நினைவோம் எனில்நெஞ் சிடம்போதா தெம்பால்
வனைதாராய் வந்ததற்கு மாறு.

பொருள் : நினக்கு முன்னே நின்று மறுமொழி கூறு தற்கு முயல்வேமாயின் எங்களுடைய மொழியானது தடுமாறிச் சோர்வுபடுகின்றது. உன்னுடைய இரண்டு தோள்களையுந் தழுவ முயல்வேமாயின் எங்களுடைய இரண்டு தோள்களும் இடமுண்டாக வளர்வனவல்ல. மெல்ல நின்னுடைய புகழை நினைப்போம் என்றால் எங்களுடைய உள்ளம் இடம் போதாது. அழகு செய்யப் பட்ட மாலையை உடையவனே! நீ எம்பால் வந்தற்கு யாது கைம்மாறு செய்வேம்?

## 18 சுவையணி

67. உண்ணிதழ் தன்மை புறத்துத் தோன்ற
எண்வகை மெய்ப்பாட்டின் இயல்வது சுவையே.

உள்ளே நிகழுந் தன்மையானது வெளியிலேநன்றாக விளங்க எட்டுவகையான மெய்ப்பாட்டினாலும் நடப்பது சுவையென்னும் அணியாகும்.

68. அவைதாம்,
வீரம் அச்சம் இழிப்பொடு வியப்பே
காமம் அவலம் உருத்திர நகையே.

மேற்கூறப்பட்ட எட்டு வகையான மெய்ப்பாடுகள் வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், உருத்திரம், நகை என்பனவாம்.

### 1. வீரச் சுவை

சேர்ந்த புறவின் இறைதன் திருமேனி
ஈர்ந்திட் டுயர்துலைதான் ஏறினான்—நேர்ந்த
கொடைவீர மோமெய்ந் நிறைகுறையா வன்கண்
படைவீர மோசென்னி பண்பு!''

பொருள் : தன்னிடத்தே அடைக்கலம் புகுந்த புறவினது எடைக்காகத் தன் அழகிய உடம்பில் உள்ள தசையை அறுத்து வைத்தும் எடை சரியாகாமற்போகவே தானும் உயர்ந்த துலையில் ஏறினான். இவ்வாறு ஏறிய இத்தன்மை தன்னுடைய கொடையின் வீரமோ மெய் யொழுக்கங்குறையாத வலிமையை உடைய படையின் வீரமோ? இவ்விரண்டும் அன்று. இது சோழனுடைய தன் மையேயாகும்.

இச்செய்யுளில் தானவீரம் அமைந்திருத்தலைக் காண்க.

### 2. அச்சச் சுவை

கைநெரித்து வெய்துயிர்ப்பக் கால்தளர்ந்து மெய்
பனிப்ப
மையரிக்கண் நீர்ததும்ப வாய்புலர்ந்தாள்—தையல்
சினவேல் விடலையால் கையிழந்த செங்கண்
புனவேழம் மேல்வந்த போது.

பொருள் : சினம் பொருந்தியவனும் வேற்படை தாங்கியவனுமான வீரனால் தும்பிக்கையை இழந்த சிவந்த கண்களையுடைய காட்டு யானை தன் முன்னே வந்த பொழுது ஒரு பெண், தன்னுடைய கைகளை நெரித்துக்கொண்டு பெருமூச்சுண்டாகவும், கால்தளரவும் உடல் நடுங்கவும் மையெழுதப்பெற்ற செவ்வரிகள் பொருந்திய கண்களில் நீர் ததும்பவும் வாயுலர்ந்து போனாள்.

இச் செய்யுளில் அச்சத் தன்மையின் இயல்பு அமைந்து நிற்றலைக் காண்க.

### 3. இழிப்புச் சுவை

உடைதலையும் மூளையும் ஊன்தடியும் என்பும்
குடருங் கொழுங்குருதி ஈர்ப்ப—மிடைபேய்
பெருநடஞ் செய்பெற்றித்தே கொற்றப்போர்க் கிள்ளி
கருநடரைச் சீறுங் களம்.

பொருள் : வெற்றியமைந்த போரினையுடைய சோழன் கர்நாடகதேசத் தரசர்களைச் சினந்து தாக்கிய போர்க்களமானது உடைந்து போன தலைகளையும், மூளைகளையும், நிணத்தையும் தசையையும், எலும்பையும், குடலையும் மிகுந்த குருதிப் பெருக்கானது இழுக்க மிகுதியான பேய்கள் மிகுதியாகக் கூத்தாடுந் தன்மையை உடையது.

இச்செய்யுளில் அருவருப்புத் தோன்ற இழிப்புச் சுவை விளங்குகின்றது.

### 4. வியப்புச் சுவை

முத்தரும்பிச் செம்பொன் முறிததைந்து பைந்துகிரின்
தொத்தலர்ந்து பல்கலனும் சூழ்ந்தொளிரும்—
கொத்தினதாம்
பொன்னேர் மணிகொழிக்கும் பூங்கா விரிநாடன்
தன்னேர் பொழியுந் தரு.

பொருள் : பொன்னையும் அழகிய மணிகளையும் இருபக்கங்களிலும் அலைகளால் ஒதுக்குகின்ற அழகிய காவிரி நாட்டையுடையவனுக்கு, நேராக வளத்தினைச் சொரியுங் கற்பகதருவானது,முத்தாகிய அரும்பையரும்பிச் சிவந்த பொன்னாகிய தளிரினாலே நெருங்கிப், பச்சைப் பவளமாகிய கொத்துக்களைத் தோற்றுவித்துப் பலவகை

யாகிய அணிகலன்களாலுஞ் சூழப்பெற்று விளங்குங் கிளைகளை உடையதாக இருக்கும்.

இச்செய்யுளில் வியப்புச்சுவை தோன்றுமாறு கற்பக மரத்தை அழகாகக் கூறுதலைக் காண்க.

"செம்பொன் வேங்கை சொரிந்தன சேயிதழ்க்
கொம்பர் நல்லில வங்கள் குவிந்தன
பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கிளந்
திங்கள் வாழ்சடை யாள்திரு முன்றிலே (சிலம்பு)

### 5. காமச் சுவை

திங்கள் நுதல்வியர்க்கும் வாய்துடிக்கும் கண்சிவக்கும்
அங்கைத் தளிர்நடுங்கும் சொல்லசையும்—கொங்கை
பொருகாலு மூடிப் புடைபெயருங் காலும்
இருகாலும் ஒக்கும் இவர்க்கு

பொருள் : தனங்கள் என்மீது அழுந்துமாறு இவர் என்னைத் தழுவுங்காலத்திலும், என்பால் ஊடல்கொண்டு பக்கத்திலே நீங்கிச் செல்லுகிற காலத்திலும் இவர்க்கு மூன்றாம்பிறைத் திங்களைப் போன்ற நெற்றிவியர்க்கும்: வாய்துடிக்கும்; கண் சிவக்கும்; அழகிய கைகள் நடுங்கும்; சொல் குளறும். தழுவுங்காலத்திலும் பிரியுங் காலத்திலும் இச்செயல்கள் இவர்க்கு ஒரு தன்மையனவாகவே நிகழும்.

இச்செய்யுளில் காமச்செயலின் தன்மை புணர்தல் பிரிதல் இரண்டிலும் ஒரு தன்மையாய்க் கூறப்பட்டிருத் தலைக் காண்க.

### 6. அவலச் சுவை

கழல்சேர்ந்த தாள்விடலை காதலிமெய் தீண்டும்
அழல்சேர்ந்து தன்னெஞ் சயர்ந்தான்—குழல்சேர்ந்த

தாமம் தரியா தசையுந் தளிர்மேனி
ஈமம் தரிக்குமோ என்று.

பொருள் : வீரக்கழலையணிந்த கால்களையுடைய வீரனானவன் தன்னுடைய காதலியின் உடலைத் தீண்டிய தீயைச் சேர்ந்து, கூந்தலில் அணிந்த மாலையைச் சுமக்க முடியாமல் அசைகின்ற தளிர்போன்ற உடலானது விறகடுக்கின் தீயைப்பொறுக்க வல்லதோ என்று தன்னுடைய உள்ளம் வருந்தினான்.

இச்செய்யுளில் தலைவியினது நிலைகண்டு வருந்திய சோகதுன்பச்சுவை அமைந்திருத்தல் காண்க.

### 7. உருத்திரச் சுவை

கைபிசையா வாய்மடியாக் கண்சிவவா
வெய்துயிரா
மெய்குலையா வேரா வெகுண்டெழுந்தான்—
வெய்யபோர்த்
தார்வேய்ந்த தோளான் மகளைத் தருகென்று
போர்வேந்தன் தூதிசைத்த போது.

பொருள் : கொடிய போரிலே வெற்றிமாலையை அணிந்த தோள்களையுடைய அரசன் மகளைத் திருமணஞ் செய்து தருக என்று போர் செய்யும் அரசன் தூதனுப்பிச் சொன்ன பொழுது, கைகளைப் பிசைந்து, வாயை மடித்துக் கண் சிவத்து, வெப்பமாகப் பெருமூச் செறிந்து உடல் நடுக்குற்று வியர்த்துச் சினங்கொண்டு போர்புரிய எழுந்தான்.

இச் செய்யுளில் சினத்தால் உண்டான கொதிப்பு மிகுதிப்பட்டு விளங்குதலைக் காண்க.

### 8. நகைச் சுவை

நாண்போலுந் தன்மனைக்குத் தான்சேரல் இந்நின்ற
பாண்போலும் வெவ்வழலிற் பாய்வதூஉம்—
காண்தோழி

கைத்தலங் கண்ணாக் களவுகாண் பானொருவன்
பொய்த்தலைமுன் நீட்டியற்றுப் போந்து.

பொருள் : தோழியே! நீ அறிவாயாக! தன்னுடைய இல்லத்திற்குத் தான் வருவதற்கும் நம்முடைய தலை மகனுக்கு வெட்கம் போலும். அவர் சுடுகின்ற தீயிற் குதிப்பதாகச் சொல்வதும் இப்பாணனுடைய சமயத்திற் கேற்ற கற்பனைப் பொருளேயாகும். கைகளையே கண்ணாகக்கொண்டு இருளிற் களவு செய்யுங் கள்ளன் களவு செய்யுமிடத்திற்குச் சென்று (கன்னத் துளையின் வாசலில்) முன்னே பொய்த் தலையை நீட்டுகின்ற தன்மையைப் போன்றதாம்.

களவு செய்யச் செல்வோர் கன்னக் கோலால் துளை செய்யப் பெற்றவழியில் முதற்கண் பொய்யான தலை யொன்றைத் தடியில் மாட்டி உள்ளே நீட்டுவர். அத் தலக்கு யாதுந் தொல்லை நேரா திருத்தலைக் கண்டு உள்ளே இருப்பவர் உறங்குதலையும் அல்லது ஆள் இல்லாத தன்மையையும் உணர்ந்து கொண்டு உள்ளே புகுவர்.தலைவன் பாணனை விட்டு ஆராயும் நிகழ்ச்சியும் இத்தகையதாம் என்று தலைவி உரைக்கிறாள். இதனில் நகைச்சுவை அமைந்திருத்தலைக் காண்க.

## 19. தன்மேம்பாட்டுரை

69. தான்றன் புகழ்வது தன்மேம் பாட்டுரை

ஒருவன் தன்னைத்தானே புகழ்வது தன் மேம்பாட் டுரை என்ற பெயரினையுடைய அணியாகும்.

எஞ்சினார் இல்லை எனக்கெதிரா இன்னுயிர் கொண்
டஞ்சினார் அஞ்சாது போயகல்க—வெஞ்சமத்துப்
பேரா தவராகத் தன்றிப் பிறர்முதுகில்
சாராஎன் கையிற் சரம்.

பொருள்: கொடிய போரில் எனக்கெதிராக வந்து போர் செய்து தமது இனிய உயிரைக் காப்பாற்றிக் கொண்டு பிழைத்து மிஞ்சியவர் ஒருவரும் இலர். போருக்கு அஞ்சியவர்கள் விலகிப் போவதற்குச் சிறிதும் அஞ்சாமல் விலகிப் போவார்களாக! என்கையாற் செலுத்தப் பெறும் அம்புகள் புறங்கொடுத்து ஓடாதவர்களின் மார்பின் கண்ணே சேருமேயல்லாமல் புறங்கொடுத் தோடுபவர் களின் முதுகினை யடையமாட்டா.

இதனில் தற்புகழ்ச்சி வெளியாதலைக் காண்க.

## 20. பரியாய அணி

70. கருதியது கிளவா தப்பொருள் தோன்றப்
பிறிதொன்று கிளப்பது பரியா யம்மே.

தான் எண்ணியதனைக் கூறாது அப்பொருள் தோன்றுமாறு வேறொன்றைக் கூறுவது பரியாயம் என்னும் அணியாகும்.

''மின்னிகரா மாதே விரைச்சாந் துடன்புணர்ந்து
நின்னிகராம் மாதவிக்கண் நின்றருள் நீ—தன்னிகராம்
செந்தீ வரமலரும் செங்காந்தட் போதுடனே
இந்தீ வரங்கொணர்வல் யான்''.

பொருள்: மின்னற்கொடியை ஒத்த பெண்ணே! வாசனையை உடையதாகிய சந்தனமரத்தோடு சேர்ந்து, உனக்கு ஒப்பாக நிற்கின்ற இக் குருக்கத்தியின் கீழே நிற்பாயாக! தனக்கு ஒப்பான சிவந்த தீயின் ஒளி தெரியு மாறு மலர்ந்த சிவந்த காந்தள் மலருடனே குவளை மலரை நினக்குப் பறித்துக் கொண்டு வருகிறேன்.

இதனில் தலைவியைக் குறியிடத்தில் சேர்த்த தோழி, தலைவன் வருவான் அவனைத் தழுவி நீயிங்கிருப்பாயாக என்பதனை வெளிப்படையாகக் கூறாது, விரைச் சாந்

துடன் புணர்ந்து என்று வேறொரு வகையாகக் கூறிய தைக் காண்க. விரைச் சாந்துடன் புணர்ந்து—வாசனை பொருந்திய சந்தனத்தை யணிந்த தலைவன் மார்பகத் தைச் சேர்ந்து என்னும் பொருளுங் கொள்க.

## 21 சமாகித அணி

71. முந்துதான் முயல்வுறு தொழிற்பயன் பிறிதொன்று
தந்ததா முடிப்பது சமாகித மாகும்.

முன்னே தன்னால் முயற்சி செய்யப்பட்ட தொழி லினது பயனானது அத்தொழிலால் அல்லாமல் வேறொன் றால் நிகழ்ந்ததாகக் கூறி முடிப்பது சமாகிதம் என்னும் அணியாகும்.

''அருவியங் குன்றம் அரக்கன் பெயர்ப்ப
வெருவிய வெற்பரையன் பாவை—பெருமான்
அணியாகம் ஆரத் தழுவினாள் தான்முன்
தணியாத ஊடல் தணிந்து.''

பொருள்: முன்பு தீராத ஊடலையுடையவளாயிருந்த மலையரசன் பெண்ணாகிய உமாதேவியானவள் அருவி யினையுடையதும் அழகு பொருந்தியதுமான கைலை மலையைப் பத்துத் தலைகளையுடையவனாகிய இராவ ணன் பெயர்த்தெடுக்க அதனால் அஞ்சியவளாய்ச் சிவ பெருமானுடைய அழகிய மார்பகத்தை ஊடல் தணிந்து தானே தழுவிக் கொண்டாள்.

இதனிற் சிவபெருமானுடைய முயற்சியில்லாமலே ஊடல் ஒழிந்தமை காண்க.

## 22. உதாத்தவணி

72. வியத்தகு செல்வமும் மேம்படும் உள்ளமும்
உயர்ச்சிபுனைந் துரைப்பது உதாத்த மாகும்.

வியக்கத்தக்க செல்வத்தினது உயர்ச்சியையும், மேம் பட்ட உள்ளத்தினது உயர்ச்சியையும் அழகு பொருந்தக் கூறுவது உதாத்தம் என்னும் அணியாகும்.

### 1. செல்வப் பெருமை

"கன்றும் வயவேந்தர் செல்வம் பலகவர்ந்தும்
என்றும் வறிஞர் இனங்கவர்ந்தும்—ஒன்றும்
அறிவரிதாய் நிற்கும் அளவினதால் அம்ம
செறிகதிர்வேற் சென்னி திரு."

பொருள்: சினக்கின்ற வெற்றியினையுடைய அரசர் களுடைய செல்வங்கள் பலவற்றையும் எப்பொழுதுங் கவர்ந்து கொண்டு வரலாலும், வறிஞர் கூட்டத்தால் தாம் வேண்டியவாறு எடுத்துக் கொள்ளப் பெறுவதாலும் நிறைந்த ஒளியை உடைய வேற்படையைத் தாங்கிய சோழ மன்னனுடைய செல்வமானது சிறிதேனும் அள வறியப்படாததாக நிற்கும்.

இதனுள் செல்வத்தினது சிறப்புக் கூறப்பட்டமை காண்க.

### 2. உள்ளப் பெருமை

"மண்ணகன்று தன்கிளையின் நீங்கி வனம்புகுந்து
பண்ணுந் தவத்திசைந்த பார்த்தன்றான்—
எண்ணிறந்த
மீதண்டர் கோன்குலையும் வெய்யோர்
குலந் தொலைத்தான்
கோதண்ட மேதுணையாக் கொண்டு."

பொருள்: மண்ணரசாட்சியைக் கைவிட்டு, தன் னுடைய சுற்றத்தாரர்களையும் நீங்கிக் காட்டிற்குச் சென்று செய்யத் தொடங்கிய தவத்திலே பொருந்திய அருச்சுனனானவன், மேல் உலகத்தில் உள்ளவர்களாகிய

தேவர்கட்கு அரசனான இந்திரன் நடுங்குமாறு வருகின்ற கொடியவர்களாகிய அசுரர்களின் குலங்கெடுமாறு தன்னுடைய வில்லே துணையாகக் கொண்டு அவர்களைத் தொலைத்தான்.

இதனில் அருச்சுனனது உள்ளத்துயர்ச்சி உரைக்கப் பட்டமை காண்க.

## 23. அவநுதிஅணி

73. சிறப்பினும் பொருளினுங் குணத்தினும் உண்மை
மறுத்துப் பிறிதுரைப்ப தவநுதியாகும்.

சிறப்பு, பொருள், குணம் என்பவைகளின் தன்மையை மறுத்து வேறு கூறுவது அவநுதி என்னும் அணியாகும்.

### 1. சிறப்பு அவநுதி

"நறைகமழ்தார் வேட்டார் நலனணியும் நாணும்
நிறையு நிலைதளரா நீர்மை—அறநெறிசூழ்
செங்கோல னல்லன் கொடுங்கோலன் தெவ்வடு
போர்
வெங்கோப மால்யானை வேந்து".

பொருள்: நறுமணத்தையுடைய மாலையை விரும்பிய பெண்களுடைய அழகும் அணியும் நாணும் நிறையும் நிலை தளராதபடி தாங்கும் அறநெறி பொருந்திய செங்கோலையுடையவனல்லன்; கொடுங்கோன்மையை உடையவன்; போர்க்களத்திலே பகைவரையழித்த கொடிய சினத்தையுடைய பெரிய யானைக்குரிய அரசன்.

### 2. பொருள் அவநுதி

நிலனாம் விசும்பாம் நிமிர்கால்நீர் தீயாம்
அலர்கதிராம் வான்மதியாம் அன்றி — மலர்
கொன்றை

ஒண்ணறுந் தாரான் ஒருவன் இயமானனுமாய்
எண்ணிறந்த எப்பொருளு மாம்.''

பொருள்: மலர்ந்த கொன்றைப் பூவினாற் செய்த நறு மணத்தையுடைய ஒள்ளிய மாலையை அணிந்தவனும் ஒப்பற்றவனுமாகிய சிவபெருமான், நிலமும், விண்ணும், உயர்ந்த காற்றும், நீரும், தீயும் பரந்த ஒளியையுடைய கதிரவனும் வெள்ளிய திங்களுமாகிய ஏழாதலுமல்லாமல் ஆன்மாவுமாய் எண்ணற்ற எல்லாப் பொருள் களுமாவன்.

### 3. குண அவநுதி

''மனுப்புவிமேல் வாழ மறைவளர்க்கு மாரப்
பனித்தொடையல் பார்த்திபர்கோன் எங்கோன்—
தனிக்கவிகை
தண்மை நிழற்றன்று தற்றொழுத பேதையர்க்கு
வெம்மை நிழற்றாய் மிகும்.''

பொருள்: மனிதர்கள் நிலவுலகின் கண் இனிது உயிர் வாழ வேதாகம நெறியை வளர்க்கும் குளிர்ந்த ஆத்தி மாலையை உடைய அரசர்க்குத் தலைவனாகிய எம் இறைவன் சோழராசனது தனிக்குடை தண்ணிய நிழலை யுடையதன்று. அவனைக் கண்ட பெண்களுக்கு மிக வெய்ய தன்மையைச் செய்யா நிற்கும்.

இவ்வணி பிறவணிகளோடு கூடியும் வரும்.

''நறவேந்து கோதை நலங்கவர்ந்து நல்கா
மறவேந்தன் வஞ்சியா னல்லன்—துறையின்
விலங்காமை நின்று வியன்தமிழ்நா டைந்தின்
குலங்காவல் கொண்டொழுகுங் கோ.''

பொருள்: தேனைத்தாங்கிய மாலையை அணிந்த பெண்ணின் அழகைக் கவர்ந்து திரும்பவும் அதனை

அவளுக்குக் கொடுக்காத கொடுமையுள்ள அரசன் பிறரை வஞ்சியாதவனல்லன், (வஞ்சிப் பதியை உடைய சோழனல்லன்) நல்லொழுக்க நெறியில் வழுவாமல் நின்று பெரிய ஐந்து தமிழ்நாட்டையும் காவல் காந்து நடக்கின்ற பாண்டியன்.

இதில் வஞ்சியான் அல்லன் என உண்மையை மறுத்து மற்றொரு தன்மையை ஏற்றிக் கூறுவதால் அவநுதியணிக்கு இடமாக இருத்தலோடு சிலேடை வகையால் பிறிதொரு பொருளையுந் தருகிறது. இது தன்னிடங் காதல் மிகுந்து அழகிழந்த தலைவியைக் கூட்டி அவளுக்கு அவ் வழகை மீளவும் உண்டாக்காத தலைவனைக் குறித்துக் கொடியவனென்று கூறியதாக அமைந்தது. இது, வெற்றொழிப்பு, காரண வொழிப்பு, வேறுபாட்டொழிப்பு, மயக்க வொழிப்பு, வல்லோர் ஒழிப்பு, வஞ்சவொழிப்பு எனப் பலவாறு வேறுபாடாகவுங் கூறப்பெறும்.

## 24. சிலேடையணி

74. ஒருவகைச் சொற்றொடர் பலபொருட் பெற்றி
தெரிதர வருவது சிலேடை யாகும்.

ஒரேவகையாக அமைந்துள்ள தொடர்சொல் பலவகையான பொருள்களைத் தருமாறு அமைந்து நிற்பது சிலேடையென்னும் அணியாம்.

75. அதுவே
செம்மொழி பிரிமொழி எனவிரு திறப்படும்.

மேற்கூறப் பெற்ற சிலேடை, செம்மொழிச் சிலேடையென்றும் பிரிமொழிச் சிலேடையென்றும் இருவகைப் படும்.

### 1. செம்மொழிச் சிலேடை

"செங்கரங்க ளானிரவு நீக்குந் திறம்புரிந்து
பங்கய மாதர் நலம்பயிலப்—பொங்குதயத்

தோராழி வெய்யோன் உயர்ந்த நெறியொழுகும்
நீராழி நீணிலத்து மேல்.''

பொருள் : சிவந்த கரங்களால் இருள்கடியுந் திறமை மிகுந்து தாமரை விரும்புஞ் சிறப்புடையதாக மேனோக்கிய தோற்றத்தையுடைய ஒரு காலூர்திக் கதிரவன் வானெறி யொழுகுங் கடல் சூழ்ந்த புவிமீது எனவும்... சிவந்த கைகளால் உலகில் உள்ளவர்களுடைய வறுமையைப் போக்குந் தொழில் மிகுந்து திருமகள் செல்வம் பெருக மேம்படாநின்ற பொருள் வருவாயை உடையவனுமாய்த் தனிச் சக்கரத்தையுடையவனுமாய் உலகத்தாரால் விரும்பப்பெறும் சிறப்பான நெறியின் கண்ணே ஒழுகுவான் கடல்சூழ்ந்த உலகத்தில் எனவும்...

இஃது, இவ்வாறு கதிரவனுக்கும் சோழனுக்கும் சிலேடையாக வந்தமையைக் காண்க.

## 2. பிரிமொழிச் சிலேடை

''தள்ளா விடத்தேர் தடந்தா மரையடைய
எள்ளா வரிமா னிடர்மிகுப்ப—உள்வாழ்தேம்
சிந்துந் தகைமைத்தே எங்கோன் திருவுள்ளம்
நந்துந் தொழில்புரிந்தார் நாடு.''

பொருள் : அழகுகெடாத நிலங்களில் உண்டாகிய பகட்டேர் பெரிய தாமரையைப் பொருந்தவும், இகழப்படாத நெற்சூட்டை உழவர் திரட்டவும், அத்தாமரை மலரில் உண்டாகிய தேன் பொழியும் பெருமையை உடையது எங்கோமானாகிய சோழனுடைய திருவுள்ளம் மகிழும் வகை நடந்தோர் நாடு எனவும்...அசையாத விடத்தேர் என்னும் மரமுடைய தாய்ப் பெரிய மலைமுடிகளைத் தாவும் மான்களையுடையதாய் இகழப்படாத சிங்கப் போத்துகள் துன்ப முறுத்தவும்பட்டு நல்லோர் உள்ளங்களில் வாழும் நாடுகளெல்லாம் அழிவுபடுந்

தன்மையை உடையதாம், எம் தலைவனாகிய சோழன் திருவுள்ளம் வேறுபடுந் தொழிலைச் செய்கின்றவர்கள் வாழும் நாடு எனவும்....

இது சோழனுடைய மனங்களிக்குமாறு நடந்தோருடைய நாட்டிற்கும், அவனுடைய மனம் வெறுக்கும்படி நடந்தோருடைய நாட்டிற்கும் சிலேடையாக உரைக்கப் பட்டது.

76. ஒருவினை பலவினை முரண்வினை நியமம்
நியம விலக்கு விரோதம் அவிரோதம்
எனவெழு வகையினும் இயலும் என்ப.

முற்கூறிய சிலேடை ஒருவினைச் சிலேடையும், பலவினைச் சிலேடையும், முரண்வினைச் சிலேடையும், நியமச் சிலேடையும், நியம விலக்குச் சிலேடையும், விரோதச்சிலேடையும், அவிரோதச்சிலேடையும் என்னும் ஏழுவகையாக நடக்குமென்று கூறுவார்கள்.

3. ஒருவினைச் சிலேடை

''அம்பொற் பணைமுகத்துத் திண்கோட் டணிநாகம்
வம்புற்ற வோடை மலர்ந்திலங்க—உம்பர்
நவம்புரியும் வானதியும் நாண்மதியும் நண்ணத்
தவம்புரிவார்க் கின்பந் தரும்.''

பொருள் : அழகிய விளக்கமுடைய பருத்தமுகத்தின் கண்ணே திண்ணிய கோட்டையுடையதாய் அழகு பெற்றிருந்த யானையானது, கச்சோடு கட்டிய பட்டம் விரிந்து விளங்க முடிமீது ஒளி மிகுந்து பெரிதாகிய கங்கையும் இளம்பிறையும் பொருந்துமாறு வந்து தவஞ் செய்பவர்கட்கு வேண்டிய இந்திரபதங்கள் முதலாகிய இன்பத்தைக் கொடுக்கும் எனவும்...அழகிய பொன்னோடு கூடிய மூங்கில் நெருங்கிய பக்கமுடையதாய்த் திண்ணிய முடிகளும் அமையப்பெற்று அழகுபெற்ற

மலை மணங்கமழும் ஓடைபூத்து விளங்கத் தன்மீது ஒளி மிக்குப் பெரிதாகிய கங்கையும் பிறையும் மருவும்படி உயர்ந்து தவஞ் செய்பவர்கட்கு அவர்கள் வேண்டிய பொருள்கள் எல்லாவற்றையுங் கொடுக்கும் எனவும் பொருள்படுதல் காண்க.

விநாயகர் மேற் செல்லுங்கால்:—பொன்—பொலிவு. பணை—பருத்தல். முகம்—வதனம். கோடு—மருப்பு. நாகம்—யானை. வம்பு—கச்சு. உறுதல்—கட்டுதல். ஓடை—பட்டம். மலர்தல்—பரத்தல். உம்பர்—முடி. இன்பம்—இந்திரபதம் முதலிய போகம்.

மலைமேற் செல்லுங்கால்:—பொன்—கனகம். பணை—மூங்கில். முகம்—பக்கம். கோடு—சிகரம். நாகம்—மலை. வம்பு—மணம். உறுதல்—உண்டாதல். ஓடை—வாவி; ஒருமரம். மலர்தல்—பூத்தல். உம்பர்—மேல். இன்பம்—தவஞ்செய்வார்க்கு அவர் வேண்டிய உணவுகளும் தண்ணீருமாகிய பலவகைப்பட்ட பொருள்கள். இது விநாயகருக்கும் மலைக்கும் சிலேடையாகக் கூறியது.

### 4. பலவினைச் சிலேடை

"தவிரா மதுவுண் களிதளிர்ப்ப நீண்டு
செவிமருவிச் செந்நீர்மை தாங்கிக்—குயிலிசையும்
மின்னுயிரா நுண்ணிடையார் மென்னோக்கு மேவலார்
இன்னுயிரை ஈர்கின் றன.

பொருள் : இடைவிடாமல் தேனுண்ண வந்த களிப்பு உண்டாக, நீண்டு செவியுட் புகுந்து நிறைந்து கோணாத தன்மையுடையனவாகியிருக்கும் குயிலின் குரல் பிரிந்தோர் உயிர்களை வருத்தஞ்செய்யா நின்றன எனவும்...விடுதற் கரிதாகிய கள்ளையுண்ட மயக்கத் தாலே தழைத்து நீண்டு செவியளவுஞ் சென்று வந்த குளிர்ச்சியினை யுடையவாகிய மின்னலைப் போன்ற

இடையினையுடையார் மெல்லியவாகிய கண்கள் தம்மைச் சேரும் தலைவருடைய இனிய உயிரை வருத்து கின்றன எனவும் பொருள்படுதல் காண்க.

குயிற் குரல் மேற்செல்லுங்கால்: மது—தேன். செவிமருவி —செவியுட்புகுந்து. செந்நீர்மை—கோடாத தன்மை. மேவலார்—பிரிந்தார்.

கண்ணின் மேற் செல்லுங்கால்:—மது—கள். செவிமருவி—செவியளவுஞ்சென்று. செந்நீர்மை—சிவந்த குளிர்ச்சி. மேவலார்—சேருந்தலைவர். இன்னுயிர்—இனிய உயிர். இது குயிற்குரலுக்கும் மடவார் கண்ணுக்கும் சிலேடை.

### 5. முரண்வினைச் சிலேடை

"மாலை மருவி மதிதிரிய மாமணஞ்செய்
காலைத் துணைமேவ லார்கடிய—வேலைமிசை
மிக்கார் கவியடங்கா தார்க்கும் வியன்பொழில்கள்
புக்கார் கவியடங்கும் புள்.

பொருள் : மயக்கத்தைப் பொருந்திக் கருத்து வேறு பட மிகவும் மணங்கமழுங் காலத்திலே தம் துணைவரைச் சேராதவர்கள் அஞ்சுமாறு கரைமீது மிகுந்து கடல் பொங்கி ஆரவாரஞ் செய்யும், அகன்ற பொழில்களிற் புகுந்து பறவைகள் ஒலியடங்கும் எனவும்... அந்திப் பொழுதடைந்து திங்கள் உலாவ மிகுந்திருந்த கூட் டத்தைச் செய்யுங்காலத்தில் தன் துணைவரைப் பொருந் தினோர் விளங்க எனவும் கொள்க.

பிரிந்தவர்கள்மேற் செல்லும் பொழுது : மாலை—மயக்கம். மதி—கருத்து. திரிதல்—வேறுபடுதல். மணம்—வாசம். துணைமேவலார்—தம் துணைவரைப் பிரிந்தவர்கள். கடிய—அஞ்ச.

புணர்ந்தார்மேற் செல்லும் பொழுது: மாலை—அந்திப் பொழுது. மதி—திங்கள். திரிதல்—உலாவல். மணம்—

கூட்டம். துணைமேவலார்—துணைவரைச் சேர்ந்தவர் கள். கடிய—விளங்க. இது பிரிந்தவர்க்கும் புணர்ந் தவர்க்கும் சிலேடை.

### 6. நியமச் சிலேடை

"வெண்ணீர்மை தாங்குவன முத்தே வெறியவாய்க்
கண்ணீர்மை சோர்வ கடிபொழிலே—பண்ணீர்மை
மென்கோல யாழே இரங்குவன வேல்வேந்தே
நின்கோல் உலாவும் நிலத்து."

பொருள் : வேற்படையை உடைய அரசனே ! நின்னுடை செங்கோல் உலாவுகிற நிலத்திலே வெண்மை நிறத்தையுடைத்தாயிருப்பன முத்தே எனவும், மணத்தை யுடையதாய் தேன்வழியுமாறு நிற்பன பெரிய பொழிலே எனவும், குளிர்ந்த ஓசையை உடையதாய் அழகோடு கூடி மென்மையுடையதாய்ப் பிறருக்கு மனக்குழைவை யுண்டாக்குவன யாழே எனவும் கிடந்தமையால் இங்கு கூறப்பட்ட இவையொழிய அறிவின்மை தாங்குவதும் மிடியை உடைமையால் கண்ணீர் சொரிவதும் பிறர்மனந் தளர்வதும் இல்லையென நின்ற வாற்றை யறிந்து கொள்க.

### 7. நியம விலக்குச் சிலேடை

சிலேடித்த பொருளை அமைத்து மற்றவற்றை விலக்குவது இது.

"சிறைபடுவ புட்குலமே தீம்புனலும் அன்ன
இறைவநீ காத்தளிக்கும் எல்லை—முறையில்
கொடியன மாளிகையின் குன்றமே யன்றிக்
கடியவிழ்பூங் காவும் உள."

பொருள் : தலைவனே ! நீ காத்தளிக்கும் நிலவரைப் பில் சிறையுடைத்தாயிருப்பன பறவைக் குலமே. இனிய

தண்ணீரும் சிறை செய்யப்படுந் தன்மையை உடையது. கொடியை உடையன குன்றம் போன்ற மாளிகைகளே; நன்மணம் பரந்த பூவையுடைத்தாகிய சோலைகளும் கொடியை உடையன.

தண்ணீர் சிறை செய்யப் படுவது, ஏரிகுளம் முதலிய இடங்களை விட்டு உடைத்துச் செல்லாது கட்டிவைத் தல். சிறைபடுதல் கொடுமை முதலியன இவனுடைய நாட்டில் இல்லையென்னும் பொருள் தொனிக்கின்றது.

### 8. விரோதச் சிலேடை

"விச்சா தரனேனு மந்தரத்து மேவானால்
அச்சுத னேனுமம் மாயனலன்—நிச்ச
நிறைவான் கலையா னகளங்க னீதி
இறையா னநகனெங் கோ."

பொருள் : திருமால் மாயம் உடையவன் ஆகை யால் மாயனெனப்படுவான். இவன் அம்மாயம் இல் லாதவனாகையால் மாயனெனப்படான், நாள்தோறும் நிறைந்த வெண்மை யெய்தும் கலைகளையுடைய வனாகிய திங்கள் களங்கமுடையவன். நாள்தோறும் கலை நூல்களால் பெருக்கமுடையவனேனும் சோழன் அகளங்கனெனப்பட்டான். சிவபெருமான் கையிலை மலையை உடையவனாகையால் நகனெனப்பட்டான். சோழனாகிய எங்கோன் தீவினை யின்மையினால் அநகனெனப்பட்டான்.

விச்சாதரன் என்பது விஞ்சையராகிய தேவகுலத் தினருக்கும் வித்தையையுடைய சோழனுக்கும் பெயர். அந்தரம் என்பது விண்ணிற்கும் கேட்டிற்கும் பெயர். அச்சுதன் என்பது திருமாலுக்கும் கேடில்லாதவனுக்கும் பெயர். நிறைவான் கலையான் என்பது கலையையுடைய திங்களுக்கும் கல்வியால் நிறைந்த சோழனுக்கும் பெயர் களங்கம் என்பது குற்றத்திற்கும் தீவி·னை·கு கும் யெபர்.

நீதி யிறையான் என்பது சிவபெருமானுக்கும் நீதிநெறி யரசனான சோழனுக்கும் பெயர். அநகனென்பதுமலை வில்லா தோனுக்கும் தீவினை யில்லாதவனுக்கும் பெயர்.

### 9. அவிரோதச் சிலேடை

சோதி யிரவி கரத்தா னிரவொழிக்கும்
மாதிடத்தான் மன்மதனை மாறழிக்கு—மீதாம்
அனகமதி தோற்றிக் குமுத மளிக்கும்
தனத னிருநிதிக்கோன் தான்.

பொருள்: ஒளியினையுடையவனாகிய கதிரவன் தன்கதிர்களாலே இருளை நீக்குவான்; புகழையுடையவனாய்க் கதிரவன் குலத்தில் தோன்றிய இரவியென்னும் பெயரினை யுடையவனாகிய சோழன் தன்னுடைய கைகளாலே பிறருடைய வறுமையைத் தீர்ப்பான், உமையவளை இடப்பாகத்திலுடைய சிவன் காமனை மாறாக்கி யழிப்பான். இவன் மிகுந்த திட்பமுடையவனாகையால் மன்னவர் வலியினை மாறு கொண்டு கெடுப்பான். விண்ணில் தோன்றிய குற்றமற்ற திங்கள் எழுந்து குமுதங்களை மலரச் செய்யும். இவன் மேலாய குற்றமற்ற அறிவு தோன்றிப் பூதலத்துக்கு ஏற்ற மகிழ்ச்சியைக் கொடுப்பான். குபேரன் தினதன் என்னும் பெயரையுடைவனாய்ப் பெருஞ் செல்வத்திற்குத் தலைவனாவான். இவனும் பிறருக்குப் பொருளையளித்து மிகுந்த பொருளுக்கு உரியவனெனப் பெறுவான்.

கு. பூதலம். முதம்—மகிழ்ச்சி.

## 25. விசேட வணி

77 குணந்தொழின் முதலிய குறைபடு தன்மையின்
மேம்பட வொருபொருள் விளம்புதல் விசேடம்

குணமும் தொழிலும், சாதியும், பொருளும் உறுப்பும் முதலாயின குறைபடுதல் காரணமாக ஒரு பொருட்கு மேம்பாடு தோன்றச் சொல்லுவது விசேடம் என்னும் அணியாகும்.

### 1. குணக்குறை விசேடம்

கோட்டந் திருப்புருவம் கொள்ளா அவர் செங்கோல்
கோட்டம் புரிந்த கொடைச் சென்னி—நாட்டம்
சிவந்தன வில்லை திருந்தார் கலிங்கம்
சிவந்தன செந்தீத் தெற.

பொருள்: கொடைபொருந்திய சோழனுடைய அழகிய புருவங்கள் வளைதலைக் கொள்ளவில்லை. அவனுடைய அந்தப் பகைவர்களின் செங்கோல் கெடுதலையடைந்தன. அச் சோழனுடைய கண்கள் சிவக்கவில்லை. பகைவர்களுடைய கலிங்க நாட்டுப் பகுதிகள் சிவந்த தீ எரித்தலாற் சிவப்புற்றன.

சோழன் நன்கு சினம்கொள்ளாததற்கு முன்பே சிவப்புற்றன, அவனுடைய பகைவர்கள் நிலைகுலைந்தனர் என்பது கருத்து. புருவங்கள் நெறிப்புற்று வளைதலும், கண்கள் சிவத்தலும் சினத்திற்கு அறிகுறிகளாம். கலிங்க நாடுகள் ஏழுவகைப்படு மாதலின் சிவந்தன என்றார்.

### 2. தொழிற்குறை விசேடம்

ஏங்கா முகில்பொழியா நாளும் புனல் தேங்கும்
பூங்கா விரிநாடன் போர்மதமா—நீங்கா
வளைபட்ட தாளணிகண் மாறெதிர்ந்த தெவ்வர்
தளைபட்ட தாட்டா மரை.

பொருள்: முழங்குதலைச் செய்து முகில்கள் மழையைப் பெய்யாத நாளிலும் நீர்பெருகிப் பாய்கின்ற

அழகிய காவிரி சேர்ந்த நாடனுடைய போரில், மதம் பொருந்திய யானைகளின் தாள்களெல்லாம் கழலாதபடி வளைந்திடப் பெற்ற வீரக் கழல்களைப் பூண்டன. இவை இவ்வாறு செய்யவே அன்றே பகையாகிய அரசர்களின் அடிகளாகிய தாமரைகளெல்லாம் தளையாகிய விலங்கைப் பூண்டன.

சோழ மன்னனுடைய யானைகள் போரணி பூண்ட அளவிலே பகைவர் தோல்வியுற்று விலங்கிடப்பட்டனர் என்பது இதனுடைய கருத்து.

### 3 சாதிக்குறை விசேடம்

மேய நிரைபுரந்து வெண்ணெய் தொடுவுண்ட
ஆயனார் மாறேற் றமர்புரிந்தார்—தூய
பெருந்தருவும் பின்னுங் கொடுத்துடைந்தார் விண்மேற்
புரந்தரனும் வானோரும் போல்.

பொருள் : ஆன் கூட்டங்கள் மேய, அவற்றைக் காத்து வெண்ணெயைத் தோண்டியெடுத்துண்ட இடையராகிய கண்ணபிரான் பகையாக நின்று எதிர்த்துப் போர் புரிந்தார். அவ்வாறு செய்யவே விண்ணுலகத்திலுள்ள இந்திரனும் தேவர்களும் தூய்மை பொருந்திப் பெருமை பெற்ற பாரிசாதத் தருவையும், தமது முதுகையும் கொடுத்துத் தோல்வி யடைந்தார்கள்.

இதில் "ஆயனார்" என்று சாதியில் இழிவு கூறி, உயர்ந்த தேவர்களை வெல்லுதலாகிய செயலில் உயர்வு விளங்கக் கூறினமையால் சாதிக் குறை விசேடம் அமைகிறது.

நிரை—ஆன்கூட்டம். புரத்தல்-காத்தல். தொடுதல்—தோண்டுதல். மாறு-பகை, அமர்-போர். தரு-பாரிசாதத் தரு. பின்கொடுத்தல்-முதுகுகாட்டல்.

### 4. பொருட் குறை விசேடம்

தொல்லை மறைதேர் துணைவன்பால் ஆண்டுவரை
எல்லை இருநாழி நெற்கொண்டோர்—மெல்லியலாள்
ஓங்குலகில் வாழும் உயிரனைத்தும் ஊட்டுமால்
ஓங்கொலிநீர்க் காஞ்சி யிடை.

பொருள் : ஒலிக்கின்ற ஒலியை உடைய நீர்வளம் பொருந்திய காஞ்சி நகரிடையே, மெல்லிய தன்மையை உடையவளாகிய உமாதேவியானவள் பழமையான மறைகளைத் தேர்ந்த தன் தலைவனிடத்தே ஓராண்டளவும் இருநாழி நெல்லைப்பெற்று அதனாலேயே முப்பத்திரண்டறங்களையும் வளர்த்து, உயர்ந்த உலகத்தில் வாழுகின்ற உயிர்களையெல்லாம் உணவூட்டிப் பாதுகாத்து வருவாளாயினாள்.

இதில் 'இருநாழி நெற் கொண்டு' என்று பொருட் குறை காட்டி அதனைக்கொண்டு உயிரனைத்தும் ஊட்டும் எனக் காரியத்தில் உயர்வு தோன்றக் கூறினமையால் பொருட் குறை விசேடம் அமைந்திருத்தல் காண்க.

### 5. உறுப்புக் குறை விசேடம்

யானை யிரதம் பரியா ளிவையில்லை
தானும் அனங்கன் தனுக்கரும்பு—தேனார்
மலரைந்தி னால்வென் றடிப்படுத்தான் மாரன்
உலகங்கள் மூன்றும் ஒருங்கு.

பொருள்: மன்மதனுக்கு, யானை, தேர், குதிரை, காலாட்கள் ஆகிய நால்வகைப் படைகளும் இல்லை. மேலும் அவன் உடலில்லாதவன், அவனுடைய வில்லோ வலிமையற்ற கரும்பு. அந்த மன்மதன், தேன் பொருந்திய ஐந்து மலர்களினாலேயே மூவுலகங்களையும் ஒருங்கே வென்று தனக்குக் கீழ்ப்படுத்தினான்.

இதிற் கருவிகளிற் குறை கூறிக் காரியத்தில் உயர்வு தோன்றக் கூறினமையால் உறுப்புக்குறை விசேடம் அமைந்திருத்தலைக் காண்க.

## 26. ஒப்புமைக் கூட்டணி

78. கருதிய குணத்தின் மிகுபொரு ளுடன்வைத்
தொருபொரு ளுரைப்ப தொப்புமைக் கூட்டம்.

ஒரு பொருளைச் சொல்லுமிடத்துத் தான் கருதிய குணம் முதலாயினவற்றின் மிகுந்த பொருளைக் கூட வைத்துச் சொல்லுவது ஒப்புமைக் கூட்டம் என்னும் அணியாம்.

அவ்வொப்புமைக் கூட்டமென்னும் அணி ஒன்றனைப் புகழ்தற் கண்ணும் பழித்தற்கண்ணும் தோன்றும்.

### 1. புகழொப்புமைக் கூட்டம்

பூண்டாங்கு கொங்கை பொரவே குழைபொருப்பும்
தூண்டாத தெய்வச் சுடர்விளக்கும்—நாண்டாங்கு
வண்மைசால் சான்றவரும் காஞ்சி வளம்பதியின்
உண்மையால் உண்டிவ் வுலகு.

பொருள்: உமாதேவியின் கொங்கைகள் அணிகலன்களை அணிந்தபடியே அழுந்துதலால் திருமேனி குழைவுற்ற மலையும் (ஏகாம்பரநாதரும்), தூண்டப்படாத தெய்வத்தன்மை பொருந்திய ஒளியுள்ள விளக்கும் (நந்தா விளக்கும்) பிறர் நாணத்தைக் கொள்ளும் படியான ஈகைக் குணம் மிகுந்த பெரியோர்களும் காஞ்சியென்னும் வளம் பொருந்திய நகரத்திலேயிருக்கின்றமையால் இந் நிலவுகமானது நிலை பெற்றிருக்கின்றது,

இதில் குழை பொருப்பும் தூண்டா விளக்குமாகிய உயர்ந்த பொருள்களோடு பெரியோரைச் சேர்த்து

உயர்த்திக் கூறினமையால் புகழொப்புமைக் கூட்டம் அமைந்துள்ளது.

2. பழிப்பொப்புமை கூட்டம்

கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தனும்
உள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரும்
இல்லிருந் தெல்லை கடப்பாளும் இம்மூவர்
வல்லே மழையருக்கும் கோள்''

பொருள் : பொருளைக் கைப்பற்ற விரும்பிக் குடிகளை வருத்துகின்ற அரசனும், உள்ள உண்மையைக் கூறாது வழக்கில் வெல்லும் பொருட்டு மாறுபாடான மொழியைக் கூறும் மனிதரும், ஒருவனுடைய வீட்டில் அவனுக்கு மனைவியாயிருந்து அவனது எல்லை கடந்து நடப்பவளுமாகிய இம்மூவர்களும் விரைவாகவே மழையைக் குறையச் செய்யும் கோள்களாவர்.

இதில் மூவரிடத்தும் சேர்க்கப்பட்ட இழிதன்மைகளால் பழிப் பொப்புமைக் கூட்டம் அமைதல் காண்க.

வெஃகல்- விரும்புதல். அலைத்தல்- வருத்துதல். பொருள்- உண்மை. சலம்-மாறுபாடு. அருக்கல்— குறையச் செய்தல் அல்லது இல்லாமற் போகச் செய்தல்.

## 27. விரோதவணி

80. மாறுபடு சொற்பொருண் மாறுபாட் டியற்கை
விளைவுதர உரைப்பது விரோத மாகும்.

மாறுபட்ட சொல்லாலும் பொருளாலும் மாறுபாட்டுத் தன்மையின் விளைவு தோன்றக் கூறுவது விரோதம் என்னும் அணியாகும்.

பொருள் விரோதம்

சோலை பயிலுங் குயின்மழலை சோர்ந்தடங்க
ஆலு மயிலினங்கள் ஆர்த்தெழுந்த—ஞாலம்

குளிர்ந்த முகில் கறுத்த கோபஞ் சிவந்த
விளர்ந்த துணைபிரிந்தார் மெய்.

பொருள்: சோலைகளில் தங்கிய குயில்களின் மழலைச் சொற்கள் சோர்வுற்றடங்க, ஆடுகின்ற மயிற் கூட்டங்கள் ஆரவாரித்து எழுந்தன. நிலங்குளிர்ச்சியடை தற்குக் காரணமான முகில்கள் கறுத்தன. இந்திர கோபப் பூச்சிகள் சிவந்தன. துணைவரைப் பிரிந்தவருடைய உடல்கள் வெளுத்தன,

இது கார்ப்பருவத்தின் வருணனை. இதில் முன்னிரண்டடிகளிலும் குயில் மழலை சோர்ந்து அடங்குதலும், மயிலினங்கள் ஆரவாரித் தெழுதலும், ஒன்றுடன் ஒன்று மாறுபட்டும், பின்னிரண்டடிகளிலும், கறுப்பும், சிவப்பும் வெளுப்புமாகிய சொற்கள் ஒன்றோ டொன்று மாறு பட்டும் விரோத அணி அமைந்துள்ளது.

**சொல் விரோதம்**

காலையும் மாலையுங் கைகூப்பிக் கால்தொழுதால்
மேலை வினையெல்லாங் கீழவாம்—கோலக்
கருமான்தோல் வெண்ணீற்றுச் செம்மேனிப் பைந்தார்ப்
பெருமானைச் சிற்றம் பலத்து.

பொருள்: அழகு பொருந்திய கூரிய யானைத் தோலையும் வெண்மையான திருநீற்றையும், சிவந்த திருமேனியையும் பசிய கொன்றை மாலையையுமுடைய சிவபெருமானைத் திருத்தில்லையில் காலையிலும் மாலையிலும் கைகளைக் கூப்பித் திருவடிகளைத் தொழுதால் மிகுதிப்பட்ட ஊழ்வினைகளெல்லாம் குறைந்தழியும்.

இதில் காலை, மாலை; கைகூப்புதல், கால்தொழுதல்; மேல், கீழ்; கருமை, வெண்மை; செம்மை, பசுமை என்பன ஒன்றோடொன்று மாறுபட்டு விரோதவணி அமைந்துள்ளது. மேலை வினை என்பதற்கு முற்பிறப்புவினையெனப் பொருள் கூறினும் அமையும்.

இனமா னிகல வெளிய வெனினும்
வனமேவு புண்டரிகம் வாட்டும்— வனமார்
கரியுருவங் கொண்டு மரிசிதறக் காயும்
விரிமலர்மென் கூந்தல் விழி.

பொருள்: அலர்ந்த மலர்களையுடைய மெல்லிய கூந்தல் பொருந்திய இவளது விழிகளாகிய இனமான்கள் பகைத்தற்கு எளியன வெனினும், காட்டிற் பொருந்தி யிருக்கின்ற புலிகளை வருத்துதற்கு வல்லமை யுடையன வாயின. [நிகர்த்தற்கு வெண்மையை உடையன எனினும் நீரில் பொருந்திய தாமரை மலரை அழகழிக்கும்.] காட்டு யானை வடிவைக் கொண்டும் சிங்கம் பயந்து நீங்கி யோடச் சினக்கும் [அழகு பொருந்திய கறுத்த வடிவம் பெற்றும் செவ்வரிகள் பரக்க வெம்மையைச் செய்யும்.]

இது சிலேடை மாறுபாடு என்று கூறப் பெறும். இச்சி லேடைகள் மானின் மீது செல்லுங்கால், ''பகைத்தற்கு எளியன வெனினும், காட்டிற் பொருந்திய புலிகளை வருத்துதற்கு வல்லமையுடையன வாயின. காட்டு யானையின் வடிவைக் கொண்டும் சிங்கம் அஞ்சி நீங்கி யோடச் சினக்கும் எனவும், கண்களின் மேற் செல்லுங் கால், ஒப்பாதற்கு வெண்மையை உடையன வெனினும் நீரிற் பொருந்திய தாமரை மலரை அழகழிக்கும்; அழகு பொருந்திய கறுத்த வடிவம் பெற்றும் செவ்வரிகள் பரக்க வெம்மையைச் செய்யும்'' எனவும் மாறுபட்டுச் சிலேடை விரோத மாயின.

இகலுதல்—மாறுபடுதல்: ஒத்தல். எளிய—எளிமை யாயின. வெளிய—வெண்மையான. வனம்—காடு, நீர். புண்டரிகம்—புலி, தாமரை, அழகு. கரி—யானை, கருமை. அரி—சிங்கம், செவ்வரி, சிதறல்— அழித்தல், பரத்தல். காய்தல்—சினத்தல், வருத்தல். செவ்வரி— சிவந்த ரேகை.

## 28. மாறுபடு புகழ் நிலையணி.

81. கருதிய பொருள்தொகுத் தாங்கது பழித்தற்கு
வேறொன்று புகழ்வது மாறுபடு புகழ்நிலை.

கவி தான் கருதிய பொருளை மறைத்து அதனைப் பழித்தற்கு வேறொன்றனைப் புகழ்வது மாறுபடு புகழ் நிலை என்னும் அணியாம்.

இரவறியா யாவரையும் பின்செல்லா நல்ல
தருநிழலும் தண்ணீரும் புல்லும்—ஒருவர்
படைத்தனவும் கொள்ளாவிப் புள்ளிமான் பார்மேல்
துடைத்தனவே யன்றோ துயர்.

இந்தப் புள்ளிமான்கள் பிறரிடம் பின் சென்று இரத்தலை அறியமாட்டா. எவரிடத்தும் தம் குறைகளைச் சொல்லிப் பின் செல்ல மாட்டா. ஒருவர் ஈட்டியனவாகிய நல்ல மரத்தின் நிழலையும், குளிர்ந்த நீரையும் புல்லையுங் கொள்ளா. அவற்றைத் தாமே பெறும்; ஆதலின் இவை இந்த நிலத்தின் மேல் துன்பத்தை ஒழித்தன வன்றோ?

இது செல்வர்களை யடைந்து இரந்து அவர் பின் சென்று குறைவுற்று வருந்தும் ஓர் இரவலனை இழித்துக் கூறியதாக அமைந்தது. இதில் மானைப் புகழ்தலால் இரவலனது இழிவு தோன்றி மாறுபடு புகழ்நிலை அமைந்துள்ளது.

போதுந் தளிரும் புனைந்து மணம்புணர்ந்து
சூதப் பணைதழுவித் தோன்றுமால்—மாதே
பலமா தவங்கள் பயின்றதோ பண்டிக்
குலமா தவியின் கொடி.

பொருள்: இந்த நல்ல மாதவிக் கொடியானது மலர்களினாலும் தளிர்களினாலும் அழகுறுத்தப்பட்டு மணக் கோலத்தையும் அடைந்து மணம் புரிந்து, தம்முடைய தலைவரைத் தழுவிக் கொண்டு நின்ற

நற்குலப் பெண்களைப் போலத் தானும் மலர்களினாலும் தளிர்களினாலும் அழகுறுத்தப்பட்டு நறுமணத்தை யடைந்து மாமரக் கிளைகளைச் சேர்ந்து தோன்று கின்றது. ஆதலின் மாதே! இது முற்காலத்திற் பல சிறந்த தவங்களைச் செய்ததோ?

இது களவிற் கூடிவந்த தலைவியைப் பழித்தற்கு மாதவியைப் புகழ்ந்ததாக அமைந்தது. இதில் மாதவி யைப் புகழ்தலால் தலைவியின் இகழ்ச்சி விளங்கி மாறுபடு புகழ்நிலை அமைந்து நின்றது.

சூதம்—மாமரம். பணை—கிளை. மாதவி—வசந்த மல்லிகை.

### 29. புகழாப் புகழ்ச்சியணி

82. பழிப்பது போலும் பான்மையின் மேன்மை
புலப்பட மொழிவது புகழாப் புகழ்ச்சி.

பழித்தலைப்போல ஒன்றுக்கு மேம்பாடு தோன்ற உரைப்பது புகழாப்புகழ்ச்சி என்னும் அணியாம்.

போர்வேலின் வென்றதூஉம் பல்புகழால்
போர்த்ததூஉம்
தார்மேவு திண்புயத்தால் தாங்குவதூஉம்—நீர் நாடன்
தேரடிக்கூர் வெம்படையால் காப்பதூஉம்
செங்கண்மால்
ஓரடிக்கீழ் வைத்த உலகு.

பொருள் : நீர்வளம் பொருந்திய நாட்டை யுடைய சோழன் போர் செய்யத் தக்க வேற்படையினால் வெற்றி கொண்டதும், பலவகைப்பட்ட புகழினாலே மூடியதும், மாலையை அணிந்த வலிமை பெற்ற தோளி னால் தாங்குவதும், தேர்க்காலின் பெயரை யுடைய கூர்மையும் கொடுமையுமுள்ள படையினால் (அஃதாவது ஆழிப்படையால்) காப்பதும், சிவந்த கண்களையுடைய

திருமால் ஒரு காலடியில் அடக்கி வைத்த இவ்வுலக மேயாம்.

இதில் திருமால் எவ்விதமான துன்பமும் இல்லாமல் ஓரடியின் கீழ்வைத்த உலகைச் சோழமன்னன் பல விதமாகத் தொல்லைப்பட்டுப் பாதுகாக்கின்றனன் எனப் பழித்தாற் போலக் கூறியதால் நிலம் முழுவதையும் சோழன் சக்கரவர்த்தியாய் ஒருங்கே ஆட்சிபுரிகின்ற னன் என்னும் புகழ்ச்சி தோன்றுதல் மூலம் புகழாப் புகழ்ச்சியணி அமைந்துள்ளது.

நினைவரிய பல்புகழார் நின்குலத்துத் தொல்லோர்
அனைவரையும் புல்லினாள் அன்றே—மனுநூல்
புணர்ந்த நெறியொழுகும் பூழியநீ இந்நாள்
மணந்த தடமலர்மேன் மாது.

பொருள்: மனுதரும நூலிற் பொருந்திய நன்னெறிப் படி நடக்கின்ற சோழனே! நீ இந்நாளில் உரிமையாகச் சேர்ந்தவளாகிய பெரிய தாமரை மலரில் தங்கும் திருமகள் எண்ணுதற்கும் அரிய பலவகைச் சீர்த்தியை உடையவ ராகிய உன் குலத்துப் பழமையானவர்க ளெல்லோரையும் உரிமையாகக் கொண்டு கூடினவளன்றோ?

இதில் உன்னால் உரிமையோடு சேரப்பட்டவள் பலருக்கும் உரிமையானவள் என்று பழித்தாற் போலக் கூறிய தன்மையினால், நீ வழி முறையாக உனக்குரிய இராச்சிய லட்சுமியைச் சேர்ந்தனையென்று புகழ்ச்சி தோன்றுதல் மூலம் புகழாப் புகழ்ச்சியணி அமைதல் காண்க.

தொல்லோர்—பழமையானவர். புல்லல் — தழுவுதல். பூழியன் — சோழன். தடம் — விலாசம்.

## 30. நிதரிசனவணி

83. ஒருவகை நிகழ்வதற் கொத்தபயன் பிறிதிற்குப்
புகழ்மை தீமை என்றிவை புலப்பட
நிகழ்வ தாயின் நிதரிசனம் அதுவே.

ஒருவகையான் நிகழ்வதொன்றற்குப் பொருந்திய தாகிய ஒருபயனை வேறொன்றற்கு நன்மை புலப் படவோ அன்றித் தீமை புலப்படவோ செய்வதெனச் சொல்வது நிதரிசனம் என்னும் அணியாம்.

### 1. புகழ்மை நிதரிசனம்

பிறர்செல்வங் கண்டால் பெரியோர் மகிழ்வும்
சிறியோர் பொறாத திறமும் — அறிவுறீஇச்
செங்கமல மெய்ம்மலர்ந்த தேங்குமுத மெய்யயர்ந்த
பொங்கொளியோன் வீறெய்தும் போது.

பொருள்: பிறருடைய செல்வத்தைக் கண்டால் பெரி யோர் மகிழ்ச்சியடைவதையும் சிறியோர் பொறாமை யடைவதையும் அறிவுறுத்தி, மிகுந்த ஒளியை உடைய வனாகிய கதிரவன் தோன்றி ஒளி மிகுங்காலத்தில் செந் தாமரை மலர்கள் உடல் நெகிழ்ந்து மலர்ந்தன; தேன் பொருந்திய அல்லிமலர்கள் உடல் வாடிக் குவிந்தன.

இது நற்பொருள் காட்சி.

பொங்கொளியோன் — கதிரவன். வீறு — பிரகாசம், பெருமை.

### 2. தீமை நிதரிசனம்

பெரியோர் உழையும் பிழைசிறிதுண் டாயின்
இருநிலத்துள் யாரு மறிதல் — தெரிவிக்கும்
தேக்குங் கடலுலகில் யாவர்க்குந் தெள்ளமுதம்
வாக்கு மதிமேன் மறு.

பொருள்: கடல் சூழ்ந்த உலகிலே, யாவருக்கும் இனிய அமுதினைத் தருகின்ற மதியின்மேலும் மறுக் காணப் படும். இவ்வாறே பெரியோரிடமும் சிறு பிழை உண்டா னால், அதை உலகத்தார் எல்லோரும் அறிந்து பழிப்பர்.

இது தீப்பொருட்காட்சி. திங்களினிடத்தே மறு விளங் குதல் பெரியோரிடத்தே குற்றம் விளங்குதலை உணர்த்து வது போலுமென்க.

இருநிலம் — பெரியநிலம். தேக்குதல் — மிகுதல். வாக்குதல்—பொழிதல். மறு—களங்கம்.

## 31. புணர் நிலை யணி

84. வினைபண் பெனவிவை இருபொருட் கொன்றே
புணர மொழிவது புணர்நிலை யாகும்.

வினையாலும் பண்பாலும் இரண்டு பொருளுக் கொன்றே பொருந்தச் சொல்வது புணர்நிலை என்னும் அணியாம்.

### 1. வினைப்புணர் நிலை

வேண்டுருவங் கொண்டு கருகி வெளிபரந்து
நீண்ட முகிலுடனே நீர்பொழிந்த —
ஆண்டகையோர்
மேவல் விரும்பும் பெருநகையால் மெல்லாவி
காவல் புரிந்திருந்தோர் கண்.

பொருள்: தான்வேண்டிய உருவத்தைக் கொண்டு கறுத்த நிறத்தை யுடையதாய் விண்ணிலே பரந்து பெரி தாகவுள்ள மழைமுகிலுடனே நீர் பொழியா நின்றன. பிறர் விரும்புந் தன்மை யுடையதாகிய உருவத்தையுடையதாய் அழகு செய்யுமாறு எழுதப்பட்டமையோடு கூடியதாய் நீண்டிருக்கின்ற கண்கள்.

ஆண்மைத்தன்மை மிக்க தலைவரைச் சேர்தலை விரும்பியிருக்கின்ற காதலாலே தம்முடைய மெல்லிய உயிர் போகாதபடி காக்குந் தொழிலை மேற்கொண் டிருக்கின்ற மடவாருடைய கண்ணெனக் கூட்டுக.

## 2. பண்புப் புணர்நிலை

பூங்காவில் புள்ளொடுங்கும் புன்மாலைப்
போழ்துடனே
நீங்காத வெம்மையவாய் நீண்டனவால்—தாங்காதல்
வைக்குந் துணைவர் வருமவதி பார்த்தாவி
உய்க்குந் தமியார் உயிர்.

பொருள்: காதலிக்கப்பட்ட கணவர் வருங்காலத்தைப் பார்த்திருந்த மடவாருடைய உயிரானது பூம்பொழிற் கண்ணே பறவைகளெல்லாம் ஒடுங்கிய மாலைப் பொழுதுடனே, நீங்காத துன்பஞ் செய்து தானும் போகாமல் நின்றது.

## 32. பரிவருத்தனை யணி

85. பொருள்பரி மாறுதல் பரிவருத் தனையே.

பொருள்களை ஒன்றற்கு ஒன்று தந்து ஒன்று கொண்டனவாகச் சொல்வது பரிவருத்தனை என்னும் அணியாம்.

காமனை வென்றோன் சடைமதியுங் கங்கையும்
தாம நிழலொன்று தாங்கொடுத்து — நாமப்
பருவா ளரவின் பணமணிகள் தோறும்
உருஆ யிரம்பெற் றுள.

பொருள்: காமனை வென்ற முக்கட் கடவுளுடைய சடை மீது உண்டாகிய திங்களும், கங்கையும் வருத்தஞ் செய்யுந் தன்மையுடையதாய், பெரிதாகிய ஒளியினை

யுடையதாய் அங்கேயிருந்த பாம்பின் படங்களில் உண்டாகிய மணிகள் தோறும் தத்தம் உருவத்தைக் கொடுத்து ஆயிரம் ஆயிரம் உருவத்தைப் பெற்றன.

## 33. வாழ்த்தணி

86. இன்னார்க் கின்ன தியைக வென்றுதாம்
முன்னியது கிளத்தல் வாழ்த்தென மொழிப.

இன்ன தன்மையை உடையார்க்கு இன்னது நிகழ்க வென்று புலவர்கள், தாம் கருதியதனைக் கூறுவது வாழ்த்து என்னும் அணியாம் என்று கூறுவர்.

மூவாத் தமிழ்பயந்த முன்னூன் முனிவாழி
ஆவாழி வாழி அருமறையோர்— காவிரிநாட்
டண்ணல் அனபாயன் வாழி அவன்குடைக்கீழ்
மண்ணுலகில் வாழி மழை.

பொருள்: அழியாத தமிழானது தோற்றுவித்த பழமையான நூல்களை உணர்ந்த அகத்திய முனிவர் வாழ்க! பசுக்களெல்லாம் வாழ்க! அரிய மறைகளைக் கற்றுணர்ந்த மறையவர்கள் வாழ்க! காவிரியாறு பாய்கின்ற சோழநாட்டுக்குத் தலைவனாகிய அனபாயன் என்னும் சோழன் வாழ்க! அவனுடைய அரசாட்சிக்கு உட்பட்ட உலகத்தில் மழை வாழ்க!

## 34. சங்கீரணவணி

87. மொழியப் பட்ட அணிபல தம்முள்
தழுவ உரைப்பது சங்கீ ரணமே.

மேற் கூறப்பட்ட அணிகள் பலவும் தம்முட் பொருந்த வுரைப்பது சங்கீரணம் என்னும் அணியாம்.

தண்டுறைநீர் நின்ற தவத்தால் அளிமருவு
புண்டரிக நின்வதனம் போன்றதால் — உண்டோ

பயின்றா ருளம்பருகும் பான்மொழியாய் பார்மேல்
முயன்றால் முடியாப் பொருள்.

பொருள்: குளிர்ந்த துறைநீரிலே தவம் புரிந்தபடியால் வண்டால் மருவப்பட்ட தாமரை நின் முக மண்டலத்தை யொப்பப் பெறுதலால், அணைந்தாருள்ளத்தைப் பற்றும் பால் போன்ற மொழியினை யுடையாய்! உலகத்தில் முயற்சியினால் முடியாத பொருள் யாதுமில்லை.

இவ்வணியிற் பல அணிகள் கலந்து வந்துள்ளன. இதனைத் தமிழ்நூலார் 'கலவையணி' என்பர்.

இதனுள் தண்டுறைநீர் நின்றதவம் என்பது தற்குறிப் பேற்ற அணி. தவத்தால் என்றது காரகவேதுவணி. அளி மருவு என்பது சிலேடையணி. புண்டரிகம் நின்வதனம் போலும் என்றது உவமையணி. "உண்டோ முயன்றால் முடியாப் பொருள், என்பது வேற்றுப் பொருள் வைப் பணி." "உளம் பருகும் பான்மொழியாய்" என்பது சுவை யணி.

உவமை யுருவகங்கட்குப் புறனடை

88. ஒப்புமை யில்லதும் ஐயமும் உவமையில்
செப்பிய திறமும் உவமை உருவகமும்
உருவகத் தடக்கலும் உணர்ந்தனர் கொளலே

ஒப்புமையில்லதென்பது — பொதுநீங்குவமை.

"தானே யுவமை தனக்கு" (முன்னே வந்தது)

ஐயமென்பது — ஐயவுவமை.

"தாதளவி வண்டு" (முன்னே வந்தது)

இதனுள் தாமரை கொல் முகங்கொல் என்பது ஐயம். இவையிரண்டும் முன்னர் உவமையனைத்திற்கும் பொது வாகக் கூறிய சூத்திரத்துள், 'பண்பு தொழில், பயன்,

என்பன காரணமாக ஒன்றாகியும் பலவாகியும் வரும் பொருளோடு பொருள் இயைய வைத்து ஒப்புமை புலப் பட உரைப்பதே உவமை என்பதே கொண்டு, பொது வாகிய குணம் முதலாகியன காரணமாகப் பொருளோடு பொருள் இயைய வைத்து ஒப்பித்தன இல்லையென்று குற்றங் கூறப்படாது.

"தானே யுவமை தனக்கு" என்றவிடத்தும் ஒத்த பொருளை யெடுத்தே அவற்றினுஞ் சிறந்தது இஃது என்று கூறிய அளவே, அவற்றோடு ஒப்புமை வேண்டிய திலனாயின் முன்னர்க் கூறான். அதனால் பொருளோடு பொருள் பொருந்தவைத்து அவற்றின் ஒப்புமை கருதியே உரைக்கப்பட்டது என்க.

ஐயவுவமையும் 'தாமரைகொல் முகங்கொல்' என்ற விடத்துத் தாமரைக்கும் முகத்திற்கும் பொதுவாகிய ஒரு தன்மை கருதியே உரைத்தது. அவ்வாறின்றேல் தாமரை யோடு முகத்திடை ஐயந்தோன்றக் கூறான் என்பது.

இனி உவமை உருவகம்.

"வதனமதிய முதய மதியமே யொக்கும்"

(முன்னே வந்தது)

என்ற விடத்து முன் குணப் பொருளைச் சிறந்த பொரு ளோடு உருவகஞ் செய்து 'வதனமதியம்' என்றான். பிறகு சிறந்த பொருளோடு உவமித்து 'உதய மதியமே யொக்கும்' என்றான்.

எனவே முன்னர் உருவகஞ் செய்த அதனைப் பின்ன ரும் உவமிப்பது கூறியது கூறலாமெனின் அவ்வாறு ஆகாது. இப்படிப்பலவாறு மாறுபட்டு வருதலை இடம் நோக்கி உணர்ந்து கொள்க.

## 35. பாவிக அணி

98. பாவிக மென்பது காப்பியப் பண்பே.

பாவிகமென்று சொல்லப்படுவது பொருட்டொடர் நிலைச் செய்யுளிடத்தே புலவர்களாற் செய்யப்பெறும் ஒரு செயல்.

அது தொடர்நிலைச் செய்யுள் முழுவதும் நோக்கிக் கொள்ளப்படுமேயல்லது, தனித்து ஒரு பாட்டால் நோக்கிக் கொள்ளப் புலப்படாதது.

''பிறனில் விழைவோர் கிளையொடுங் கெடுப
பொறையிற் சிறந்த கவசமில்லை.
வாய்மையிற் கடியதோர் வாளியில்லை''
என்பதைப் போல் வருவது.

'பிறனில் விழைவோர் கிளையொடுங் கெடுப'
என்பதற்குப்

பொருள், பிறன் மனைவியை விரும்புவோர் சுற்றத் தொடுங் கெடுவர் என்பதாம். இஃது இராமாயணத்தால் உணரப்படும். ''பொறையிற் சிறந்த கவசமில்லை'' என்பது, பொறுமையைப் பார்க்கிலும் சிறந்த பாது காப்பில்லை என்பதாம். இது பாரதத்தால் உணரப் பெறும்.

''வாய்மையிற் கடியதோர் வாளியில்லை'' என்பதற்குப் பொருள், உண்மையைப் பார்க்கிலும் துன்பத்தைக் கொடுக்கக் கூடியதோர் அம்பில்லை என்பதாம். இஃது அரிச்சந்திரன் வரலாற்றால் அறியப்படும்.

பொருளணியியல் முடிந்தது.

## மூன்றாவது
# III சொல்லணியியல்

### மடக்கு

90\. எழுத்தின் கூட்டம் இடைபிறி தின்றியும்
பெயர்த்தும்வேறு பொருள்தரின் மடக்கெனும் பெயர்த்தே

எழுத்துக்களது தொகுதி பிறவெழுத்தானும், சொல்லானும் இடைவிடாதும் இடைவிட்டும் வந்து, மீண்டும் வேறு பொருளைத் தருவது மடக்கு என்னும் அணியாம்.

மடக்கு என்பது யமகம். அஃதாவது வந்த சொல்லே வருதல் (க)

### இதுவும் அது

91\. அதுதான்.
ஓரடி முதலா நான்கடி காறும்
சேரும் என்ப தெளிந்திசி னோரே.

அம் மடக்கு நான்கடிச் செய்யுளுள்ளே மடக்குங்கால், ஓரடிக்கண்ணும், ஈரடிக் கண்ணும், மூன்றடிக் கண்ணும், நான்கடிக்கண்ணும் மடங்கும் என்று புலவர் உரைப்பர். (உ)

### மடக்கு வகை

92\. ஆதி இடைகடை ஆதியோ டிடைகடை
இடையொடு கடைமுழு தெனவெழு வகைத்தே

அம்மடக்கு முதல்மடக்கும், இடைமடக்கும், கடைமடக்கும், முதலோடு இடைமடக்கும், முதலோடு கடைமடக்கும், இடையோடு கடைமடக்கும், முழுது மடக்கும் என ஏழு வகைப்படும்.

### இதுவும் அது

93\. ஓரடி யொழிந்தன தேருங் காலை
இணைமுதல் விகற்பம் ஏழும் நான்கும்
அடைவுறும் பெற்றியின் அறியத் தோன்றும்

ஓரடி மடக்கு ஒழிந்தவைகளை ஆராயுங் காலத்துத் தொடையின் இணை முதலாகிய விகற்பத் தொடையேழும் நான்குமாகிய பதினொன்றும் போல விளங்கித் தோன்றும்.

1. முதலீரடிக்கண் மடக்குதல்
2. முதலடிக்கண்ணும் மூன்றாம் அடிக்கண்ணும் மடக்குதல்
3. முதலடிக்கண்ணும் நான்காம் அடிக்கண்ணும் மடக்குதல்
4. கடையீரடிக் கண்ணும் மடக்குதல்
5. இடையீரடிக் கண்ணும் மடக்குதல்
6. இரண்டாமடிக் கண்ணும் நான்காமடிக் கண்ணும் மடக்குதல்

என இரண்டடி மடக்கு ஆறும்—

1. இறுதியடி யொழித்துப்பிற மூன்றடிக் கண்ணும் மடக்குதல்
2. முதலடியொழித்துப் பிற மூன்றடிக் கண்ணும் மடக்குதல்
3. முதல் அயலடியொழித்துப்பிற மூன்றடிக்கண்ணும் மடக்குதல்
4. ஈற்றயலடி யொழித்துப்பிற மூன்றடிக் கண்ணும் மடக்குதல்

என மூன்றடி மடக்கு நான்கும்—

நான்கடியு மடக்கிய முற்றுமடக்கொன்றுமாகிய பதினொன்றும் யாப்பதிகாரத்துள், தொடைவிகற்பங்களுக்கு நாற்சீரடியுட் கூறிய அதனை நான்கடிச்

செய்யுளுட் கூறினார், 'ஒப்பின் முடித்தல்' என்னும் தந்திர வுத்தியால், இப்பதினொன்றும், ஓரடி மடக்கு நான்கும் ஆகிய பதினைந்தும், மேற் கூறிய ஏழு கூறு பாட்டோடு கூட்ட நூற்றைந்து வகைப்படும்.

அவை இடையிட்டு வருவனவும், இடையிடாது வரு வனவும், இடையிட்டும் இடையிடாதும் வருவனவுமாகிய மூவகையோடுங் கூட்ட முந்நூற்றறுபத்தைந்து வகைப் படும். அவற்றுள் சில காட்டுதும்.

## அடி முதன் மடக்கு

### 1. முதலடி முதல் மடக்கு

''துறைவா துறைவார் பொழில் துணைவர் நீங்க
உறைவார்க்கு முண்டாங்கொல்
சேவல்—சிறைவாங்கிப்
பேடைக் குருகாரப் புல்லும் பிறங்கிருள் வாய்
வாடைக் குருகா மனம்.''

பொருள்: நெய்தல் நிலத் தலைவனே! துறையின் கண் அமைந்துள்ள பொழிலிடத்திலே தலைவர் பிரியத் தனித் திருப்பார்க்கும் உண்டாகுமோ? சேவற் குருகானது தன் சிறகை வளைத்துப் பேடைக் குருகை இறுகத் தழுவும் மிகுந்த இருளினையுடைய யாமத்தின் கண், வாடைக் காற்று வந்தால் கரையாத மனம் (உண்டாகுமோ?)

இதில் முதலடி முதலில் 'துறைவா துறைவா' என்று ஒரே சொல் மடங்கி வந்தமை காண்க. 'துறைவா துறை வா' என்பது மடக்கு.

### 2. இரண்டாமடி முதன் மடக்கு

கனிவா யிவள் புலம்பக் காவலநீ நீங்கில்
இனியார் இனியார் எமக்குப்—பனிநாள்

இருவராத் தாங்கும் உயிரன்றி யெங்குண்
டொருவராத் தாங்கு முயிர்.

பொருள்: கனி போன்ற மொழியினையுடைய இவள் புலம்பும்படி, அரசனே! நீ பிரிந்த காலத்தில், எங்களுக் கினியராய் இனிமையான சொற்களைச் சொல்லிக் காக்குந் தலைவர் இனி மேல் யாவர்? பனிக் காலத்திலே தம்மிற் சேர்ந்து பிரியா திருந்த இருவருங் கூடித் தாங்கா நிற்கும் உயிரல்லாமல், ஒரு தன்மையராகப் பிரிந்திருந்த மடவார் தாங்கும் உயிர் எக்காலத்திலே எவ்விடத்திலே உண்டு? நீ சொல்லுவாயாக!

இதன் இரண்டாமடியில், "இனியார் இனியார்" என ஒரு சொல் மடங்கி வந்தமை காண்க.

### 3. மூன்றாமடி முதல் மடக்கு

தேங்கானல் முத்தலைக்கும் தில்லைப்
பெருந்தகைக்கு
ஓங்காரத் துட்பொருளாம் ஒண்சுடர்க்கு—நீங்கா
மருளா மருளா தரித்துரைக்கு மாற்றம்
பொருளாம் புனைமாலை யாம்.

பொருள்: தேனையுடைத்தாகிய கழிக்கானற் கண் உண்டாகிய முத்தம் வந்து அலைக்குந் திருத்தில்லையில் எழுந்தருளிய பெரியோனுக்கு — பிரணவத்தின் உட் பொருளாயிருக்கப்பட்ட ஒள்ளிய சோதி வடிவாகிய கடவுளுக்கு, இடையறாத அவாவாகிய மயக்கத்தினை மேற் கொண்டு ஒருவனுரைக்கிற அறிவழிந்த சொல் பொருளும் ஆகும்; பூணப்பட்ட மாலையும் ஆகும்.

இதனுடைய மூன்றாமடியில் 'மருளா மருளா' என்னும் மொழி மடங்கியிருத்தல் காண்க.

### 4. நான்காமடி முதன் மடக்கு

இவளளவுந் தீயுமிழ்வ தென்கொலோ தோயும்
கவள மதமான் கடத்தில்—திவளும்
மலையார் புனலருவி நீயணுகா நாளின்
மலையா மலையா நிலம்.

பொருள்: தலைவனே! நீ இவளை வந்து அணையாத போது தோய்கின்ற கவளத்தையுண்ணும் மதயானையின் மதத்தைப் போல் புரளும் அருவியையுடைய பொதிய மலைக் கண்ணே பிறந்து, எல்லோருக்குங் குளிர்ச்சியைச் செய்கின்ற தென்றல் இவளுக்கு மட்டும் தீயைச் சொரி வதற்குக் காரணம் யாது கூறுவாயாக!

இதன் இறுதியடியில், "மலையா மலையா" என்னுஞ் சொல் மடங்கி வந்தமை காண்க. மேற் கூறிய நான்கும் ஓரடி முதன் மடக்கு ஆகும்.

### 5. முதலடியும் இரண்டாமடியும் முதன் மடக்கு

நினையா நினையா நிறைபோ யகலா
வினையா வினையா மிலமால்—அனையாள்
குரவாருங் கூந்தல் குமுதவாய்க் கொம்பில்
புரவாள நீபிரிந்த போது.

பொருள்: தலைவனே! குரவம் பூவினைச் சூடிய கூந்தலினையும், அல்லி மலரையொத்த வாயினையுமுடைய வஞ்சிக் கொம்பு உண்டாயின் அக் கொம்பு போன்றவள் இவள். இவளை நீ பிரிந்த பொழுதே நின்னை யாங்கள் நினைத்து, எங்களுடைய நிறையா யினது எங்களை விட்டு நீங்கி வருந்தி ஒரு செய்தியும் அறியாதவர்களாவோம். ஆதலால் எங்களைப் பிரியா தொழிக.

இதன் முதலடியில், "நினையா நினையா" எனவும் இரண்டாமடியுள், "வினையா வினையா" எனவும் மடக்கு கள் வந்தன.

### 6. முதலடியும் மூன்றாமடியும் முதன் மடக்கு

அடையார் அடையார் அரணழித்தற் கின்னல்
இடையாடு நெஞ்சமே ஏழை—உடையோர்
மயிலா மயிலா மதர்நெடுங்கண் மாற்றம்
குயிலாமென் றெண்ணல் குழைந்து.

பொருள்: ஊசல் கயிறுக்கு ஒப்பாக இடையே ஆடு கின்ற உள்ளமே! நீ தலைவியினுடைய சாயலை மயிலாகுமென்றும், அவளது மதர்த்த நெடிய கண்ணை வேற்படையாகுமென்றும் அவளுடைய மொழி குயிலினது மொழியைப் போன்ற தாகுமென்றும் மனமிளகி நினையா தொழிவாயாக! அல்லாமல் அவ்வாறு நினைத்தியாயின், பகைவரடையும் அரிய அரணை அழித்தற்கு வருத்தமாம்.

இதன் முதலடியில், ''அடையார் அடையார்'' எனவும் மூன்றாம் அடியில், 'மயிலா மயிலா' எனவும் மடக்குகள் வந்தன.

### 7. முதலடியும் ஈற்றடியும் முதன்மடக்கு

மானவா மானவா நோக்கின் மதுகரஞ்சூழ்
கானவாங் கூந்தாலங் காரிகைக்குத்—தேனே
பொழியாரந் தார்மேலும் நின்புயத்து மேலும்
கழியா கழியா தரவு

பொருள்: மனுகுல வேந்தனே! மான்கள் விரும்பும் நோக்கத்தையும், வண்டுகள் மதுவுண்ணுமாறு சூழுங் கூந்தலையுமுடைய எம் பெண்ணுக்குத் தேன் பொழியும் நினது அழகிய ஆத்திமாலையிடத்தும் நினது புயத்தின் கண்ணும் மிக்க அவாவானது நீங்கமாட்டாது.

இதன் முதலடி முதலில், 'மானவா மானவா' எனவும், ஈற்றடி முதலில் 'கழியா கழியா' எனவும் மடக்குகள் வந்தன.

**8. மூன்றா மடியும் நான்கா மடியும் முதன் மடக்கு**

மாதருயிர் தாங்க வள்ளல் வருநெறியில்
பேதுறவு செய்யும் பெரும்பாந்தள்—யாதும்
வரையா வரையா மெனுமா மதமா
விரையா விரையா வெழும்.

பொருள்: வள்ளலே! இவளுயிரைத் தாங்குதல் காரணமாக நீ வரும் வழியில் நடுக்கஞ் செய்யக் கூடிய பெரும் பாம்புகள், எவற்றையும் கொல்லக் கூடிய பெரிய மலை போன்ற மதத்தையுடைய யானைகளை இரையாக எண்ணி இரைந்து கொண்டு வரும்.

இதன் மூன்றாமடி முதலில் 'வரையா வரையா' எனவும் நான்காமடி முதலில் 'விரையா விரையா' எனவும் மடங்கி னமை காண்க.

**9. இரண்டாமடியும் மூன்றாமடியும் முதன் மடக்கு**

குரவார் குழலாள் குவிமென் முலைதாம்
விரவா விரவாமென் தென்றல்—உரவா
வரவா வரவா மெனநினையாய் வையம்
புரவாளர்க் கீதோ புகழ்

பொருள்: குரா மலரினையணிந்த கூந்தலையுடைய வளுடைய மார்பிலே திரண்ட மெல்லிய முலையின் மேல் நீகூடாத இரவின் கண் ணுண்டாகிய இனிய தென்றல் வரவு, அதனைப் பாயும் பாம்பாகுமென எண்ணாதே பிரிகின்றாய் தலைவனே! உலகத்தைக் காத்தல் செய்யுந் தலைவனுக்கு இதுவோ புகழ்!

இதன் இரண்டாமடி முதலில் 'விரவா விரவா' எனவும் மூன்றாமடி முதலில் வரவா வரவா எனவும் மடக்குகள் வந்தமை காண்க.

### 10. இரண்டாமடியும் ஈற்றடியும் முதன்மடக்கு

மழையார் கொடைத்தடக்கை வாளபய னெங்கோன்
விழையார் விழையார் மெல்லாடை—குழையார்
தழையா முணவுங் கனியா மினமும்
முழையா முழையா முறை.

பொருள்: முகிலைப் போல மிகவுங் கொடுக்க வல்ல பெரிய கையினையும் ஒளியினையும் உடைய அபயனாகிய எமது அரசனைப் பகைத்தார் விரும்பப் பட்ட அரிய மெல்லிய ஆடை தளிரார்ந்த தழையாம், உணவும் கனிகளாம், அவர்களுக்குச் சுற்றமும் மான்க ளாம், இருப்பிடமும் மலைக் குகையாம்.

இதன் இரண்டாமடி முதலில், 'விழையார் விழையார் எனவும் ஈற்றடி முதலில், 'முழையா முழையா' எனவும் மடக்குகள் வந்தன.

### 11 முன்னைய மூன்றடியும் முதன் மடக்கு

இறைவா விறைவால் வளைகாத் திருந்தியார்
உறைவா ருறைவார் புயலால் நறைவாய்
வண்டளவு வண்டளவு நாளின் மயிலாலக்
கண்டளவில் நீர்பொழியுங் கண்.

பொருள்: இறைவனே! முன்கையின்கண் வெள்ளிய வளையல்கள் வீழாதபடி காத்திருந்து யார் உயிரோடு வாழ்வார்? நீர்த்துளி மிக்க புயலினாலே, தேனையிடத் திலேயுடைய வளப்பம் அமைந்தமுல்லை மலரின் மீதே வண்டுகளிருக்கப்பட்ட கார் காலத்தில் மயிலாடக் கண்டு அளவில்லாத நீரைப் பொழியுங் கண்களாதலால்.

இதில் 'இறைவா விறைவா' என்று முதலடி முதலிலும் உறைவார் உறைவார்' என்று இரண்டாமடி முதலிலும், 'வண்டளவு வண்டளவு' என்று மூன்றாமடி முதலிலும் மடக்குகள் வந்தன.

### 12. இரண்டாம் அடியொழிந்த ஏனைய மூன்றடியும் முதன் மடக்கு

கொடியார் கொடியார் மதின்மூன்றுங் கொன்ற
படியார் பனைத்தடக்கை நால்வாய்க்—கடியார்
உரியார் உரியார் எமையாள வோதற்
கரியார் கரியார் களம்

பொருள்: கொடியராய் உள்ளாருடைய கொடிகள் பொருந்திய முப்புரத்தையு மெரித்த தன்மையினையுடையார்; பனைபோன்ற பெரிய கையினையுடைய யானையின் அச்சத்தைத் தரும் தோலையுடையார்; எம்மை ஆண்டு கொள்ளுதற்கு உரியவர்; எவராலும் புகழ்தற்கு அரியவர்; கறுத்த கண்டத்தினை யுடையவர்.

இதில் மூன்றிடங்களில் மடக்குகள் அமைந்திருத்தலைக் காண்க.

### 13. மூன்றாமடியொழிந்த ஏனைய மூன்றடியும் முதன் மடக்கு

மலையு மலையு மகிழ்ந்துறையும் வேயும்
கலையுங் கலையுங் கடவும்— தொலைவில்
அமரி எமக்கரணாம் என்னும்அவர் முன்றில்
குமரி குமரிமேற் கொண்டு

பொருள்; மலையின் கண்ணும் கடலின் கண்ணும் மகிழ்ந்து உறைபவளும், இளம் பிறையைச் சூடு பவளும், ஆண்மானைச் செலுத்துபவளும் தொலைவில்லாத அமரினையுடையளு மாகியாள், எமக்குக் காவலாம் என்பார்க்கு முன்னே சிங்கத்தைச் செலுத்தித் தோன்றும்.

இதில், மூன்றாம் அடியொழிய ஏனைய அடிகளில் மடக்கு வந்தமை காண்க.

### 14. முதலடியொழிந்த ஏனைய மூன்றடி முதன் மடக்கு

பாலையாழ் தன்னில் பதிற்றிரட்டி வெய்தன்றே
மாலைவாய் மாலைவாய் இன்னிசை—மேலுரை

மேவலர் மேவலர் மெல்லாவி வாட்டாதோ
காவலர் காவலராங் கண்

பொருள்: தலைவர் நம்மைக் காவாமல் கைவிடுவா ரானால் அப்பொழுது, பாலையாழைக் காட்டிலும் இருபது மடங்கு வெம்மையை உடையதன்றோ? மாலைப் பொழுதின்கண் விறலி பாட்டின் கண்ணுண் டாகிய இன்பத்தையுடைய இசைமேலாயுள்ள புகழ்ச்சி யைப் பொருந்தாதார் விரும்பிக் கூறும் அலர்; அஃது எங்களுடைய மெல்லிய உயிரை வாட்டா தொழியுமோ?

மாலை—பாட்டு. இதில்முதலடி தவிர ஏனைய அடி களில் மடக்குவந்துள்ளமை காண்க.

### 15 முற்று மடக்கு

வரைய வரைய சுரஞ்சென்றார் மாற்றம்
புரைய புரையவெனப் பொன்னே—உரையல்
நனைய நனைய தொடைநம்மை வேய்வர்
வினையர் வினையர் விரைந்து.

பொருள்: களவொழுக்கம் ஆகாது, மணஞ் செய்ய வேண்டும் என்னும் அவாவினால் பிரிந்து மலைகளை யுடைய பாலை நிலத்தைக் கடந்து போனவர், "உன்னை விட்டுப் பிரியேன், பிரிந்தால் ஆற்றேன்" என்று முற்காலத்தில் நம்மைத் தேற்றிய மொழி இப்பொழுது நமக்குப் பெரிய குற்றத்தைப் பயந்தனவென்று திருமகளைப் போன்றவளே! நீ சொல்லுதல் கூடாது. தேனோடுங் குளிர்ச்சியோடுங் கூடிய மாலையை நமக்குச் சூட்டுவர், அவர் பல செய்தியும் அறிவினையும் உடைய ராதலால் விரைந்து வந்து.

'விரைந்து வந்து சூட்டுவர்' என்று கூட்டுக. இதில் நான் கடிகளினும் மடக்கு வந்துள்ளமை காண்க.

## 16. இடை முற்று மடக்கு

மனமேங் குழைய குழையவாய் மாந்தர்
இனநீங் கரிய கரிய—புனைவதனத்
துள்வாவி வாவிக் கயலொக்கு மென்னுள்ளம்
கள்வாள வாளவாங் கண்.

பொருள்: மனந்தளர்ந்த மானினது கண்ணைப் போன்றனவுமாய், குழையென்னுங்காதணியைத் தொடர் வனவுமாய், இளைஞர்கூட்டத்தை விட்டு நீங்குதற்கு அரியனவுமாய், கருமையையும் உடையவைகளாக இருப்பன, அழகு செய்யப்பட்ட முகத்தில் உலாவிப் பொய்கைக் கயல்போலும் என்னுள்ளத்தைக் களவு கொண்டவளுடைய அவ்வாளொத்த கண்கள். [வாளொத்த கண்கள் உடைத்தாயிருப்பன என்று கூட்டுக.]

இப்பாடலின், இடையே நான்கடிகளிலும் மடக்கு வந்துள்ளமை காண்க.

## 17. இறுதி முற்று மடக்கு

மாலை யருளாது வஞ்சியான் வஞ்சியான்
மேலை யமரர் கடைவேலை வேலை
வளையார் திரைமேல் வருமன்ன மன்ன
இளையா ளிவளை வளை

பொருள்: வஞ்சிக் காவலன் தன் மார்பினுடைய மாலையைக் கொடாமல் வஞ்சனை செய்வான் அல்லன். மேலாயுள்ள வானவர் கடைந்த காலத்துக் கரையினையும் சங்குகளையும் உடைய கடலில் தோன்றின திருமகளாகிய அன்னத்தையொத்த பேதையாகிய இவளுடைய வளைகளை.

'வளைகளைக் கொள்வானலன்' என்று கூட்டுக. இப்பாடலின் இறுதி நான்கு இடங்களிலும் மடக்கு வந்துள்ளமை காண்க.

### 18 முதலும் இடையும் முற்று மடக்கு

கொண்டல் கொண்டலர் பொழில் தொறும்
பண்ணையாய்ப் பண்ணையா யத்துள்ளார்
வண்டல் வண்டலர் தாதுகொண்
டியற்றலின் வருமண மணன் முன்றில்
கண்டல் கண்டக மகிழ்செய
வோதிமங் கலந்துறை துறை வெள்ளம்
மண்டல் மண்டல் முழுதுடன்
வளைதரு வளைதரு மணிவேலை.

பொருள்: கீழ்க்காற்று மோத அலர்கின்ற சோலை தோறும் இசையை ஆராயும் விளையாடற் கூட்ட மகளிர் சிற்றிலை வண்டு களரற்றிய தாதுக்களைக் கொண்டு செய்தலால், மணம் வீசும் மணல் முற்றமாகிய தாழை மீதே பார்த்தவர்களிகூருமாறு அன்னங்கள் கூடியிருக்கும் துறையில் வெள்ளத்தைக் கொண்டு ஏறா தொழிவாயாக! உலகம் முழுவதையும் சூழும் சங்குகளால் தரப்பட்ட முத்துக்களையுடைய கடலே.

'கடலே ஏறா தொழிவாயாக' என்று கூட்டுக. இப்பாட்டின் நான்கு அடிகளினும் முதற்கண்ணும் இடைக் கண்ணும் மடக்குகள் அமைந்துள்ளமை காண்க.

### 19. முதலும் இறுதியும் முற்று மடக்கு

நிரையா நிரையா மணிபோனிறை கோடல் கோடல்
வரையா வரையா மிருண்முன்வரு மாலை மாலை
விரையா விரையா வெழுமின்னொளி மேக மேகம்
உரையா வுரையா ரினுமொல்லன முல்லை முல்லை

பொருள்: ஆன் நிரைகளின் ஒழுங்கான மணி யோசையைப் போல எங்கள் நிறையைக் கவராதே காந்தளே! அளவு செய்தற்கரிய அரையா மிருளுக்கு

முன்னே வரும் மயக்கத்தைச் செய்யும் மாலையானது கடுகியிரைந்து மின்னொளியை உடையதாய்ச் செல்லும் முகில்களும் ஒன்றுஞ் சொல்லாத புகழையுடைய தலைவரினும் பகையாயின முல்லை நிலத்துள்ள முல்லைக் கொடிகளும்.

முல்லைக் கொடிகளும் பகையாயின என்று கூட்டுக இப் பாடலின் முதலினும் இறுதியினும் மடக்கு வந்துள்ளமை காண்க.

### 20. இடையும் இறுதியும் முற்று மடக்கு

வருகம் புளினம் புளினம்பயில் வேலை வேலை
ஒருகா லுலவா வுலவா வருமோத மோத
வருகே தகைகே தகைசேர்தரு மன்ன மன்ன
பெருகா தனவே தனவேரசை மாதர் மாதர்

பொருள்: வாரா நின்ற கம்புட் கூட்டங்கள் மணற் குன்றுகளிலே யிருக்குங் காலத்தில், கடலானது ஒரு காலுங் குறையாது உலாவிக் கரையை மோதவரும். அருகே நின்று தடுக்கப்பட்ட தாழை மீதே அன்னங்கள் சேருமாதலால் தலைவனே! பெருகா தொழியுமோ முலைகளினது அழகழியும் மடவாருடைய காதல்.

காதல் பெருகா தொழியுமோ என்று கூட்டுக. இப் பாடலில் இடைக்கண்ணும் இறுதிக் கண்ணும் மடக்கு வந்துள்ளமை காண்க.

### 21. அடிதோறும் மூன்றிடத்து மடக்கு

களை களைய முளரியரு கடை கடைய
மகளிர் கதிர் மணியு மணியும்
வளை வளைய காதலமு மடை மடைய
மது மலரு மலைய மலைய
இளையிளைஞர் கிளைவிரவி யரியரியின்
மிசைகுவளை மலரு மலரும்

கிளைகிளைகொ ளிசையளிகண் மகிழ்மகிழ்செய்
கெழுதகைய மருத மருதம்

பொருள்: களை களைதற்குத் தாமரை யருகே யடைந்த கடைசியருடைய ஒளியமைந்த மணிகளும், இடப்பட்ட வளை சூழ்ந்த கையும், அடைத்த மடையிலுள்ள தேனையுடைய பூவும் மிகவு மாறுதலையடைய இளைய சிறிய மக்களது சுற்றம் கூடி அறுத்திடப்பட்ட அரியின் மீதே குவளைப் பூவும் மலரும், இனத்துடனே கிளையென்னு நரம்பினின்று மெழுமோசை போலப் பாடா நின்ற அளிக்குலம் கள்ளை மகிழ மலரினுண்டு மகிழ் செய்யும் விளக்கமுடைய மருத மரத்தினையுடைய மருத நிலமானது.

இப்பாட்டில் அடிதோறும் மூன்றிடத்தில் மடக்கு அமைந்துள்ளது.

## 22. இடையிட்டு வந்த முதன் முற்று மடக்கு

தோடு கொண்டளி முரன்றெழக் குடைபவர்
குழல் சோர்
தோடு கொண்டதே மலர்சுமந் தகில்கமழ்ந் தவர்தம்
தோடு தைந்தசெஞ் சாந்தணி திரண்முலை
யிடைதோய்
தோடு தண்புனல் நித்திலந் துறைதொறுஞ் சொரியும்

பொருள்: கூட்டங் கொண்டு வண்டுகளொலித் தெழப் புனலாடுவார் கூந்தலிற் சேர்ந்த இதழ் கொண்ட தேனோடு கூடிய மலரைச் சுமந்து அகில்மணம் வீசும் மாதருடைய தோளைச் செறிந்த செஞ்சந்தனம் அணியப் பட்ட திரண்ட முலையிடை ஒழுகியோடா நின்ற குளிர்ந்த நீரானது முத்துக்களைத் துறைகள் தோறுங் குவியா நிற்கும்.

இதில், 'தோடு' என்னுஞ் சொல் நான்கடிகளினும் முதன் மடக்காக வந்துள்ளது. ஒரு சொல் இடையிற்

பல்வேறு வகைப்பட்ட சொற்கள் வர வெவ்வேறிடத்தில் மடங்கி வருவது இடையிட்டு வரும் மடக்கு என்று சொல்லப் பெறும். ஒரு சொல் இடையில் வேறு சொற்கள் கலவாமல் அடுத்து, ''வஞ்சியான் வஞ்சியான்'' என மடங்குவது இடையிடாது வரும் மடக்கு என்று சொல்லப் பெறும்.

### 23. இடையிட்டு வந்த இடை முற்று மடக்கு

பரவி நாடொறும் படியவாம் பல்புகழ்ப் பரப்பின்
இரவி சீறிய படியவாம் பரியெரி கவர
விரவி மான்மயில் படியவாம் வேய்தலை பிணங்கும்
அருவி வாரணம் படியவாம் பலர்பணை மருதம்.

பொருள்: புகழ்ந்து நாள்தோறும் உயர்ந்தோர் விரும்பும் பல புகழையுடையதாகிய நாடுகளுடனே சோழனுடைய சிறிய ஊர்கள் வாவித் தொறும் எரியாற் கொள்ளப்பட்ட மானினந் திரண்டு சுற்றித் திரியும் தன்மையவாம். வேய்தலை பிணங்கும் அந்தச் செம்பியன் யானைபுகுந்து கலக்க நீர் புலரும் தடங்களையுடைய வயல் மருதம்.

செம்பியனுடைய சினத்திற்கு ஆளான ஊர் மான்கள் சுற்றித் திரியுங் காடாகவும், மருதம் மூங்கில் செறியுங் குறிஞ்சியாகவும் மாறு மென்பதாம். இதில் படியவாம் என்னுஞ்சொல் நான்கடிகளின் இடையிலும் மடங்கி வந்தமை காண்க.

### 24. இடையிட்டு வந்த இறுதி முற்று மடக்கு

சொன்ன நாளிது சுரும்பிமிர் இதழிபொன் கால
மின்னு வாள்விட வில்வளைத் தூன்றிய கால
இன்ன கார்முகில் இனமிருண் டெழுதரு கால
மன்னர் வாரலர் தான்வரு மயின்மருங் கால

பொருள்: தாம் வருதுமென்று சொன்ன நாள் இதுவாயிருந்தது. வண்டுகள் பாடாநின்ற கொன்றைகளெல்

லாம் பொன் பொழிய, மின்னானது ஒளியை உமிழ, இந்திரவில்லை வளைத்து வீழ்ந்த மழைத் துளிகளை யுடையதாய், இப்படி வந்த பருவ கால முகில் கூட்டமா யிருண்டெழும் பொழுதும் தலைவர் வந்திலர். பருவந்தான் வாரா நின்றது, பக்கமெல்லாம் மயில்கள் ஆட.

மயில்கள் ஆடப் பருவந்தான் வாரா நின்றது என்று கூட்டுக. இதில் 'கால' என்னுஞ் சொல் நான்கடிகளின் ஈற்றிலும் மடங்கி வந்தது.

### 25. இடையிட்டும் இடையிடாதும் வந்த இடையும் இறுதியும் முற்று மடக்கு

வாமான மான மழை போன்மத மானமான
நாமான மான கமுற்றாழக மானமான
தீமான மான வர்புகத்திற மானமான
காமான மான கல்சுரங்கனன் மானமான

பொருள்: தாவும் மான்களையுடையன. பெரிய முகில் போன்று மதமமைந்த யானைகளையுடையன. அச்சமான புலியுகிர் உறுதலால் தாழ்ந்த மனத்தையுடைய விலங்குகளையுடையன. தீமையை உடையன. மக்களுடாடாத திறமான தன்மையை உடையன. சோலைகளையொப்ப வலிய கற்களையுடையன. இத் தன்மையை உடைய வழிகள் நெருப்பினள வாயுள்ளன.

தீமை—தீமென ஈற்றுயிர் கெட்டது. கல்ல—கல்லென ஈறு குறைந்தது. இதில், 'மான மான' என்னுஞ் சொல் நான்கடிகளின் இடையிலும் ஈற்றிலும் இடையிட்டும் இடையிடாதும் மடங்கி வந்தமை காண்க.

### அடி முழுதும் மடக்கு

94. அடி முழுது மடக்கலும் ஆங்கதன் சிறப்பே.

அடிகள் முழுவதும் மடங்கி வருதலும் அம் மடக்கிற்குச் சிறப்புடையது. (அவை ஈரடி மடக்கு, மூவடி மடக்கு, நான்கடி மடக்கு என மூன்று வகைப்படும்.)

### 26. முதலீரடியும் முழுதும் மடக்கு

விரைமேவு மதமாய விடர்கூடு கடுநாக
விரைமேவு மதமாய விடர்கூடு கடுநாக
வரைமேவு நெறியூடு தனிவாரல் மலைநாட
நிரைமேவு வளைசோர இவளாவி நிலைசோரும்.

பொருள்: மணம் வீசும் மதத்தினையுடைய துன்ப முறுங்கடிய யானைகளை இரையாக விரும்புவதும் முழையுள் உறைவதும் நஞ்சை உடையதும் ஆகிய பாம்புகளையுடைய மலை பொருந்திய வழியினூடு தனிமையாய் வாரா தொழிவாயாக. குறிஞ்சி நிலத் தலைவனே! வருவையாகில் நிரை பொருந்திய வளை சரிய இவள் ஆவியும் நிலையில் நின்றும் நீங்கும்.

இச் செய்யுளில் முதலிரண்டடிகளும் முழுதும் மடங்கி வந்தமை காண்க,

### 27. முதலடியும் மூன்றாம் அடியும் முழுதும் மடக்கு

கடன்மேவு கழிகாதல் மிகநாளும் மகிழ்வார்கள்
உடன் மேவு நிறை சோர மெலிவாள் தன்
உயிர் நோவும்
கடன் மேவு கழிகாதன் மிகநாளும் மகிழ்வார்கள்
உடன் மேவு பெடைகூடு மறுகாலும் உரையா கொல்

பொருள்: முறையாகப் புணரும் மிகுந்த காதல் வரை நாள்கள் தோறும் மகிழ்வார்களுடனே கூடிக் கொண்டு பொருந்திய ஒழுக்கங் குன்ற வருந்துவாளது உயிர் வருத்தத்தைக் கடலிற் பொருந்திய கழிக்கண் காதன் மிக்க காலைதோறும் களிப்பு மிகுந்த மலர்க் கள்ளை விரும்பும் பெடையோடு கூடிய வண்டுகளும் தலைவனுக்கு உரைக்க மாட்டா போலும்.

இச் செய்யுளில் முதலடியும் மூன்றாம் அடியும் முழுதும் மடங்கி வந்தமை காண்க.

### 28. இடையிரடியும் முழுதும் மடக்கு

கருமாலை தொறுகாதல் கழியாது தொழுதாலும்
உருமாய மதனாக மடுமாறு புரிவார்முன்
உருமாய மதனாக மடுமாறு புரிவார்முன்
வருமாய வினைதீர ஒருநாளும் மருளார்கொல்

பொருள்: பிறவித் தொடர்ச்சி தோறும் அன்பு நீங்காமல் தம்மை வணங்கினாலும், வடிவழியும்படி காமனுடலைக் கெடுக்குந் தன்மையைச் செய்வார் முன்னே, இடியேறு போல வந்த மதத்தையுடைய யானையைக் கொல்லும் இயல்பினையுடையார் தொல்லையாய் வரும் வஞ்சவினை நீங்க ஒரு காலமும் எமக்கு அருளார் போலும்.

இச் செய்யுளின் இரண்டாம் அடியும் மூன்றாம் அடியும் முழுதும் மடங்கி வந்தமை காண்க.

### 29. முதலடியும் ஈற்றடியும் முழுதும் மடக்கு

மறைநுவல் கங்கை தாங்கினார்
நிறைதவ மங்கை தாங்கினார்
குறையென அண்டர் வேண்டவே
மறைநுவல் கங்கை தாங்கினார்

பொருள் : மறைபுகழுங் கங்கையாற்றை யணிந்தார். மிகுந்த தவத்தையுடைய உமாதேவியை இடப்பாகத்தில் தாங்கினார். எமக்கு இது குறையென்று தேவர்கள் தொழுது இரக்க மறைவுகளைப் பிறருக்குப் போதிக்கும் நான்முகன் தலையைக் கையிலே தாங்கினார்.

இச்செய்யுளில் முதலடியும் நான்காம் அடியும் முற்றும் மடங்கி வருதல் காண்க.

### 30. கடை ஈரடியும் முழுதும் மடக்கு

கொல்லியம் பொருப்பனைமேவார் கோநகர்
இல்லி மேவுவ தியம்ப வேண்டுமோ
வல்லியந் தாமரை வனங்க ளாயின
வல்லியந் தாமரை வனங்க ளாயின.

பொருள் : கொல்லி மலையை உடைய செம்பியனைப் பொருந்தாதவர்களாகிய அரசர் நகரத்து மாளிகைகளை எரிக்க வருதல் சொல்ல வேண்டுமோ? வல்லியோடு கூடிய அழகிய தாமரைகளையுடைய நீர்த்தடங்களாயினவெல்லாம், புலியையும் தாவும் மான்களையுமுடைய காடாயின.

இச்செய்யுளின் மூன்றாம் அடியும் நான்காம் அடியும் முழுதும் மடங்கி வருதல் காண்க.

### 31. இரண்டாமடியும் ஈற்றடியும் முழுதும் மடக்கு

நலத்தகை பெறவிரு சரண மோதுநம்
குலத்தாகை பணிகொளே காம்ப ரத்தனே
நலத்தகை மகளொரு பாகம் நண்ணுமேல்
குலத்தொகை பணிகொளே காம்பர த்தனே

பொருள் : நன்மையை மிகுதியாகப் பெற வேண்டி இரண்டு திருவடிகளையும் போற்றுகின்ற நம்முடைய குலத்திலுள்ளார் கைகளைத் தொழில் கொள்ளும். ஏகாம்பரத்தை யுடையான், நன்மை மிக்க தலை மகளை ஒரு பாகத்திலே சேர்க்கும் குலத்தான் மிகுந்த பாம்பாற் புனையப்பட்ட ஒற்றையாடையை உடையவன்.

இச்செய்யுளில் இரண்டாம் அடியும் மூன்றாம் அடியும் மடங்கி வந்தமை காண்க.

### 32. முதல் மூன்றடியும் மடக்கு

காம ரம்பயி னீரம துகரம்
காம ரம்பயி னீரம துகரம்

காம ரம்பயி னீரம துகரம்
நாம ரந்தை யுறனினை யார்நமர்

பொருள் : பொழிலின் மரந்தோறும் நெருங்கிய வண்டினமானவை காமரம் என்னும் இசையைப் பாடா நின்றன. தேன் பொழியுங் காமனுடைய அம்பு வேற்செய்தியை உடையவாயின. வேனிற் காலத்தில் எதிர்ப்பட்ட நாம் துன்பத்தை யடையவும் நம்முடைய காதலர் நினையா தொழிந்தார்.

இதன் முதன் மூன்றடியுமடக்காயினமை காண்க.

### 33. முதலடியொழிந்த ஏனை மூன்றடியும் முழுதும் மடக்கு

வரிய வாங்குழன் மாத ரிளங்கொடி
அரிய வாங்கய தானவ னங்களே
அரிள் வாங்கய தானவ னங்களே
அரிய வாங்கய தானவ னங்களே.

பொருள் : வண்டுகள் விரும்பப் பெறும் கூந்தலை யுடைய காதலிளங் கொடியே! அடைதற்கரிய அவ் விடத்துப் பள்ளத்திலுண்டான புனல் (நீர்) வண்டுகள் தாவுகின்ற யானையினது மதநீர்களே, சிங்கங்கள் உலாவப் பெறும் பெரிய இடத்தோடு கூடியிருந்த காடுகள்.

அயம்—பள்ளம். கய—பெரிய. இதில் மூன்றடிகளில் மடக்கு வந்தமை காண்க.

### 34. இரண்டாமடி யொழிந்த ஏனை மூன்றடியும் மடக்கு

கடிய வாயின காமரு வண்டினம்
அடிய வாவகன் றாருழை வாரலர்
கடிய வாயின காமரு வண்டினம்
கடிய வாயின காமரு வண்டினம்

பொருள் : விளக்கமுடைய அழகு பெற்றவளை அடியிலே வீழக் கண்டும் நம்மைப் பிரிந்தவர் நம்மிடத்தில் வந்திலர். நறு நாற்றத்தை விரும்பா நின்றன சோலைகளிற் பயிலுகின்ற வண்டின் கூட்டம். அஞ்சத்தக்கவாறு நின்றன அழகுடன் புணர்ந்தவளின் வாழ் நாட்கள்.

இதில் இரண்டாம் அடியொழிய ஏனைய மூன்றடிகளில் மடக்கு வந்தமை காண்க.

**35. மூன்றாம் அடியொழிந்த ஏனை மூன்றடியும் மடக்கு**

கோவ ளர்ப்பன கோநக ரங்களே
கோவ ளர்ப்பன கோநக ரங்களே
மேவ ளக்கர் வியன்திரை வேலைசூழ்
கோவ ளர்ப்பன கோநக ரங்களே.

பொருள் : தலைமையை உடைய நகரங்களே ஒளியை மிகுப்பன. சோழன் பெருக்குவன வேற்றரசருடைய திரைகளை. பொருந்திய கடலானது பெரிய திரையோடுங் கரையோடுஞ் சூழப்பட்ட நிலவலயத்தைக் காப்பன இச் செம்பியனுடைய கைகள்.

கரம்—இறை. கோ—சோழன். மூன்றாம் அடியொழிந்த ஏனை மூன்றடிகளில் மடக்கு வந்தமை காண்க.

**36. நான்கடியும் முழுதும் மடக்கு**

வான கந்தரு மிசைய வாயின
வான கந்தரு மிசைய வாயின
வான கந்தரு மிசைய வாயின
வான கந்தரு மிசைய வாயின.

பொருள் : முகில்கள் கடலினிடத்தில் கொடுக்கும் ஒலியோடு கூடியிருந்தன. விண்ணை வௌவிக் கொள்ளும் எழுச்சியை உடையவாயின. விண்ணுலகத்தையொக்கும் புகழையுடையன. பெரிய மலைகள் மரங்களை உச்சியிலே யுடையன.

இதில் நான்கடிகளும் ஒரேவிதமாக மடங்கினமை காண்க. இதனை வடநூலார் ஏகபாதம் என்பர்.

### 37. ஒரு சொல்லே நான்கடியும் மடக்கு

ஒரு சொல்லால் நான்கடியும் மடக்குவதனை இயமா வியமகம் என்பர்.

உமாதரனு மாதரனு
மாதரனு மாதரனு
மாதரனு மாதரனு
மாதரனு மாதரன்

பொருள் : உமையைத் தாங்கியவனும் ஆதரிக்கின்றவனும், மானை தரித்தவனும், திருவைத் தரித்தவனும், ஆணிரையைக் காத்தவனும், யானைத் தோலைத் தரித்தவனும் காளையை நடத்துபவனும் பெருமையை உடைய முக்கட் கடவுள்.

இச் செய்யுளில் 'உமாதரன்' என்ற ஒரு சொல்லே நான்கடிகளிலும் மடங்கி வந்தமை காண்க.

### 38. இரண்டடிப் பாடக மடக்கு

பணிபவ நந்தன தாக மன்னுவார்
பணிபவ நந்தன தாக மன்னுவார்
அணியென மெய்து மன்ப ராகமே
அணியென மெய்து மன்ப ராகமே.

பொருள் : பாம்புகளுக்கு இடம் தமது மார்பகமாக நிற்பார். பிறப்பு இறப்பு இல்லையாக நிலை பெறுவார். அழகென்று சொல்ல உறைவதும் அன்பருடைய உள்ளமே. அழகு என்று சொல்ல விரும்புவதும் என்றுமுள்ள திருவெண்ணீறே.

பவனம்—இடம். பணிபவம்—தாழ்ந்த பிறப்பு நதாக—இல்லையாக.

கோடா ராவிப் பாற்குருகே
 கோடா ராவிப் பாற்குருகே
கொண்டற் போது மருங்கடலே
 கொண்டற் போது மருங்கடலே
வீடா விருப்புக் காப்புள்ளே
 வீடா விருப்புக் காப்புள்ளே
வீயுந் துயர முண்டகமே
 வீயுந் துயர முண்டகமே
நாடா மேகாம் பரத்தருவி
 நாடா மேகாம் பரத்தருவி
நற்காஞ் சிவனத் தானத்தான்
 நற்காஞ் சிவனத் தானத்தான்
சூடா மலர்க்கண் டலந்தேனே
 சூடா மலர்கண் டலந்தேனே
சுற்ற மலைவாய்த் தவராலே
 சுற்ற மலைவாய்த் தவராலே.

பொருள் : கரை பொருந்திய தடாகத்தின் கண்ணுள்ள பறவைகளே! பிறகு வளைகளைக் கொள்ளக் கொடாரா? முகில் முகக்கும் அரிய கடலே! பக்கத்தே நின்று துன்புறுத்துவதற்குக் கீழ்காற்றே போதும். சோலைகளையே வீடாகக் கொண்டிருக்கும் பறவைக் கூட்டங்களே! மனத்தின் கண் உள்ள ஆசைக் கட்டானது தளர மாட்டாது. வண்டுகளால் அலைக்கப் பெறும் உயர்ந்த அழகிய தாமரையே! வீட்டில் உள்ளவர்களால் சாதல் துன்பமானது உண்டு. உடுக்குலந்தாவும் விண்ணில் உலாவும் முகிலால் உண்டான அருவியை உடைய நாட்டின் உண்டாமொரு மாமரத்தினையுடைய அழகிய காஞ்சி வனத்தினையுடையவன். நஞ்சையுண்டான் சிவன் நந்தேந்திக்கு அத்தான்.சூடாத தாழை மலரின்கண் உள்ள தேனீக்களே! சுடுதலை யொத்த அயலார் அலர் தூற்றுதலைக்கேட்டு இளைத்தேன், சூழ நீர்த்தரங்கத்தில் வரால் மீன்களே! உறவு பகையாகத் தந்த தலைவரால்.

கலைநி லாவரு மாலை மணங் கொள்வான்
மலைய மாருத மாறல மாதர்கண்
கலைநி லாவரு மாலைம ணங்கொள்வான்
மலைய மாருத மாறல மாதர்கண்

பொருள்: கலைநில்லா அரிய அந்திப் பொழுதில் சேர்க்கையை வேண்டிக் காதலோடு கூடிய கண், மிகுந்த அழுகையை நீக்கமாட்டாது. திங்களின் கண் உண்டாகிய நிலவெழும் தொடையலின் வாசங் கொள்ள வேண்டித் தென்றலானது இவளிடத்தில் நீங்க மாட்டாது.

ஓத நின்றுல வாவரும் வேலைவாய்
மாத ரங்க மலைக்கு நிகரவே
ஓத நின்றுல வாவரு வேலைவாய்
மாத ரங்க மலைக்கு நிகரவே

நின்று சொல்ல முடிவில்லாத அரிய காலத்தின் கண் இவளுடைய உறுப்புகளை அழிக்குமாறுபட்டன. நீர் நிலைபெற்று உலவி வருகின்ற கடலில் பெரிய திரைகள் மலைக் கொப்பாகவிருக்கும்.

மேற்கூறிய செய்யுட்களில் வரும் மடக்குகள், பாடக மடக்கைப் போன்று இரண்டிரண்டடிகள் ஒரே அளவினையுடையனவாய் மடங்குதலின், பாடக மடக்கு எனப் பட்டன. பாடகம் என்பது வளைவாக மடங்கியிருக்கும் ஒருவகை காலணி.

### 39. அந்தாதி மடக்கு

மாலை யாகவெய் யனங்கவேள் பயிறரு மாலை
மாலைவேட்டவர் மனங்கொலோ வவன் துழாய் மாலை
மாலை யோவுடைத் ததுநினைந் தெழுதரு மாலை
மாலை யாவுடை யவரைவந் திடர்செயு மாலை.

பொருள்: ஒழுங்காக வெய்து காமனுடைய ஆயுதம் 'பயிலு மாடம்' அரியைக் காதலித்தவருடைய உள்ளம் போலும். அவனுடைய துளவமாலை சேர்தற்கு அருமை யுடையது. அதை நினைந்தெழும் உள்ள மயக்கத்தை இயல்பாக உடையவரை அந்தி மாலைப் பொழுது வந்து துன்புறுத்தும்.

### அந்தாதி மடக்கு (வேறு)

கயலேர் தரவருங் கடிபுணற் காவிரி
காவிரி மலருகக் கரைபொரு மரவம்
மரவம் பூஞ்சினை வண்டொடுஞ் சிலம்பும்
சிலம்புசூழ் தளிரடித் திருமனைக் கயலே.

பொருள்: கயல்கள் அழகு பெற வரும் விரைந்த புனலையுடைய காவிரியாறு சோலையில் விரிந்த மலர்கள் சிந்துமாறு கரையைப் பொரும் ஒலியானது, பிடாமரத்தில் உண்டான பூங்கொம்புகள் வண்டோடு கூடி ஆர வாரிக்கும், சிலம்பால் சூழப்பெற்ற தளிர்போலும் அடி யினையுடையாள் செல்வமனைக் கருகு.

செல்வமனைக் கருகு ஆர்ப்பெடுக்கும் எனக் கூட்டுக. இஃது 'அந்தாதி மடக்கு' எனப் பெறும். அந்தாதியாவது ஓரடியின் அல்லது செய்யுளின் ஈற்றில் வருஞ்சொல் அடுத்த அடியின் அல்லது அடுத்த செய்யுளின் முதலில் வருவது. அந்தம் ஆதி என்னும் இரண்டு சொற்கள் அந்தாதி என்று புணர்ந்தன. இறுதியே முதலில் வருவது என்பது இதன் பொருள்.

### 40. ஓரெழுத்து மடக்கு

95. ஓரெழுத்து மடக்கலும் உரித்தென மொழிப.

ஓர் எழுத்தினை மட்டும் மடக்குதலும் மடக்கு என்னும் பெயர்க்கு உரியது என்று கூறுவர் அறிஞர்.

நாநா நாதங் கூடிசை நாடுந் தொழிலோவா
தாதா தார மாகவி ரைத்தண் மலர் மீதே
வாவா வார்தண் சோலையில் வாழும் வரிவண்டே
யாயா யாளிற் சேர்த்துவ தன்பற் கிசையாயால்.

பொருள்: பலவகையான ஓசையோடு கூடும் இசைகளை ஆராயுந் தொழில் நீங்காது, தாதே ஆதாரமாக வாசனையை உடைய குளிர்ந்த மலர் மீதே நீட்சியை உடைய குளிர்ந்த சோலையில் வாழும் பாடலையுடைய வண்டே! தாயானவள் வீட்டினுள்ளே அடைத்துவைத் தலைத் தலைவனுக்குச் சொல்லுவாயாக!

இச் செய்யுளில், நாநாநா, தாதாதா, வாவாவா, யா யா யா, என்னும் ஒவ்வோர் எழுத்துக்களே மடங்கியுள்ளன. மடக்கலும் என்று கூறியபடியால் ஒரெழுத்தும், ஈரெழுத்தும், மூன்றெழுத்தும், நான்கெழுத்தும், இனவெழுத்தும், மெய்யெழுத்தும் உயிர் எழுத்தும் அடங்கும். உயிரும் மெய்யும் மடங்கும் பொழுது உயிர் மெய்யாய் வரும். இவையெல்லாம் ஒரு செய்யுளில் முழுவதும் மடங்கலும் ஓரடி முழுதும் மடங்கலும் உரிய எனக் கொள்க.

### 41. ஒருயிர் மடக்கு
(குற்றுயிரால் வந்தது)

அமல லகல மகல லபய
கமல பவன மவள
வமல மடர வளக
வதன மடர மதன.

பொருள்: சேரா தொழிவாயாக, எங்கள் மார்பினை யகல் இரவின் கண் அபயனே! தாமரையே இடமாக வுடைய தேவியை யொத்த இவளுடைய குற்றமற்ற செறிந்திருக்கப்பட்ட குழலினையுடைய முகத்தை அழிவு செய்யா தொழிவாயாகக் காமனையொத்தாய்.

அமல்—சேருதல். அல்—ஒழிதல் 'அடரல்' என்பது 'அடர' எனக் கடை குறைந்து நின்றது. இதில் எல்லா விடத்தும் அகரக் குற்றுயிரே வந்தன.

நெட்டுயிரான் வந்த மடக்கு

தாயா யாளா ராயா டாமா றாதாராயா
யாமா ராவா னாடா மாதா மாதாவாவா
யாவா காலா றாகா வாகா காணா நாமா
மாலா றாமா நாதா வா

பொருள்: தாயாக உள்ளவள் இவளுடைய விதனத்தை அறியாளாகையால் வருத்தம் மாறாது இதனை ஆராய். அவ்வாறு ஆராயாத நினக்கு அறிவுணர்த்தயாங் களாராக வானாட்டை யொத்த நாட்டையுடையவனே! மாதானவாள் பெரிய வருத்த முறுவள் வருவாயாக! வந்தால் வாயாதது எது? வரும்பொழுதுங் காலாறி வருவாயாக; எங்களைக் காப்பாயுமாக; இவையாகாதன காண். மற்றவர் நாவால் எங்களுக்கு அச்சமுண்டாகா நின்றது. மயக்கமும் மாறாது. பெருமையை உடைய தலைவனே! வருவாயாக.

இதில் எல்லா விடங்களினும் ஆகார நெட்டுயிரே வந்தமை காண்க.

42. ஒரு வருக்கப் பாட்டு

(1) ககரவெழுத்துக்களால் வந்த மடக்கு

காக்கைக் காகாகூகை கூகைக்காகா காக்கை
கோக்குக் கூகாக் கைக்குக் கொக் கொக்கக்
கைக்கைக்குக் காக்கைக்குக் கைக்கைக் காகா.

பொருள்: காக்கைக் குலங் கட்கு ஆற்றமாட்டா கூகைக் குலம். கூகைக்குலங்கட்கு ஆற்றமாட்டா காக்கைக் குலம். காலவசத்தானாதலால் அரசர்க்கு

நிலத்தைக் காத்தற்கும் கொக்கினையொத்துப் பகையை அழித்தற்கும் கால வாய்ப்புவேண்டும். அக்காலவாய்ப்பு இல்லாவிட்டால் இந்திரற்கும் பகையழித்தல் முடியாது.

இதில் காலம் பகை என்னுஞ் சொற்கள் வாராமல் எஞ்சி நின்றன.

2. தகர எழுத்துக்களால் வந்த மடக்கு

தத்தித்தா தூதுதி தாதூதித் தத்துதி
துத்தித் துதைதி துகைத்தா தூதுதி
தித்தித்த தித்தித்த தாதெது தித்தித்த
தெத்தாதோ தித்தித்த தாது.

பொருள்: பாய்ந்து தாதுக்களையுடைய பூக்களின் மதுவையுண்ணா நிற்றி அவ்வாறுண்டு மீண்டும்வேறொரு பூவில் பாயா நிற்கிறாய். அவ்வாறுண்டு பாய்ந்து செறியா நிற்கிறாய். மீண்டும் வேறொரு செறிந்த பூவின் தாதுக் களைக் கோதா நிற்கிறாய். இப்பூக்களில் தித்தித்து இன்பந்தரும் பூ எது? தித்தித்த தாதுக்களையுடைய பூ எது? இதழ் அழகிய பூ எது? எமக்குக் கூறுவாயாக!

இச் செய்யுளில் வண்டு என்னுஞ் சொல் எஞ்சிநின் றது. தலைவியின் உறுப்புக்களை வியந்த தலைவன் தலைவி கேட்ப வண்டினை நோக்கிக் கூறியது. இதுவும் ஒரே வகையால் வந்த எழுத்துக்கள்.

### 43. இருவருக்கப் பாட்டு

இருவகை எழுத்துக்களால் வந்த மடக்கு

மன்னுமாம் மான்முன்ன மானமு மீனமா
மின்னமா னேமுன்னு மானினி—மென்மென
மின்னுமா மென்னினா மன்னமுமா மென்மனனே
மன்னுமா மானுமான் மான்.

பொருள்: மயக்கம் முன்னுறவே உண்டாகா நின்றது. மானமுங் குறையா நின்றது. இத்தகைய எம்

மால் நினையப்படும் மாதினை மெல்லென மின்னையும் ஒப்பாளென்பேமாயின் அன்னமுமாம் என்று சொல்லும் படியாக நிற்பள். மாமை நிறத்தினையுடைய மானை யொக்குங் கண்ணினையுடைய அம்மாது.

இச் செய்யுளில் மகரமும், னகரமுமாகிய இருவகையெ முத்துக்களே வந்தன.

### 44. மூவருக்கப் பாட்டு
### மூன்றெழுத்தால் வருவது

மின்னாவான் முன்னு மெனினு மினிவேனின்
மன்னா வினைவே னெனைவினவா—முன்னான
வானவனை மீனவனை மானவினை
வென்வேன்
மானவனை மானுமோ வான்.

பொருள் : மின்னியுரு மேற்றினைத் தோற்றுவிக்கு மாயினும் பிறகு வேனிற்காலத்து நிலைபெற்று வருந்து மென்னை ஆராயாத எவர்க்கும் முதலாகவுள்ள சேரனை, மீனவனை, மிக்க வினைகளோடு கூட வென்ற வேலை யுடையவனாகிய மனுகுலங்காவலனை நிகர்க்கவல்லதோ இத்தன்மைத்தாகிய முகில்.

'என்னை யாராயாத மனுகுலங் காவலனை' யெனக் கூட்டுக. வான்—உருமேறு, வென்ற என்பது ஈறு குறைந்தது. இதில் மகரமும் னகரமும் வகரமுமாகிய மூன்றெழுத்துக்களே வருதல் காண்க.

### 45. நால்வருக்கப் பாட்டு
### நான்கெழுத்துக்களால் வருவது

யானக வென்னே யினையனா வாக்கின
கானக யானை யனையானைக்—கோனவனைக்
கொன்னயன வேனக்க கோகனகக்
கைக்கன்னி
கன்னிக் கனியனைய வாய்.

பொருள் : எத்துணையுஞ் சிறிய யான் பழிக்கக் காட்டியானையை யொத்த நமது தலைவனை இத்தன்மை யாகப் பண்ணினவை கன்னியுடைய கொல்லும் தன்மை யமைந்த வேலைப் போன்ற கண்ணும், மலர்ந்த தாமரை போன்ற கையும் ஒருவரால் தீண்டாத கொவ்வைக் கனி போலும் வாயுமாயிருந்தது. ஈது வியப்பேயாம்.

இச்செய்யுளில், ய, ன, க, வ, என்னும் நான் கெழுத் துக்களே வந்தன.

### 46. ஒற்றெழுத்தில்லாப் பாட்டு

ஒற்றெழுத்தின்றி வருவது இது

நுமது புனலி லளியி வரிவை
அமுத விதழி னிகலு—குமுத
மருவி நறவு பருக வளரு
முருவ முடைய துரை.

பொருள் : வண்டே! நீ பயிலும் பூந்தடங்களில் இம் மடந்தையுடைய அமுதம் பொதியும் அதரமொக்குங் குமுத மலர்களில் பலகாலும் பழகித்தேனைப் பருகப் பின்புந் தேனுண்டாகும் படியை யுடையது உண்டாயில் சொல்லுவாயாக.

இஃது ஒற்றெழுத்தின்றி வந்தது.

### 47. வல்லினப் பாட்டு

வல்லினத்தால் வருவது இது

துடித்துத் தடித்துத் துடுப்பெடுத்த கோட
றொடுத்த தொடைகடுக்கை பொற்போற்—
பொடித்துத்
தொடிபடைத்த தோடுடித்த தோகைகூத் தாடக்
கடிபடைத்துக் காட்டிற்றுக் காடு.

பொருள் : மின்னானது நடுங்கித் தோன்றக் காந்தன்கள் பூத்துக் குலைகளைத் தாங்கா நின்றன.

கொன்றைகள் பொன் போன்ற நிறைத்டைத்தாகிய பூக் களை மாலையாகத் தொடுத்துத் தூக்கா நின்றன. எல்லா ருக்குள் தோன்ற வளையையுடைய தோளும் இடப் பக்வர். துடியா நின்றது. மயில்கள் களித்தாடப் புது மையை விளைத்துக் காட்டாநின்றது காடு.

இச்செய்யுளில் முழுதும் வல்லெழுத்துக்களேவந்தன.

### 48. மெல்லினப்பட்டு

மெல்லினத்தால் வருவது இது

மானமே நண்ணா மனமென் மனமென்னும்
மானமான் மன்னா நனிநாணு—மீனமா
மானா மினன்மின்னி முன்முன்னே நண்ணினு
மானா மணிமேனி மான்.

பொருள் : மானம் யாதும் மேவாத உள்ளம் என துள்ளம் என்னும்,பெரியயானைகளையுடைய வேந்தனே மிகவும் நாணும் குறைபடாநிற்கும், நீங்காது மின்னானது விளங்கி முன்னே முன்னே தோற்றினும் ஒவ்வாத அழகிய உருவத்தையுடைய மானையொப்பாள்.

இச்செய்யுளில் முழுதும் மெல்லெழுத்துகளே வந்தன.

### 49. இடையினப் பாட்டு

இடையினத்தால் வருவது இது

யாழியல் வாய வியலள வாயவொலி
யேழிய லொல்லாவா லேழையுரை—வாழி
உழையே லியலா வயில்விழி யையோ
விழையே லொளியா லிருள்.

பொருள் : யாழி னியற்றப் படாநின்ற இசைநூல் சொல்லிய அளவையுடைய இசையேழுங்கூடி இப்பேதை யுடைய மொழியுடனே நிகர்க்க மாட்டா; மானின் விழி யும் இவள் வேல் போலும் விழியை ஒக்கமாட்டா; வியக்

கத்தக்க அணிகலங்களினது ஒளியும் இப்பேதையுடைய ஒளியாலே நிறங்கெட்டு இருளாகும்.

இதில் இடையெழுத்துக்களே வந்தன.

மடக்கு முற்றிற்று

# சித்திர கவி

## ஓவியப் பாடல்கள்

கோமுத் திரியே கூட சதுக்கம்
மாலை மாற்றே எழுத்து வருத்தனம்
நாக பந்தம் வினாவுத் தரமே
காதை கரப்பே கரந்துறைச் செய்யுள்
சக்கரம் சுழிகுளம் சருப்பதோ பத்திரம்
அக்கரம் சுதகமும் அவற்றின் பால்

கோமுத்திரி, கூட சதுக்கம், மாலைமாற்று, எழுத்து வருத்தனம், நாகபந்தம், வினாவுத்தரம், காதை கரப்பு, கரந்துறைச் செய்யுள், சக்கரம், சுழிகுளம், சருப்பதோபத்திரம், அக்கரச்சுதகம் என்னும் பன்னிரண்டும், அவ்வெழுத்து மடங்கலணியின் பாற்பட்டதாக வரும்.

அக்கரச் சுதகமும் என்று உம்மை கொடுத்துக் கூறியபடியால், நிரோட்டம், ஒற்றுப் பெயர்த்தல், மாத்திரைச் சுருக்கம், மாத்திரை வருத்தனே, முரசபந்தம், திரிபாதி, திரிபங்கி, பிறிதுபடுபாட்டு முதலிய சித்திரகவிகளையுங் கொள்க.

இரண்டிரண்டு வரியாக ஒரு செய்யுளையெழுதி, மேலுங் கீழும் ஒன்றை இடையிட்டுப் படித்தாலும் அச் செய்யுளேயாவது, கோமூத்திரியாகும்.

பருவ மாகவி தோகன மாலையே
பொருவி லாவுழை மேவன கானமே
மருவுமாசைவி டாகன மாலையே
வெருவ லாயிழை பூவணி காலமே.

பொருள்: அவர் கூறிய காலம் இது வாதல் வேண்டும். முகில் வரிசையானது திக்குகளெல்லாம் பொருந்தும். அதுவுமல்லாமல் மாலைப்பொழுதின் கண் மழையை விடாது பொழியும். காட்டினிடத்தில் ஒப்பில் லாத மான்கள் பொருந்தா நின்றன. ஆகையால் குற்ற மற்ற அணிகலன்களையுடையாய், அஞ்சாதொழி வாயாக! தலைவர் நம்மைப் பூவால் அழகு செய்யுங் காலம் இதுவேயாம்.

இதனுள் வேண்டும் என்னுஞ்சொல் கூட்டப்பட்டது. 'மேவின' என்பது, 'மேவன' எனத்திரிந்து நின்றது.

பசுவானது (கோ)நடந்துகொண்டே நீர்விடும் போது அந்நீர் ஒழுகிய தாரையானது, இவ்வாறு நெளிந்தவடிவ மாக இருக்கும். அதனால் இதற்குக் கோமூத்திரி என்று காரணப்பெயர் ஏற்பட்டது.

## 2. கூடசதுக்கம்

ஈற்றடியெழுத்துக்கள் ஏனை மூன்றடியுள்ளுங் கரந்து நிற்கப் பாடுவது.

புகைத்தகைச் சொற்படைக் கைக்கதக்
கட்பிறைப் பற்கறுத்த
பகைத்திறச் சொற்கெடச் செற்றகச்
சிப்பதித் துர்க்கைபொற்புத்

தகைத்ததித் தித்ததுத் தத்தசொற்
றத்தைப்பத் தித்திறத்தே
திகைத்தசித் தத்தைத் துடைத்தபிற் பற்றுக்
கெடக்கற்பதே

பொருள் : தீயின் தன்மையுடைய சொற்களையும் படைக்கலங்களோடு கூடிய கைகளையும் வெகுளியோடு கூடிய பார்வையையும், பிறைபோன்ற கோரப்பற்களையும் கரிய நிறத்தையுமுடைய பகைஞராகிய அவுணகுலம் என்னும் மொழியழியச் செறுத்த காஞ்சீபுரப்பெரும் பதியில் உள்ள கொற்றவையழகு தங்கிய இன்பந்தராநின்ற யாழினிசை போன்ற சொல்லையுடைய கிளியை ஒப்பாளிடத்தில் அன்பு செய்யாது அறிவழிந்தவுள்ளத்தை நீக்கிய காலத்தில் இருபற்றுங்கெடுதற்கேது வாகிய ஞானத்தையறிவது.

கிள்ளை மொழியினையொத்த மொழியையுடைய துர்க்கையெனக் கூட்டுக. இச்செய்யுளின் முதன் மூன்றடிகளினும் ஆராயில் ஈற்றடியெழுத்துக்கள் காணப் படும். இவ்வாறு ஓரடியின் எழுத்துக்கள் மற்றையடி களில் மறைந்து நிற்றலால் இது கூட சதுக்கம் என்று பெயர் பெற்றது. கூடம்—மறைவு. சதுக்கம்—நான்கடிக் கூட்டம்.

### 3. மாலை மாற்று

ஒரு செய்யுளை இறுதி முதலாகப் படித்தாலும் அச் செய்யுளேயாவது.

நீவாத மாதவா தாமோக ராகமோ
தாவாத மாதவா நீ

பொருள் : நீங்காத பெரிய தவத்தையுடையாய்! மிகுந்த மயக்க வேட்கை கெடாது. ஆகையால் அழகிய மாதினுடைய அவாவை நீக்குவாயாக.

வாயாயா நீகாவா யாதாமா தாமாதா
யாவாகா நீயாயா வா

பொருள் : எங்களுக்குக் கிடையாதன யாவை? நீ அருள் புரிவாயாக என்னும் இவள் மிக்க வருத்தமாவள். யாவை நினக்கு ஆகாதன? ஆயனே நீ வருவாயாக!'

பூவாளை நாறுநீ பூமேக லோகமே
பூநீறு நாளைவா பூ.

பொருள் : இயல்பாகப் பூப்பிலாதாளைக் கலந்து புலால் கமழும் நீ எமக்குப் பூமழையும், பொன்மழையும் பொழியும் முகிலோ? பூவுந் திருநீறும் அணிந்து நாளை வா. இவள் இப்பொழுது பூப்பினளாயிருக்கின்றாள்.

மாலையை எப்பக்கந் திருப்பினும் அஃது ஒரே தன்மையுடையதாக விருத்தல்போல இச்செய்யுட்களும் எவ்வாறு மாற்றிப் படிப்பினும் ஒரே தன்மையுடையதாக இருத்தலின் "மாலை மாற்று" என்னும் பெயரை யடைந்தது.

4. எழுத்து வருத்தனம்

ஓரெழுத்தான் ஒரு மொழியாய்ப் பொருள் பயந்து பின் ஓரெழுத் தேற்றப் பிறிதொரு மொழியாகப் பொருள் கொடுத்து, அவ்வாறே முறைமுறையானேற்ற ஒவ்வொரு மொழியாய்ப் பொருள் கொடுப்பது.

ஏந்திய வெண்படையு முன்னா ளெடுத்ததுவும்.
பூந்துகிலு மாலுந்தி பூத்ததுவும்—வாய்ந்த
உலைவி லெழுதகடை வேயோரொன்றாச் சேர்க்கத்
தலைமலைபொன் தாமரையென் றாம்

பொருள் : திருமால் தாங்கிய கம்புவும் அவனெடுத்த நகமும் அவனது ஆடையாகிய கநகமும், அவனுந்தி மலர்ந்த கோகநகமும், என்னப்பட்ட இவற்றில் கேடில் லாத எழுத்தினடைவேயென்று ஒன்றின் ஓரெழுத்தாக

எடுத்துச் சேர்க்கப் பின்பு அது தலையென்றும் மலை யென்றும், பொன்னென்றும், தாமரையென்றுமாம்.

கம்பு என்பதில், 'கம்' என்கிற எழுத்தைப் பிரித்துத் தலையெனவும், நகம் என்பதில், ந–என்கிற எழுத்தைப் பிரித்து, முன் 'கம்' என்பதற்கு முன்கூட்டி, 'நகம்' ஆக்கி "மலை'' யெனவும், கநகம் என்பதில், க–என்கிற எழுத் தைப் பிரித்து, முன் நகம் என்பதற்கு முன் கூட்டிக், 'கநகம்' ஆக்கிப் 'பொன்' எனவும்; கோகநகம் என்பதில், கோ என்னுமெழுத்தைப் பிரித்து, முன்கநகம் என்பதற்கு முன்கூட்டிக், 'கோகநகம்' ஆக்கித் தாமரை எனவுங் கொள்க. இதில் எழுத்துக்களைப் பெருக்கி மொழி யாக்கிப் பொருள் கொள்ளுதலால் இஃது எழுத்து வருத்தனம் எனப்பட்டது. எழுத்து வருத்தனம்–எழுத்துப் பெருகு தல். வருத்தனம்—பெருகுதல்.

### 5. நாக பந்தம்

இரண்டு பாம்புகள் தம்முள் இணைவனவாக உப தேசமுறையையான் எழுதி, ஒரு நேரிசை வெண்பாவும், ஓர் இன்னிசை வெண்பாவுமெழுதிச், சந்திகளினின்ற எழுத்தே மற்றையிடங்களினுமுறுப்பாய் நிற்கப்பாடுவது. மேற் சுற்றுச் சந்தி நான்கினு நான்கெழுத்தும், கீழ்ச் சுற்றுச் சந்தி நான்கினு நான்கெழுத்தும் இரண்டு பாம் பிற்கு நடுச்சந்தி நான்கினும் இரண்டு பாட்டிற்கும் பொருந்த நான்கெழுத்துமாக ஓவியத்திலடைப்பது.

நேரிசை வெண்பா

அருளின் றிருவுருவே யம்பலத்தா யும்பர்
தெருளின் மருவருசீர்ச் சீரே—பொருவிலா
வொன்றே யுமையா ளுடனே யுருத்தரு
குன்றே தெருள வருள்.

பொருள் : அறத்தினது அழகிய மேனியாய்! திருச் சிற்றம்பலத்தினையுடையாய்! தேவர்கள் அறிவிற்கும் எட்டாதாய்! அழகிய புகழையுடையாய்! குற்றமில்லாத ஏகரூபத்தையுடையாய்! உமையோடு பொருந்திய மலை போல் வாய்! யாங்கள் தெளிய அறிவை அருள் வாயாக! (அறிவு என்னுஞ் சொல்தானே வந்தது)

இன்னிசை வெண்பா

மருவி னவருள்ளத்தே வாழ்சுடரே நஞ்சு
பெருகொளியான் றேயபெருஞ் சோதி—திருநிலா
வானஞ் சுருங்க மிகுசுடரே சித்த
மயரு மளவை யொழி.

பொருள் : அடைந்தவருள்ளத்தே கெடாத விளக்க மாயுள்ளாய்! நஞ்சின் கணுண்டாகிய பெருகிய நிற நிறைந்து பொருந்தின திருமிடற்றையுடைய பெரிய சோதியாயுள்ளாய்! அழகிய மதியையுடைய ஆகாய மானது சிறுகப் பெருகியவொளியே திருமேனியாயுள் ளாய்! எனதுள்ளம் நினதடியை மறக்கு மெல்லையை யொழிப்பாயாக.

இவை, பாம்புவடிவத்தில் பந்திக்கப் படுவதாதலின் நாகபந்தம் என்று பெயர் பெற்றன. நாகபந்தம் இரட்டை நாக பந்தம், அட்டநாக பந்தம் முதலிய பல வகைகள் உள்ளன.

6. வினாவுத்தரம்

வினாவின தொரு சொற்றொடரைப் பிரித்து அப் பதந்தோறும் வினாயதற்கு உத்தரமாகப் பதப்பொரு

ளுரைத்துக் கடை -க்கால் அவ்வினாதயதற்கு உத்தரமான அச்சொடர் முழுவதும் ஒரு பொருளாக்கியுரைப்பது அப்பதம் விரிக்குங்கால் செவ்வன் விரியாது அருமை தோன்ற விரித்துக் காட்டுவது.

### இன்னிசை வெண்பா

பூமகள் யார் போவானை யேவுவா னேதுரைக்கும்
நாமம் பொருசரத்திற் கேதென்பார்?—தாமழகின்
பேரென்? பிறைசூடும் பெம்மா னுவந்துறையுஞ்
சேர்வென் திருவேகம் பம்.

பொருள்: இப்பாட்டில், 'பூ மகள் யார்? 'திரு' எனவும்; 'போவானை ஏவுவான் ஏதுரைக்கும்?' 'ஏகு' எனவும் 'நாமம் பொருசரத்திற்கேதென்பர்?' 'அம்பு' எனவும்; 'அழகின் பேரென்?' 'அம்' எனவுங் கூட்டித், 'திருவேகம்பம்' எனக் கண்டு கொள்க.

### நேரிசை வெண்பா

நீர்த்தொழிந்த வாறைந் தடக்கிப்பின் னிச்சயமே
வாய்த் தமைந்த வாயில்பெண் ணானையே
—கூர்த்தகு
வாளேறோ டோசை விளைநிலமிவ் வல்லாற்
கேளா யுடன்வருவ தில்

பொருள்: இதனுள் நீர்த்தொழிந்த ஆறு—நிலை எனவும், ஐந்தடக்கி—ஆமை எனவும், வாயில் கடை எனவும், பெண்ணானை—பிடியெனவும், வாளேறு—புண் எனவும், ஓசை — இயம் எனவும், விளைநிலம் — செய் எனவும் கூட்டி, 'நிலையாமை கடைப்பிடி, புண்ணியஞ்செய்' எனக் கண்டு கொள்க.

### நேரிசை வெண்பா

நல்வினை நாற்கால் விலங்கு நவைசேரும்
கொல்வினை யஞ்சி குயக்கல—மெல்ல

வுறுதியு மல்லவு நாட்பேர் மரப்பே
ரிறுதியி லின்ப நெறி.

பொருள்: இதனுள் நல்வினையே உடைய நாற்கால் விலங்கு யாது? 'முயல்' எனவும், 'நவை சேருங் கொல் வினை யஞ்சியாது?' 'ஆமை' எனவும், 'குயக் கலம் யாது?' 'அகல்' எனவும், 'மெல்ல உறுதியையும், உறுதியல்லன வற்றையும் சொல்லு நாட் பெயர் யாது?' 'சோதி' எனவும், 'மரப்பெயர் யாது?' 'தேறு' எனவும் கூட்டி, 'முயலாமைய கல்' 'சோதி தேறு' எனக் கூட்டுக, இறுதியிலின்பநெறி.

இச்சித்திரகவி வினாவும் விடையுமாக அமைதலின் வினாவுத்தரம் என்னும் பெயர் பெற்றது.

## 7. காதை கரப்பு

ஒரு செய்யுளை முழுதும் எழுதி அதனிற்று மொழிக்கு முதலெழுத்துத் தொடங்கி, ஒவ்வோரெழுத் திடையிட்டுப் படிக்க வேறொரு செய்யுளுண்டாவது.

**இன்னிசைவெண்பா**

தாயேயா நோவவா வீரு வெமதுநீ
பின்னை வெருவா வருவதொ ரத்தப
வெம்புகல் வேறிருத்தி வைத்தசினிச் சைகவர்
தாவா வருங்கலநீ யே.

பொருள்: தாயாயுள்ளாய்! யாங்கள் வருந்தும் அவா வினைப் போக்கு; எமது சார்பாயுள்ளாய், நீ பிறகு அச்சமாக வருவது ஆராய்; அது கெட எமக்குப் புகலாயுள்ள விடம் வேறாக அமைத்துவைப்பாய்; ஆசைப்பாடு கைக் கொள்; எங்கட்குக் கேடிலாத அரிய அணிகலமாயுள்ள கடவுளே!

இதனுள் அமைந்த வேறு செய்யுள்,

வஞ்சித்துறை

''கருவார் கச்சித்
திரு வே கம்பத்
தொருவா வென்னீ
மருவா நோயே''

பொருள்: மனமே! நீ கச்சித் திருவேகம்பத் துறையும் ஒப்பற்றவனே என்று கூறக் கருவிற் புகுநோய் சேரா.

'வருங்கல நீயே' என்பதில் லகர மொழிக்கு முதலா காமையின் அதனை நீக்கிக் ககர முதலாகக் கொள்க. இதில் வேறொரு செய்யுளின் சொல் முறையே மறைந்து நிற்றலால், இது காதை கரப்பு எனப்பட்டது; காதை— சொல், கரப்பு — மறைவு.

## 8. கரந்துறைப் பாட்டு

ஒரு செய்யுள் பிறி தொரு செய்யுட் சொல் புகாது எழுத்துப் பொறுக்கிக் கொள்ளலாம்படி பாடுவது.

நேரிசை வெண்பா

அகலல்குற் றேரே யதர மமுதம்
பகர்தற் கரிதிடையும் பார்க்கின் — முகமதிய
முத்தென்ன லாமுறுவன் மாதர் முழுநீல
மைத்தடங்கண் வெவ்வேறு வாள்

பொருள்: நண்பனே! நான் கண்ட மாதருடைய உரு வத்தன்மையைக் கேட்பாயாக: அல்குலானது தேரினது தட்டாயும், அதரமானது அமுதமாயும், இடையானது உசாவிச் சொல்வதற்கு அரிதாயும், முகமானது திங்களா யும், முறுவலானது முத்தமாயும், மைத்தடங்கண்ணானது நீலப் பூவாயும், வேறுபட வைத்த வாளாயு மிருக்கும்.

இதற்குள் அமைந்த செய்யுள்.

குறள்வெண்பா

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

மேற்கூறிய செய்யுளில் இவ்வாறு ஒரு செய்யுள் மறைந்து கிடத்தலின். இது கரந்துறைச் செய்யுள் எனப்பட்டது.

## 9. சக்கர பந்தம்

இது நான்காரைச்சக்கரமும், ஆறாரைச் சக்கரமும், எட்டாரைச்சக்கரமும் என மூன்று வகைப்படும்.

நான்காரைச் சக்கரம்




வஞ்சி விருத்தம்

"மேரு சாபமு மேவுமே
மேவு மேயுண வாலமே

மேல வாமவ னாயமே
மேய னானடி சாருமே''.

பொருள்: மேருவை வில்லாகக் கொள்ளுவனவாயும், நஞ்சை யுணவாக விரும்புவனவாயும், உயர்ந்த வுருவத்தை யுடையனவாயு மிருக்கும், அவன் விளை யாடுதற் கினமாயுள்ள கூளியாகலான், அத்தன்மை யானடிகளைச் சேர்வீர்களாக.

இது நான்காராய், நடுவே, 'மே' என்னுமெழுத்து நின்று, ஆர்மேல் ஒவ்வோரெழுத்து நின்று, சூட்டின் மேற் பன்னிரண்டெழுத்து நின்று முற்றுப் பெற்றது. நான்காரைச் சக்கரமாவது, நான்கு ஆர்க்கால்களையுடைய சக்கரம். சூட்டு—வட்டை.

ஆறாரைச் சக்கரம்



### கட்டளைக் கலித்துறை

தண்மலர் வில்லிதன் பேரான தஞ்ச நமக்களித்த
கண்மலர்க் காவிக் கெதிர்வன வன்று கரமளந்த
பண்மலர் யாழ்பயில் வாரன்பு சூழ்பதி நாகைமிக்க
தண்மை யகத்துப் பதுமத்த மாதர்த் தடங்கண்களே.

பொருள்: கைகளால் தடவிவந்த விரிந்த பண்ணையுடைய யாழ்வல்லோர், அன்புமேவிய நாகபட்டினத்தில், காமனுடைய போரில் நமக்கு அபயங்கொடுத்த கண்ணாகிய நீலப்பூவுக்கு ஒப்பாவனவல்ல, மிகுந்த குளிர்ச்சியையுடைய தாமரைமலரில் உறைவோர்க்கொத்த பெண்களின் அகன்ற கண்கள்.

இது ஆறாராய் நடுவே ரகரநின்று ஆர்மேல் ஒன்பதொன்ப தெழுத்தாய்க், குறட்டின்மேற் போதிவானவனென்னும் பெயர் நின்று, சூட்டின்மேலிருபத்து நான்கெழுத்து நின்று முற்றுப் பெற்றது. குறடு என்பது ஆர்க்கால்களுக்கடியில் உள்ள குடத்தின் வளைவானபாகம்.

வட்டாரைச் சக்கரம்

ஆசிரியப்பா

மலர்மலி சோலை யகநலங் கதிர்க்க
மடமயி லியற்றக மாதிரம் புதைத்து
வளைந்து புகன்மேக வல்லிருண் மூழ்க
வரியளி துதைந்த கதுப்பினி தடைச்சி
மன்னுமா மடமொழி வடிவாள் வளவன்
கன்னித் துறைவன் கனகச் சிலம்பே

பொருள்: மலர் மிகுந்திருந்த சோலையுள் நலம் விளங்க, மடப்பத்தோடு கூடியிருந்த மயிலியலுக்கு ஒக்கும்படியாகத் திக்குகளை மறைத்துச் சூழ்ந்து மிக்க முகில்களென்னா நின்ற வலிய இருளினாலே முழுகுந் தன்மையுடையதாய், இசை மருவிய வண்டுகள் குடையக் கூடாத மலர்களைக் குழலின் மீதே அழகுபெற அணிந்து

பொருந்திய மடப்பத்தோடு கூடிய மொழியை உடையாள் கூரிய வாள் வளவனாகிய கன்னித் துறைவனது கனக மலையின் கண்.

கனக மலையின் கண் நிற்பள் என்று சேர்க்க, இஃது எட்டாராய், ஆர்மே லவ்வா றெழுத்தாய், நடுவே ககர நின்று குறட்டின்மேல் அறமே தனமாவது என்னுஞ் சொல் நின்று சூட்டின் மேல் முப்பத்திரண்டு எழுத்து நின்று முற்றுப் பெற்றது.

**வேறொருவகை நான்காரைச் சக்கரம்**

மாதவா போதி வரதா வருளமலா
பாதமே யோத சுரரைநீ தீதகல
மாயா நெறியளிப்பா யின்றன் பகலாச்சீர்த்
தாயே யலகில்லா டாம்.

பொருள்: புத்த தேவா! குற்றமில்லாதாய்! உன்னுடைய அடியை வழுத்தாநிற்கும் அசுரருக்கு நீ தீவினை கெட வீட்டை யளிப்பாய். அன்புநீங்காத அழகிய தாய் போலா வாய்!

எல்லையில்லாத மிகுந்த வலிதாகிய தவத்தையுடையாய்! இன்று அருள்வாயாக... (ஆடு—வலி)

இதுவும் நான்காராய் நடுவே நகரம் நின்று, குறட்டின் மேல் விசுதாரையென்னும் பெயர் நின்று, ஆர்மேல் நந்நான்கெழுத்து நின்று, சூட்டின்மேல் இருபத்தெட்டெழுத்து நின்று முற்றுப் பெறுவது.

## 10. சுழிகுளம்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| க | வி | மு | தி | யா | ர் | பா | வே |
| வி | லை | ய | ரு | மா | ந | ற் | பா |
| மு | ய | ல் | வ | து | று | ந | ர் |
| தி | ரு | வ | ழி | ந் | து | மா | யா |

'சுழி குளம்' என்பது எட்டு எட்டு எழுத்துக் கொண்ட நான்கடியாய் மேல் நின்று கீழ் இழிந்தும், கீழ் நின்று மேலேறியும் புறஞ்சென்று உண்முடியப் படிக்கத்தக்க தாகப்பாடப்படும்.

கவிமுதி யார் பாவே
விலையரு மா நற்பா
முயல்வ துறு நர்
திருவ ழிந்து மாயா

பொருள் : செய்யுளால் முதிர்ந்தார் செய்யும் செய்யுளே விலையிடுதற்கரிய செய்யுளெனவும், இடை விடாது முயல்வார் செல்வமழிந்து கெடாதெனவு மாம்.

### இதுவும் அது

மதன விராகா வாமா
தந்த சகாவே நீவா
நததந தாதா வேகா
விசநவி ரோதா காரா

பொருள் : மதனா! அவா இல்லாதவனே! ஒளியை உடையவனே! குபேரனுக்கு நண்பனாகவுள்ளானே! முகிலினுமதிகமான வள்ளலே! பாம்பணியால் விரோத

மான தோற்றத்தையுடையவனே! எங்கள் வருத்தங் களை நீக்கிக் காப்பாயாக!

## 11. சருப்பதோ பத்திர பந்தம்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மா | வா | நீ | தா | தா | நீ | வா | மா |
| வா | யா | வா | மே | மே | வா | யா | வா |
| நீ | வா | ரா | மா | மா | ரா | வா | நீ |
| தா | மே | மா | ரா | ரா | மா | மே | தா |
| தா | மே | மா | ரா | ரா | மா | மே | தா |
| நீ | வா | ரா | மா | மா | ரா | வா | நீ |
| வா | யா | வா | மே | மே | வா | யா | வா |
| மா | வா | நீ | தா | தா | நீ | வா | மா |

சருப்பதோபத்திரம் என்பது நான்கு புறத்திலும் வாயில்களை யுடையதாய் நினைத்த வழியால் செல்லத் தக்கதாய்ச் சமைக்கப்படும் ஒருவகை வீடு. அதுபோல எப்பக்கத்திலே தொடங்கிப் படித்துக் கொண்டு சென்றா லும் அச்செய்யுளே ஆகும்படி எவ்வெட்டெழுத்துடைய நான்கடிகளுடையதாய் அறுபத்து நான்கறைகளிலே முதலறை தொடங்கி ஒரு முறையும் இறுதியறை தொடங்கி ஒருமுறையுமாக இருமுறை எழுதிப் பொருந்து மாறு பாடப்படுஞ் செய்யுள்.

மாவா நீதா தாநீ வாமா
வாயா வாமே மேவா யாவா
நீவா ராமா மாரா வாநீ
தாமே மாரா ராமா மேதா

பொருள் : பெரியவனே! நீதியை உடையவனே! மிக்க நீங்காத செல்வத்தை யுடையவனே! என்னாகக் கடவது பொருந்துவாயாக. இப்படியென்னைச் சேர்ந்தால் பொருந்தாதன யாவை? நீ வருவாயாக. இராமனை யொப்பாய்! காமனுமாயுள்ளாய்! மழையை ஒப்பாய் நீயாதலால் பெரிய மேம்பாட்டை யுடைய நின்மார்பில் நிறைந்திருக்கப்பட்ட ஆத்திமாலையைத் தருவாயாக!

## 12. அக்கரச் சுதகம்

அக்கரச் சுதகம் என்பது எழுத்துக் குறைத்தல். முழுவதும் நின்று ஒரு பொருள் கொடுப்பதாயும் ஒவ்வோர் எழுத்தாக நீக்க வெவ்வேறு மொழியாய் வெவ்வேறு பொருள் பயப்பதாயுமுள்ள ஒரு சொல்லை யெடுத்துக் கொண்டு பொருள்கள் காட்டிப் பாடப்படுவது.

பொற்றூணில் வந்த சுடர்பொய்கை பயந்தவண்ணல்
சிற்றாயன் முன்வனிதையாகி யளித்த செம்மல்
மற்றியார் கொல் லென்னின் மலர்தூவி
வணங்கி நாளும்
கற்றார் பரவுங் கநகாரி நகாரி காரி.

பொருள் : பொன்னாகிய தூணிலே காணப்பட்ட ஒளியாயுள்ளான் யார்? பொய்கையானது பெற்ற தலைமை யுடையவன் யார்? சிற்றாயனாகியமால் முன்னாள் மோகினி வடிவுகொண்ட போது ஈன்ற பிள்ளை யாரென்று கேட்பீராயின் கற்றவர்களால் மலர்தூவி நாள் தோறும் வணங்கப்பட்ட கநகாரி என்றும் நகாரி என்றும் காரி என்னுங் கொள்க.

கநகாரி—திருமால். நகாரி—முருகவேள். காரி—மாசாத்தன்.

## 13. நிரோட்டம்

இதழ் முயற்சியாற் பிறப்பனவாகி, உ, ஊ, ஒ ,ஓ, ஔ, ப, ம, வ என்னும் எழுத்துக்கள் வராமற் பாடப் பெறுவது

நிரோட்டமாகும். உதட்டின் தொடர்பில்லாமற் பாடப் பெறுவது என்பது பொருள்.

சீலத்தான் ஞானத்தாற் றேத்தத்தாற் சென்றகன்ற
காலத்தா லாராத காதலான்—ஞாலத்தார்
இச்சிக்கச் சாலச் சிறந்தடி யேற்கினிதாங்
கச்சிக்கச் சாலைக் கனி.

பொருள் : தொழிலாலும், அறிவாலும், மனத்தெளி வாலும் தன்னிடனாகச் செலுத்தின காலத்தின் பெருமை யாலும், ஒப்பில்லாத ஆசையாலும், உயர்ந்தோராயினார் எண்ணவும், எத்தனையுந் தாழ்ந்த எனக்குக் கச்சிப்பதி யில் உண்டாகிய திருக்கச்சிச் சாலையில் தோன்றிய கனியை ஒப்பான் மிகவுஞ் சிறந்து இனிதாக நிற்கும்.

## 14. ஒற்றுப் பெயர்த்தல்

ஒரு மொழியுந் தொடர் மொழியுமாய் நின்று எண்ணிய பொருளன்றி வேறு பொருளும் பயக்கத்தக்க தாகப் பாடப்படுவது ஒற்றுப் பெயர்த்தலாகும்.

வண்புயலைக் கீழ்ப்படுத்து வானத் தருமலைந்து
மண்குளிரச் சாயல் வளர்க்குமாந்—தண்கவிகைக்
கொங்கா ரலங்கலந பாயன் குளிர்பொழில்சூழ்
கங்கா புரமா ளிகை.

பொருள் : வளப்பத்தையுடைய முகில்கள் கீழாக மேலோங்கி வானகத்தின்கண் உண்டாகிய கற்பகப்பூக் களை உச்சி மீது உடையதாய், உலகெங்கும் தன்னு ருவச் சாயையாகிய நிழலைப் பெருக்கும் குளிர்ச்சி பொருந்திய குடையினையும், மது நிறைந்த மாலையையு முடைய அநபாயனது கங்காபுரத்தின் மாளிகையெனவும்,

வளப்பத்தையுடைய முகிலைப் பழிக்கும் தன்மையை உடையதாய் வானகத்தினுண்டாகிய கற்பகத்தோடு பகைகொண்டு கொடுத்து உலகத்துள்ளாருடையஉள்ளங்

குளிரும் வண்ணம் காவல்புரியும் கங்காபுரத்தையாளும் குளிர்ந்த குடையினையுடைய அநபாயனது கை எனவும் வந்தவாறு காண்க.

## 15 மாத்திரைச் சுருக்கம்

யாதேனும் ஒரு பொருள் பயக்கும் ஒரு சொல், ஒரு மாத்திரையைக் குறைக்க வேறொரு பொருள் பயக்குஞ் சொல்லாய் நிற்பது.

நேரிழையார் கூந்தலினோர் புள்ளிபெற நீள்மரமாம்
நீர்நிலையோர் புள்ளி பெறநெருப்பாம்—சீரளவும்
காட்டொன் றொழிப்ப விசையா மதனளவில்
மீட்டொன் றொழிப்ப மிடறு.

பொருள் : நேரிழையார் கூந்தல்—ஓதி. இதில் ஒரு மாத்திரையைச் சுருக்க ஒதி என்னும் மரமாம். நீர்நிலை—ஏரி. இதில் ஒரு மாத்திரையைச் சுருக்க எரி— நெருப்பாம். காடு—காந்தாரம். இதில் ஒரு மாத்திரையைச் சுருக்கக் கந்தாரம் என்னும் பண்ணாம். இதில் மேலும் ஒரு மாத்திரையைச்சுருக்கக்கழுத்தாம். கந்தரம்—கழுத்து.

## 16. மாத்திரை வருத்தநம்

யாதேனும் ஒரு பொருள் பயக்கும் ஒரு சொல்லின் கணுள்ள எழுத்திற்கு மாத்திரையைக் கூட்டுவதால் அச்சொல் வேறொரு சொல்லாகிப் பொருள் பயக்கும்படி பாடப்பெறுவது மாத்திரை வருத்தநமாகும்.

அளபொன் றேறிய வண்டதி ரார்ப்பினால்
அளபொன் றேறிய மண்ணதிர்ந் துக்குமால்
அளபொன் றேறிய பாட லருஞ்சுனை
அளபொன் றேறழ கூடலைந் தாடுமால்.

பொருள் : வண்டு—அளி; அளபேறிய வண்டு ஆளி எனவும்; மண்—தரை; அளபேறிய மண் தாரை எனவும்; பாடல்—கவி; அளபேறிய பாடல்—காவி எனவும்; அழகு—வனப்பு; அளபேறிய அழகு வானப்பு.

முரச பந்தமாவது நான்கடியுடையதாய் மேலிரண்டடிகளும் தம்முட் கோமூத்திரியாகவும், கீழிரண்டடியும் தம்முட் கோமுத்திரியாகவும் சிறுவார் போக்கி, முதலடி இரண்டா மடியினும் மூன்றாமடியினும் நான்காமடியினும் கீமுற்று மீண்டு மேலே போய்க் கீழேயிறங்கி மேலே போய் முடியவும் தக்கதாகப் பெருவார்போக்கி எழுத்துக் களமைத்துப் பாடப்படுவதாகும்.

கான வாரண மரிய வாயினனே
தான வாரண மரிய வாயினனே
மான வாரண மரிய வாயினனே
கான வாரண மரிய வாயினனே.

பொருள் : சோழன் வலிய மிக்க போர் செய்த இடமானவை, இசையோடு கூடிய வேதம் அரியவாய் கூட்டம் பொருந்திய மதயானை யரியவாய், காட்டுக், கோழியையும் சிங்கங்களையும் உடையவாயின.

இது முரசின் வார்களைப் போல் அமைதலின் முரச பந்தம் எனப்பட்டது.

## 18. திரிபாகி

மூன்றெழுத்துக்களைச் சேர்க்க ஒரு மொழியாகியும் அதன்கண் உள்ள முதலெழுத்தையும் இறுதியெழுத்தையும் சேர்க்க மற்றொரு மொழியாகியும், இடையெழுத்தையும் கடையெழுத்தையுஞ் சேர்க்கப்பின்னொரு மொழியாகியும் வருவது திரிபாகியாகும். திரி—மூன்று. பாகி—பாகமுடையது.

மூன்றெழுத்து மெங்கோ முதலீ றொருவள்ளல்
ஏன்றுலகங் காப்ப திடைகடை—யான்றுரைப்பிற்
பூமாரி பெய்துலகம் போற்றிப் புகழ்ந்தேத்தும்
காமாரி காரிமா ரி.

பொருள்: இதனுள் மூன்றெழுத்துமெம்முடைய கோவாகிய காமாரியெனவும், இதன் முதலெழுத்துங் கடையெழுத்துங் கூடக்காரி என்றொரு வள்ளல் எனவும், இதன் இடையெழுத்துங் கடையெழுத்துங் கூட மாரி என்ற உலகங்காக்கும் மழையெனவும் வருதல் உணர்க.

## 19. திரிபங்கி

யாதேனும் ஒரு செய்யுளாய் நின்றே ஒரு பொருளைக் கொடுப்பதல்லாமல் அதுவே மூன்று செய்யுளாய்ப் பிரிந்து முடிந்து வெவ்வேறு பொருள் பயக்கத்தக்க தாகவும் பாடப்படுவது திரிபங்கியாகும். திரிபங்கி— மூன்று பகுப்புடையது.

"ஆதரந் தீரன்னை போலினி யாயம்பி காபதியே
மாதுபங் காவன்னி சேர்சடை யாய் வம்பு நீண்முடி
யாய்
ஏதமுய்ந் தாரின்னல் சூழ்வினை தீரெம்பிரானி னியார்
ஓதுமொன் றேயுன்னு வாரமு தேயும்பர் நாயக னே.

பொருள்: தாயைப் போல் இனிமை செய்பவனே! அம்பிகைக்குத் தலைவனே! உமையை இடப்பாகத்தில் உடையவனே! கையில் நெருப்பைத் தாங்கிய சடைக் கடவுளே! மணந்தங்கிய நீண்ட சடைமுடியை உடைய வனே! குற்றத்திலிருந்து நீங்கி நின்னருள் பெற்று வாழ்ந்தவர்களுடைய துன்பஞ் சூழ்ந்த இருவினைகளைத் தீர்க்கின்ற எம்முடைய கடவுளே! வீட்டின்பத்தையுடை யவர்கள் போற்றுகின்ற ஒப்பற்ற பொருளே! எண்ணுப வர்களுக்கு அமுதத்தைப் போன்றவனே! தேவர்களுக்குத் தலைவனே! என்னுடைய அவாவைத் தீர்ப்பாயாக!

இக்கட்டளைக் கலித்துறையிலே, அடிதோறும் உள்ள முதலாஞ்சீர்களையும் இரண்டாஞ் சீர்களிலுள்ள முதலசைகளையுஞ் சேர்க்க—

ஆத ரந்தீர்
மாது பங்கா
ஏத முய்ந்தா
ரோது மொன்றே

என்றொரு வஞ்சித்துறைச் செய்யுள் தோன்றும். அதன்பின் நான்காஞ் சீர்களில் உள்ள முதலாமசைகள் வரையும் நான்கடிகளையும் படிக்க,

"அன்னை போலினியாய்
வன்னிசேர் சடையாய்
இன்னல்சூழ் வினைதீர்
உன்னுவா ரமுதே

எனவரும், வேறொரு வஞ்சித்துறையாக முடியும். மற்றைய நான் கடியும்,

'அம்பிகா பதியே
வம்புநீண் முடியாய்
எம்பிரா னினியார்
உம்பர்நா யகனே'

எனவரும் மற்றொரு வஞ்சித்துறையாகும்.

இதுவுமது

சங்கந்தா பூணாரந் தாமே கலைதாநற்
புங்கவன்மால் காணாப் புலவுடைய—கங்கரா
கோணா கலாமதிசேர் கோடீர சங்கரா
சோணா சலாசலமே தோ?

பொருள்: நல்ல நான்முகனும் திருமாலும் முடியையும் அடியையும் தேடிக் காண முடியாதவனும், பகைவர் ஊன் தங்கிய மழுப்படையை உடையவனுமாகிய அரனே! வளைவாகிய மூன்று கலைகளையுடைய திங்கள் சேர்ந்த சடையை உடையவனே! அழித்தல் தொழிலையுடைய

வனே! அருணாசலத்தில் உள்ளவனே! சங்கு வளையலைக் கொடு; அணியத்தக்க ஆரத்தைக்கொடு; மேகலாபரணத்தைக் கொடு; உனக்குச் சஞ்சலம் யாது? இவ்வெண்பாவே—

பூணாரந் தாமே கலைதாநற் புங்கவன்மால்
காணாப் புலவுடைய கங்கரா—கோணா
கலாமதிசேர் கோடீர சங்கரா சோணா
சலாசலமே தோ? சங்கந் தா

எனவும்,

சலமேதோ? சங்கந்தா பூணாரந் தாமே
கலைதாநற் புங்கவன்மால் காணாப்—புலவுடைய
கங்கரா! கோணா கலாமதிசேர் கோடீர்!
சங்கரா சோணா சலா!

எனவும் மூன்று வெண்பாவாகப் பிரிந்தது காண்க இவற்றிற்கும் முதல் வெண்பாவைப் போலப் பொருள் கூறலாம். இது ஒரு செய்யுளே மூன்று பங்காவதால் திரிபங்கியென்று பெயர் பெற்றது.

## 20. பிறிதுபடு பாட்டு

அடி தொடைகளை வேறு படுத்தலால் முன்னைய நிலை மாறி வேறொரு செய்யுளாகும்படி பாடப் படுவது பிறிதுபடு பாட்டாகும்.

தெரிவருங் காதலில் சேர்ந்தோர் விழையும் பரிசு
கொண்டு
வரியளி பாட மருவரு வல்லி யிடையுடைத்தாய்த்
திரிதருங் காமர் மயிலிய லாயநண் ணாத்தேமொழி
அரிவைதன் னேரென லாகுமெம் மையயாம்
ஆடிடமே

பொருள்: எம்மையனே யாம் விளையாடும் இவ்விட மானது தெரிதற்கரிய காதலினாலே கூடியவர் விரும்பும்.

விதத்தைக் கொண்டு இசைபாடத்தக்க வண்டுகளென்னும் பாடல் மகளிர் பாடுதலைச் செய்ய மருவுதற்கரிய கொடிகளாகிய இடையினையுடையதாய்த் திரிகின்ற அழகிய மயில்களென்னும் தோழியர்தம் கூட்டத்தைப் பொருந்தித் தேன் போலும் மொழியினையுடைய அரிவைக் கொப்பாகு மென்று சொல்லலாந் தன்மையுடையது.

''தெரிவருங் காதலில் சேர்ந்தோர் விழையும்
பரிசு கொண்டு வரியளி பாட
மருவரு வல்லி யிடையுடைத் தாய்த்திரி
தருங்காமர் மயிலிய லாய நண்ணாத்
தேமொழி யரிவைதன் னேரெனல்
ஆகும்எம் ஐய யாமா டிடமே''

என்று, ஒரு நேரிசை ஆசிரியப் பாவாகக் கொள்ளப் படுதலையும் அறிக.

### 97. வழூக்களின் வகை

பிரிபொருட் சொற்றொடர் மாறுபடு பொருண்மொழி
மொழிந்தது மொழிவே கவர்படு பொருண்மொழி
நிரனிறை வழுவே சொல்வழு யதிவழுச்
செய்யுள் வழுவொடு சந்தி வழுவென
எய்திய ஒன்பதும் இடனே காலம்
கலையே உலகம் நியாயம் ஆகமம்
மலைவுமுள் ளுறுத்தவும் வரைந்தனர் புலவர்

(க) பிரிபொருட் சொற்றொடரும் (2). மாறுபடு பொருண் மொழியும், (3) மொழிந்தது மொழிதலும்; (4) கவர்படு பொருண் மொழியும், (5) நிரனிறை வழுவும், (6) சொல்வழுவும், (7) யதி வழுவும், (8)செய்யுள் வழுவும் (9) சந்தி வழுவும்—

(1) இடமலைவும், (2) கால மலைவும், (3) கலை மலைவும், (4) உலகமலைவும், (5) நியாய மலைவும், (6) ஆகம மலைவும் என்னும் ஆறுமலைவும்—

ஆகிய பதினைந்தும் செய்யுளிடத்திலே வரலாகா தென்று புலவர்கள் விலக்கியுள்ளனர்.

புறனடை

98. மேற்கோ ளேது எடுத்துக் காட்டென
ஆற்றுளிக் கிளக்கு மவற்றது வழுநிலை
நிரம்ப வுணர்த்த வரம்பில வென்ப.

மேற்கோளும் ஏதுவும் எடுத்துக்காட்டும் என்று முறைமையாற் கூறப்பெறும் அவற்றது வழுநிலையை ஈண்டு முழுதும் உணர்த்தத் தொடங்கினால் அவை அளவற்றனவாகு மென்று புலவர் கூறுவர்.

1. பிரிபொருட் சொற்றொடர்

99. அவற்றுள்,
பிரிபொருட் சொற்றொடர் செய்யுண் முழுவதும்
ஒருபொருள் பயவா தொரீஇத் தோன்றும்

அவைகளுள்ளே பிரிபொருட் சொற்றொடராவது செய்யுள் முழுவதும் ஒரு பொருள்பயவாது பிரிந்து தோன்றும் பொருளுடைய தாகும்.

பிரிபொருட் சொற்றொடர்—பிரிந்து தோன்றும் பொருளுடைய சொற்றொடர்.

கொண்டல் மிசைமுழங்கக் கோபம் பரந்தனவால்
தெண்டிரைநீ ரெல்லாந் திருமுனியே—
உண்டுமிழ்ந்தான்
வஞ்சியார் கோமான் வரவொழிக மற்றிவளோர்
பஞ்சியார் செஞ் சீறடி.

இது ஒரு பொருள் தராமல் ஒன்றற் கொன்று தொடர் பில்லாத நான்கு மொழிகளாய் நான்கு பொருள் தரும்.

(1) வானின்கண் முகில்கள் முழங்க நிலத்தின்கண் கோபம் பரந்தன.

(2) தெளிந்த அலைகளையுடைய கடல் நீரையெல் லாம் அகத்திய முனிவரே உண்டுமிழ்ந்தார்.

(3) கருவூராருக்குத் தலைவனாகிய சோழனே வருதலை பொழிவாயாக

(4) இவள் செம்பஞ்சியை ஊட்டிய சிவந்த சிற்றடி யாள் எனத் தனித்தனியாக நோக்கப் பொருள் தரும்; கூட்டி நோக்கப் பொருள் தராது.

### இதற்குச் சிறப்பு விதி

100. களியினும் பித்தினுங் கடிவரை யின்றே.

மேலே கூறிய பிரிபொருட் சொற்றொடர் கள்ளுண்டு களித்தான் கூற்றின் கண்ணும், பித்தினால் மயங்கினான் கூற்றின்கண்ணும் விலக்கப்படாது.

### 1. களியான் மொழிந்தது

காம ருருவங் கலந்தேன்யான் காங்கேயன்
வீமனெதிர் நின்று விலக்குமோ—தாமரைமேல்
மால்பொழிய வந்தா ரருகர் மதுவுடனே
பால்பொழியும் இவ்வூர்ப் பனை.

பொருள்: அழகிய உருவங்களிலே யான் புகுந்து கலந்தேன். காங்கேயனாகிய அரசன் வீமனெதிர் நின்று போரை விலக்குமோ? தாமரை மலர் மேல் அருகர் மால் பொழிய வந்தார். இவ்வூர்ப்பனை மதுவுடனே பாலைப் பொழியும்.

இவ்வாறு பொருட்டொடர்பில்லாது வந்தது கள் ளுண்டான் கூற்றாகியது.

## 2. மாறுபடு பொருண்மொழி

101. மாறுபடு பொருண்மொழி முன்மொழிந் ததற்கு
மாறுபடத் தோன்றி வருமொழித் தாகும்.

மாறுபடு பொருள் மொழியாவது முன்னர்ச் சொல்லப் பட்ட பொருளுக்கு மாறாகப் பொருள் தோன்றி வரும் சொல்லுடையதாகும்.

மின்னார் மணிப்பைம்பூண் வேந்தே! நினக்குலகில்
இன்னா தவர்யாரு மில்லையால்—ஒன்னார்
குலமுழுதுங் கூற்றம் கொளவெகுண்டு நீயே
தலமுழுதுந் தாங்கல் தகும்.

பொருள்: ஒளியினையுடைய மணிகளிழைத்த பசும் பொன்னாற் செய்த அணிகலன்களையுடைய வேந்தனே! நினக்கு இன்னாதவர் உலகில் எவருமிலர் என்று பிறகு நின்பகைவர் உயிரையெல்லாங் கூற்றுவன் குலத்தோடு கொள்ளும்படியாக வெகுண்டு நீயே உலகம் முழுவதுந் தாங்குதல் தகும். (கஉ)

### சிறப்பு விதி

102. காமமும் அச்சமுங் கைம்மிகி னுரித்தே

மாறுபடுபொருள்மொழியும், காமமும் அச்சமும் மிகுந்து கூறுமிடத்துக் கொள்ளப்படுதற் குரியதாகும்.

என்னோ டிகல்புரியப் பஞ்சவர்கள் அஞ்சாரோ
மின்னனைய பாஞ்சாலி யைவிடேன்—அன்னோ
மிகல்புரியுங் கூற்றனைய வீமனெ திர்நின்
றிகல்புரிய ஆற்றுவலோ யான்.

பொருள்: என்னோடு மாறுபட்டெதிர்த்தற்குப் பஞ்சபாண்டவர் அஞ்சாரோ; மின்னனைய பாஞ் சாலியை விடேன்; மேம்பாட்டினையுடைய கூற்றத்தை யொத்த வீமனுக்கு எதிரே நின்று மாறுபடுதற்கு யான் வல்லனோ?

இதனுள் கூறிய சொற்கள் மாறுபட்டு வருதலைக் காண்க.

### 3. மொழிந்தது மொழிவு

103. மொழிந்தது மொழிவே கூறியது கூறி
வேறுபட வொருபொருள் விளங்கா தாகும்.

மொழிந்தது மொழிவாவது முன்னர்ச் சொன்ன பொருளையே சொல்லி அதனின் வேறாக ஒரு பொருள் விளங்குதற்கிடனாக வையாததுவாகும்.

அங்கமி லாத வனங்கன் றலம்புரியும்
வெங்கணையுங் காக்குங்கொல்
வேல்வேந்தர்—தங்கோன்
நிலையார்த் தொடையதுல னேரிழைக்காய்
முன்னோர்
மலையாற் கடல்கடைந்தான் மால்.

பொருள்: வேலைத் தாங்கிய அரசர்க்கரசனாகிய நிலைத்த ஆத்தி மாலையை அணிந்த ஒப்பில்லாத சோழன் அங்கமில்லாதவனாகிய காமன் கைகளால் எய்யப்படுகிற கொடிய அம்புகளை எய்தும் காப்பானோ? காப்பான்.ஏனெனில், முன்னாளில் திருமால் திருமகளைப் பெற வேண்டி ஒரு மலையாலே பாற்கடலைக் கடைந்தான்.

ஈண்டு, 'அங்கமிலாத' என்பதும், 'அநங்கன்' என்பதும் ஒரு பொருளையே தருதலால் மொழிந்தது மொழிவாயிற்று. இதனையொட்டிச் சொற்பின் வருநிலை, பொருட்பின் வருநிலை, சொற் பொருட்பின் வருநிலை முதலியவைகளையும் இவ்வாறே கொள்க.

### சிறப்பு விதி

104. விரைவினுஞ் சிறப்பினும் வரைவின் றதுவே

மொழிந்தது மொழிவு விரைவின் கண்ணும், சிறப்பின் கண்ணும் விலக்கப் படுவதன்று.

ஒருவ ரொருவர்மேல் வீழ்ந்து வடநாடர்
அருவ ரருவரென வஞ்சி—வெரு வந்து
தீத்தீத்தீ என்றயர்வர் சென்னி படைவீரர்
போர்க்கலிங்க மீதெழுந்த போது

பொருள்: சோழனுடைய படைவீரர் போரையுடைய கலிங்க நாட்டின் மீது போர்க்கெழுந்த போது, அவ்வட நாடர் ஒருவர் மேல் ஒருவர் வீழ்ந்து, 'நாம் குறைவுற்றவ ரானோம்; குறைவுற்றவரானோம்' என்று அஞ்சி மயங்கி, 'நெருப்பு மூண்டது; நெருப்பு மூண்டது' என்று வாடு வார்கள்.

### 4. கவர்படு பொருண்மொழி

105. ஒருபொருள் துணிய உரைக்க லுற்றசொல்
இருபொருட் கியைவது கவர்படு பொருண்மொழி

ஒரு பொருளையே துணியும்படி சொல்லப்பட்ட சொல்லானது பல பொருள் கொள்ளுமாறு பொருந்தி நிற்பது கவர்படு பொருண் மொழியாகும்.

புயலே புறம்பொதிந்து பூந்தா தொழுக்கி
மயலே கடவுளர்க்கு வாய்த்துச்—செயலை
எரிமருவு பூந்துணர்த்தாய் யாவருமூ டாடார்
அரிமருவு சோலை யகத்து.

பொருள்: மேற்புறம் முகிலால் மூடப்பட்டு அழகிய மகரந்தங்களைச் சொரிந்து, தேவர்களுக்கும் மயக் கத்தைச் செய்தலையுடைய தீயைப் போன்ற நிறம் பொருந்திய பூங் கொத்துக்களையுடையதாய், வண்டுகள் சார்ந்திருக்கின்ற பொழிலுக்குள் எவரும் இடையே செல்லார்.

இங்கு அரியென்பது வண்டு, அரிமா, தீ முதலிய பல பொருள்களுக்கும் பொதுவாதலால் எதனையுந் துணிய முடியாமல் நின்று கவர்படு பொருண் மொழி யாயிற்று.

சிறப்பு விதி

106. வழூஉப்பட லில்வழி வரைவின் றதுவே

அக்கவர்படு பொருண் மொழியும் வழுப்படுதலில் லாத விடத்தில் விலக்கப்படுவதன்று.

வானவர்க டாழ்ந்து பணிகேட்ப மாறாய
தானவர்கள் சுற்றந் தடிந்தொழித்த—மேன்மை
அரியே அனைத்துலகுங் காக்குங் கடவுள்
எரியே மறையோர்க் கிறை

பொருள்: தேவர்கள் பணிந்து ஏவல் கேட்பப் பகை யான அசுரர்களுடைய குலத்தைச் சோதித்துக் களைந்த மேன்மை பொருந்திய அரியே எல்லா உலகத்தையுங் காக்குங் கடவுள். தீயே மறையவர் கட்குத் தலைமை.

அரி என்பது திருமாலையும் இந்திரனையும் உணர்த்துமாயினும் இரு பொருளும் பொருந்துதலால் குற்றமாகாமை உணர்க.

5. நிரனிறைவழூ

107. ஒருநிரன் முன்வைத் ததன்பின் வைக்கும்
நிரனிறை பிறழ்வது நிரனிறை வழூவே.

ஒரு வரிசையை முன்னர் வைத்து அதன் பின் வைக்கும் வரிசை முன்னிறுத்திய வரிசைக்குப் பொருந்தாது மாறு படுவது நிரனிறை வழுவாகும்.

தெற்குக் குடக்கு வடக்குக் குணக்குமேல்
நிற்குந் திறத்துலகை நீடளிக்கும்—பொற்பினார்

ஈரெண் கலையோன் வருண னிரவியமன்
யாரும் புகழியல்பி னார்.

பொருள்: தெற்கு, மேற்கு, வடக்கு, கிழக்கு என்னுந் திக்குகளின் மேல் நிற்கும் திறமையினாலே உலகைக் காப்பாற்றும் பொறப்பினையுடையார்,பதினாறுகலைகளை யுடைய திங்கள், வருணன், கதிரவன், இயமன் என எவரும் புகழக்கூடிய இயல்பினையுடையார்.

தென்றிசை முதற் குணதிசை இறுதியாக அடைவே எண்ணி அத்திசைகளினின்றும் உ ல க ங் கா ப் ப வ ர், சந்திரன், இயமன், வருணன், சூரியன் என முறையே வையாது, சந்திரன், வருணன், சூரியன், இயமன் என முறை பிறழ வைத்தமையின் வழுவாயிற்று

சிறப்பு விதி

108. உய்த்துணர வரும் வழி அவ்வாறு முரித்தே

அந் நிரனிறை உய்த்துணர்ந்து கொள்ளும்படி வரு மிடத்து அவ்வாறு பிறழ்ந்து வருதலும் உரியதாகும்.

குடபால் வடபால் குணபால் தென்பாலென்
றடைவே திசைநான் கவற்றுள்—இடையிரண்டு
நன்மைபுரி வோர்பயந்து நோக்குப ஏனைய
வன்மைபுரி வோர்க்கே யாம்.

பொருள்: மேற்குத் திசை, வடக்குத்திசை, கீழ்த்திசை, தென்திசை என்று முறையே ஏற்பட்ட திக்குகள் நான் கனுள், இடையில் உள்ள இரண்டும் ந ன் மை புரிவோர் அவற்றைக் கொடுத்து நோக்குவனவாம்; மற்றவை தீமை புரிவோர்க்குரியனவாம்

நன்மை புரிவோர்க்கு வடக்குங் கிழக்கும், வன்மைபுரி வோர்க்குத் தெற்கும் மேற்கும் உரியவெனக் கொள்க.

## 6. சொல் வழு

109. சொல்வழு வென்பது சொல்லிலக் கணத்தொடு
புல்லா தாகிப் புகர்படு மொழியே.

சொல்வழுவாவது சொல்லிலக் கணத்தொடு பொருந்தாத குற்றமுடைய மொழியாகும்.

யாவகைய தாயர்க்கு மெங்களுக்கு மெந்தையர்க்கும்
ஆவி யிவளே யனையவர்க்குங்—கோவே
நுனக்க பயமிந்த நுண்மருங்குன் மாது
தனக்கிடரொன் றில்லாமல் தாங்கு.

பொருள்: பெற்றவள், வளர்த்தவள், பாராட்டுபவள் முதலிய எல்லாத் தாய்மார்களுக்கும், எங்களுக்கும், எங்கள் தந்தையாருக்கும் இன்னும் உள்ளவர்களுக்கும் இவளே உயிராவள்; ஆதலின் அரசனே! இந்த நுட்பமாகிய இடையினையுடைய பெண் உனக்கு அடைக்கலம். இவளுக்குத் துன்பமொன்றுமில்லாமல் இவளைக் காத்துக் கொள்வாயாக!

யாவகைய தாயர்க்கும் என்று கூறிப் பின்னர் எங்களுக்கு என்று கூறியது தவறாகும். இதனுள் 'எங்களுக்கு' எனவும், 'நுனக்கு' எனவும் வழு உச்சொல் சேர்க்கப்பட்டன.

### சிறப்பு விதி

110. வழக்கா றாயின் வழுவின் றதுவே

குறிக்கப்பட்ட சொல்லும் சான்றோரால் வழங்கப்படு முறையுடையதாயின் வழுவற்ற தாகும்.

யாவ ரறிவா ரிவரொருவ ரிக்குறிஞ்சிக்
காவலரோ விஞ்சையர்தங் காவலரோ—பாவாய்
அருமந்தன் னார்நம் மகன்புனம்விட் டேகார்
தெருமந் துழலுந் திறம்.

பொருள்: பாவையைப் போன்ற பெண்ணே! ஒப்பற்றவராகிய இவர் இக்குறிஞ்சி நிலத்திற்குத் தலைவரோ? வித்தியாதரர்களுடைய தலைவரோ? அருமருந்து போன்ற இவர், நம்முடைய விசாலமான தினைக்கொல்லையை விட்டுப் போகாதவராய் மயங்கி வருந்துந் தன்மையை எவரறிந்து சொல்ல வல்லவர்?

இதனுள் அருமருந்தன்னார் என்று கூறவேண்டியது அருமந்தன்னார் என அடிப்பட்டுவந்து வழக்காறாயிற்று'

7. யதி வழு

111. யதிவழு வென்ப தோசை யறுவழி
நெறிப்பட வாரா நிலைமைய தென்ப

யதிவழு என்று சொல்லப்படுவது ஓசை கொண்டு சீர் முடியுமிடத்து முறைப்பட வாராத நிலைமையை உடையதாகும்.

மாடு பயிலும் வரையாளி மால்யானைக்
கோடுபுயத் துண்டுழலுங் கொள்கைத்தாம்—காடு
அரிதா மியல்பிற் றரையிருட்கண் வாரல்
பெரிதாகு மைய பிழை.

பொருள்: மலைப்பக்கங்களிலே தங்குகின்ற சிங்கம் மதயானையினது கோட்டைப் புயத்திலே தாங்கி வருந்தும் இயல்பினையுடையதாகிய காடு, எவருஞ் செல்லுதற்கரிய தன்மையுடையதாகும். ஆதலின் ஐயனே! அக்காட்டில் நள்ளிரவில் வருதல் ஒழிவாயாக. அவ்வாறு வரின் பெரிதும் பிழையாகும்.

இதனுட் காடரிதாம் என்று வரவேண்டியது காடு அரி தாம் என்று நின்று யதிவழுவாயிற்று.

சிறப்பு விதி

112. வகையுளி யுரைப்புழி வரைவின்றதுவே.

யதிவழுவும் வகையுளியாகச் சொல்லுமிடத்து விலக்கப்படுவது அன்று.

மேவிவாழ் வார்மே லிருணீக்கி யாருமலர்த்
தேவிநீங் காள்செம்பொற் றோளிணைகள்
—கோவினணி
சென்னிவிடா மாலினடி வேலினுதி நீலநிறக்
கன்னிவிடா ளீகைவிடா கை.

பொருள்: தான் மேவி வாழ்வாரிடத்தே, வறுமையென்னுமிருளை நீக்கி ஐசுவரியமென்னும் தன்னுடைய ஒளியைப் பரப்பிப் பொருந்துகின்ற, செந்தாமரை மலரில் வாசஞ் செய்யும் திருமகள் இறைவனுடைய செவ்விய பொன்னைப் போன்ற தோள்களை விட்டு நீங்காள், அவனது அழகிய தலை திருமாலின் அடியைவிட்டு நீங்காது; நீல நிறம் பொருந்திய வெற்றித் திருமகள் அவனுடைய வேலின் முனையை விட்டு நீங்காள்; அவன் கை ஈகையை விடமாட்டாது,

இங்கே 'மேவி' எனவும் 'வாழ்வார்மேல்' எனவும் பதம் நோக்கிப் பிரிக்கப்பட வேண்டியன சீர்நோக்கி 'மேவிவாழ்' எனவும் 'வார்மேல்' எனவும் பிரிக்கப் படுதலையும். 'தேவி' எனவும் 'நீங்காள் செம்பொன்' எனவும் பிரிக்கப்பட வேண்டியன 'தேவிநீங்' எனவும், 'காள்செம்பொன்' எனவும் பிரிக்கப்படுதலையும் அறிக. இவ்வாறு பதம் பிரிக்கப்படுதலே வகையுளியாகும்.

### 8. செய்யுள் வழூ

113. செய்யுள் வழுவே யாப்பிலக் கணத்தோ
டெய்த லில்லா வியல்பிற் றாகும்.

செய்யுள் வழுவாவது யாப்பிலக் கணத்தோடு பொருந்தாத இயல்பினை யுடையதாகும்.

ஆதரந் துயர்தர வயர்தருங் கொடிக்குப்
பூதலம் புனைபுகழ் வளவன்—தாதறாத்
தாங்கரும் பாலன்றித் தணியுமோ தாரனங்கன்
பூங்கரும்பால் வந்தடுத்த போர்.

பொருள் : அவாவானது வருத்தத்தைத் தர அத னாலே வருந்துகிற பூங்கொடி போலும் மாதினுக்கு நிலத்தை அழகு செய்யும்படியான புகழுள்ள சோழன் அணிந்திருக்கின்ற, மகரந்தம் நீங்காத பூ வரும்புகளாலா கிய மாலையாலல்லாமல், மாலையை அணிந்த மன்மதனு டைய அழகிய கருப்புவில்லால் வந்து சேர்ந்த போர்த் துன்பமானது தணியுமோ?

இது முன் ஆசிரியமும், பின் வெண்பாவுமாக வந்து யாப்பிலக்கணத்திற்குப் பொருந்தாதாயிற்று. யாப்பிலக் கணத்திலே முன்னர் ஆசிரியமும், பின்னர் வெண்பாவு மாக வருதற்கு எவ்விடத்தும் விதியில்லை.

சிறப்பு விதி

114. ஆரிடத் துள்ளு மவைபோல் பவற்றுளும்
நேரு மென்ப நெறியுணர்ந் தோரே

செய்யுள் வழுவும் ஆரிடத்துள்ளும் ஆரிடம் போன்ற வைகளுள்ளும் வரும் என்று சொல்லுவார் அறிஞர்.

ஆரிடமாவது இருடிகளால் சொல்லப்பட்ட நூல்.

ஆரிடம் போன்றவைகளாவன சாவவும், கெட வும் வாழவும் பாடவல்ல அறிஞர் செய்யுள்கள்.

கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க
ஒண்செங் குருதியுளோஒ கிடப்பதே—கெண்டிக்
கெழுதகைமை யில்லேன் கிடந்தூடப் பன்னாள்
அமுதகண் ணீர்துடைத்த கை.

பொருள் : தலைவரது பிரிவின் கூட்டமில்லாத யான், நிலத்திற் கிடந்து பிணங்கப் பலநாளும் அழுத

கண்ணீரைத் துடைத்த எனது கை, வாளைப் பற்றிக் கடகத்திலுள்ளே இரத்தினம் ஒளிவிடச் சிவந்த இரத்தத் தினுள்ளே கிடப்பதே.

இது பதினாறு சீர் வெண்பாவாய் யாப்பிலக்கணத் தோடு பொருந்தாது வந்தது. பாடினோர் பெருமை நோக்கி ஒப்புக் கொள்ளப்பட்டது.

### 9. சந்தி வழு

115. சந்தி வழுவே யெழுத்திலக் கணத்துச்
சந்தி யொடு முடியாத் தன்மைத்தாகும்.

சந்தி வழுவாவது எழுத்திலக்கணத்திலே கூறப்பட்ட புணர்ச்சியிலக்கணத்தோடு பொருந்தாத தன்மையுடைய தாகும். சந்தி—புணர்ச்சி

என்பூ டுருக வினைவேன் மனங்கலக்கும்
பொன்பூண் சுமந்த புணர்முலையீர்—மின்போல்
நுடங்கிடைக்கும் காவலாய் நோக்கக் கவரும்
படங்கிடைக்கு மல்குற் பரப்பு.

பொருள் : எலும்பும் உள்ளே உருகுமாறு வருந்து வேனாகிய எனது மனத்தைக் கலக்குகின்ற பொன்னணி களைத் தாங்கிய கொங்கைகளையுடையீர்! நுங்கடி தடப் பரப்பானது மின்னலைப் போல் அலைகின்ற இடைக்குங் காவலாய், பார்ப்பவரது நோக்கங்கவரும் பாம்பு படத் தின் தன்மையைப் பொருந்தியிருக்கும்.

இதனுள் பொற்பூண் எனற்பாலது பொன்பூண் என வந்தது சந்தி வழுவாயிற்று.

#### சிறப்பு விதி

116. இரண்டாம் வேற்றுமைக் கெதிர்மறுத்தும் வருமே

இரண்டாம் வேற்றுமையாயின் எழுத்திலக்கணத்திற் சொல்லப்பட்ட விதியை மறுத்தும் புணர்ச்சி வரும்.

இரவி துணைத்தா ளிகல்வேந்தர் சென்னி
விரவு மலர்பொழியு மேவா—அரசிரிய
மின்பொழியுஞ் செவ்வேல் வெறியோ ரினங்கவர
பொன் பொழியுஞ் செங்கைப் புயல்.

பொருள் : சோழனுடைய இரண்டு அடிகளும் பகையரசர்களுடைய தலையிலே சேர்ந்திருக்கின்ற மலரைச் சொரியும்; செம்மையாகிய வேலானது பகையரசர்கள் பயந்தோட மின்னலைச் சொரியும். சிவந்த கையாகிய முகிலானது வறிஞர் கூட்டங் கொள்ளுமாறு பொருளினைச் சொரியும்.

இச்செய்யுளில் 'மலர் பொழியும்' 'மின் பொழியும்' பொன் பொழியும்' என்பன இயற்கையாக முடிந்தன.

## மலைவு

### 1. இடமலைவு

117. இடமெனப் படுபவை மலைநா டியாறே.

இடமென்று சொல்லப்படுபவை மலை, நாடு, யாறுவாம்.

மலை, இமயம், பொதியம் முதலியன. நாட்டிற்குப் பதினெண் மொழியும் வழங்கும் நிலங்கள். யாறு, கங்கை முதலியன. இவற்றுள் ஒன்றினுள்ள பொருளை மற்றொன்றினுள்ள தாகச்சொல்லுதல் இடமலைவாகும். மலைவு—மாறுபாடு.

தென்மலையின் மான்மதமுஞ் சாமரையுந் தேமருசீர்ப்
பொன்மலையின் சந்தனமு மாரமும்—பன்முறையும்
பொன்னி வளநாடன் முன்றிற் பொதுளுமே
மன்னர் திறைகொணர வந்து.

பொருள் : பொதிகையிலுள்ள கத்தூரியும், சாமரையும் வாசனை பொருந்திய சிறப்பையுடைய நேருமலையி

லுள்ள சந்தனமும், பூமாலையும் அரசர்கள் திறைப் பொருள்களாகப் பன்முறையும் கொண்டுவர, வந்து, காவிரி பாயும் வளம்பொருந்திய சோழநாட்டையாளும் சோழனுடைய முன்றிலிலே நிறையும்.

தண்பொருநைச் செங்கனக மாதங் சிரித்தரளம்
வண்கலிங்கந் தந்த வயப்புரவி—பண்பு
மருவும் யவனத்து மால்யானை சென்னி
பொருளர்க்கு வீசும் பொருள்

பொருள் : குளிர்ச்சி பொருந்திய பொருநையாற்றி லுள்ளசெம்பொன்னும்,மாதங்கிரியிலுள்ள முத்தும், வளப் பம் பொருந்திய கலிங்க நாட்டிலிருந்து கொண்டு வரப் பட்ட வெற்றி பொருந்திய குதிரைகளும், நற்குணம் பொருந்திய யவனதேசத்து மதயானையும் ஆகிய இவை களே சோழன் தன்னைப் புகழ்ந்து பாடுவோர்க்கு வாரி யிறைக்கும் பொருள்களாம்.

பொருநர் என்பவர் புகழ்ந்து பாடுவர். இவற்றுள் இமயத்திலுள்ளன பொதியத்திற்கு உரியவாகவும், பொதி யத்திலுள்ளன இமயத்திற்கு உரியவாகவும் கூறினமை யின்மலையிட மலைவு ஆயிற்று.

பொருநைக்குரிய தரளத்தை மாதங்கிரியோடுபுணர்த் தும், மாதங்கிரிக்குரிய பொன்னை பொருநையோடு புணர்த்துங் கூறினமையின் யாறிடமலைவு ஆயிற்று.

யவனத்திற்குரிய குதிரையைக் கலிங்கத்தோடு புணர்த்தும், கலிங்கத்துக்குரிய யானையை யவனத் தோடு புணர்த்துங் கூறினமையின் நாடிடமலைவு ஆயிற்று.

### 2. கால மலைவு

118. காலம் பொழுதொடு பருவமென் றிரண்டே.

காலமாவது பொழுதும் பருவமும் என்று சொல்லப் பட்ட இரண்டுமாம்.

பொழுதாவன காலை, உச்சி, மாலை, யாமம், வைகறை என்னுஞ் சிறு பொழுதுகள். பருவமாவன கார், கூதிர் முதலிய அறுவகைப் பருவங்கள். இவற்றுள் ஒன்றற்குரியது மற்றொன்றற்குரியதாகச் சொல்லப்படு வது கால மலைவாகும்.

செங்கமலம் வாய்குவியத் தேங்குமுதங்
கண்மலர
எங்கு நெடுவானின் மீனிமைப்ப—பொங்குதயத்
தேராழி வெய்யோ னுகந்தான் மலர்ந்ததே
நீராழி சூழ்ந்த நிலம்.

பொருள் : சிவந்த தாமரை மலர்கள் முகங் கூம்ப, வாசனை பொருந்திய அல்லிமலர்கள் முகமலர, நீண்ட விண்ணில் எங்கும் உடுக்கள் விளங்க, பொங்குகின்ற தோற்றத்தையுடைய ஒற்றையாழி பொருந்திய தேரினனா கிய கதிரவன் மகிழ்ந்து தோன்றினான். கடல் சூழ்ந்த உலகம் விளங்கிற்று.

இதனுள் மாலைப் பொழுதிற்குரியன காலையோடு புணர்ந்ததனால் பொழுது மலைவு ஆயிற்று.

காதலர் வாரார் களிக்கு மயிலகவத்
தாதவிழ் பூங்குருந்தின் தன்பணையின்—மீதே
தளவேர் முகை நெகிழத் தண்கொன்றை பூப்ப
இளவேனில் வந்த திதோ

பொருள் : மகிழ்கின்ற மயில்களாட, மகரந்தங்கள் பரந்த மலர்களையுடைய குருந்த மரத்தின் கிளைமீதே படர்ந்த முல்லைக்கொடியில் அழகிய முல்லையரும்புகள் மலர, குளிர்ந்த கொன்றை பூத்தலைச் செய்ய இதோ இளவேனிற் பருவம் வந்தது.

மயிலாடலும், முல்லை கொன்றை பூத்தலும் கார்ப் பருவத்திற்குரியன. கார்ப்பருவத்திற்குரியன இளவேனிற் பருவத்தில் தோன்றினவாகப் புணர்த்தமையின் பருவ மலைவு ஆயிற்று.

### 3. கலை மலைவு

கஉ. கலையெனப்படுபவை காண்டக விரிப்பில்
காமமும் பொருளும் ஏமுறத் தழுவி
மறுவறக் கிளந்த அறுபத்து நான்கே.

கலையென்று சொல்லப்படுபவை காமத்தினையும் பொருளினையுந் தழுவிச் சொல்லப்பட்ட அறுபத்து நான்குமாகும்.

கலை—சாத்திரம் அவை, இசை, வாத்தியம், கணிதம் முதலியன. இவற்றிற்கு மாறுபாடாக வருவது கலைமலைவாகும்.

ஐந்தாம் நரம்பாம் பகைவிரவா தாறாக
வந்த கிளைகொள்ள நான்காய—முந்தை
இணைகொண்ட யாழியற்று மேந்திழை
தன்னாவித்
துணைவன் புகழே தொடுத்து.

பொருள் : ஐந்தாம் நரம்பாகிய பகை சாராது, ஆறாம் நரம்பாக வந்த கிளையைக் கொள்ள, நான்காம் நரம்பாகிய முதன்மைத்தான இணையைக் கொண்ட யாழைச் சுமந்த அணிகலன்களையுடைய பெண் தன்னுயிர்க்குத் துணைவனாகிய தலைவனது புகழையே தொடுத்து வாசிப்பாள்.

இங்கே நின்ற நரம்பிற்கு ஐந்தாவதாகிய கிளையைப் பகையென்றும், ஆறாவதாகிய பகையைக் கிளையென்றும், நான்காவதாகிய நட்பினை எட்டாவதாகிய இணையென்றும் சொன்னமையினால் இசை நூலுக்கு மாறுபாடாயிற்று.

### 4. உலக மலைவு

120. உலகெனப் படுவதீண் டொழுக்கின் மேற்றே.

உலகமென்று சொல்லப்படுவது இங்கே ஒழுக்கம் என்னும் பொருளுடைய தாகும்.

உலக நடையோடு மாறுபடக் கூறுவது உலக மலை வாகும்.

அலைகடல்க ளேழுந்தூர்த் தந்தரத்தி னூடே
மலையனைய மால்யானை யோட்டிக்—கலவாரை
நீறாக்கி வைய நெடுங்குடையின் கீழ்வைத்தான்
மாறாச்சீர் மாநிலத்தார் மன்.

பொருள் : மாறாத சிறப்பினையுடைய பெரிய நிலத்தில் உள்ளவர்களுக்குத் தலைவன் அலைகளையுடைய எழுகடல்களையும் தூர்த்து விண்ணினூடே மலையை நிகர்த்த தனது மதயானையைச் செலுத்திப் பகைவர்களைப் பொடியாக்கி, இந்நிலம் முழுவதையும் நீண்ட தனது குடைநிழலின் கண்ணே தங்கும்படி செய்தான்.

இங்கே ஒரு நில வேந்தனை ஏழு கடலையுந் தூர்த்தான் என்றும் விண்ணில் யானையைச் செலுத்திப் பகைவரை வென்றான் என்றும் உலக நடையோடு மாறுபடக் கூறினமையால் உலக மலை வாயிற்று.

### 5. நியாய மலைவு

121. நியாய மென்பது நெறியுறக் கிளக்கின்
அளவையிற் றெளிக்கும் விளை பொருட்டிறமே

நியாயமென்று கூறப்படுவது காட்சி முதலிய அளவைகளாலே பொருட் கூறுபாடுகளைத் தெளிவிப்பதாகும்.

நியாயம் பொருந்துதலுடையது. கௌதமர் கபிலர் முதலியோர்களாற் செய்யப்பட்டுள்ள நியாய சூத்திரம் முதலியன நியாயநூல் எனப்படும்.

ஆய பொருள்கள் கண ந்தோ றழியுமெனத்
தூய அசோகின் முனியுரைத்த—தாயவன்றே
காதலர் நீங்க வெழுங்காம வெங்கனல்வாய்
மாத ருயிர்தாங்கு மாறு.

பொருள் : உலகத்திலுண்டாகிய பொருள்களெல்லாம் ஒவ்வொரு கணத்திலும் அழிந்து போகுமென்று, தூய அசோக மரத்தினடியிலிருக்கின்ற முனிவனுகிய அருகன் சொன்னது நல்ல ஆராய்ச்சியை உடையதன்று; தம் காதலர் பிரிய உண்டாகின்ற வெப்பமாகிய ஆசைத் தீ யினிடத்தே அகப்பட்டு மாதர் உயிரைத் தாங்கியிருக்கும் வீரத்தால்.

இப்பாட்டில் கண ந்தோறும் அழியும் என்னும் புத்தன் மொழியை அருகன் சொன்னதாகச் சொல்லியது நியாய நூற்கு மாறுபாடாகும். போதிமுனி-புத்தன். அசோகின் முனி—அருகன்.

### 6. ஆகம மலைவு

122. ஆகம மென்பன மநுமுத லாகிய
அறனொடு புணர்ந்த திறனறி நூலே.

ஆகமமென்று சொல்லப் பெறுவன அறத்தொடு பொருந்திய வகைகளை அறிதற்குக் காரணமாகிய மநுஸ்மிருதி முதலிய நூல்களாகும்.

மநுஸ்மிருதி முதலிய விதிப் பிரமாணத்திற்கு மாறாக வருவது ஆகம மலை வாகும்.

தெய்வம் விருந்தொக்க றென்புலத்தார் தாமென்னும்
ஐவகையுந் தம்பொருள்கொண் டாற்றுவார்—மையிலா
முக்கோலுங் கற்றோய் முழுமடியுந் தாங்கியே
தக்கோ ரெனப்படுவார் தாம்.

பொருள்: குற்றமற்ற திரிதண்டமும் காவியில் தோய்த்த முழு ஆடையையும் அணிந்து பெரியோரெனப் பட்டது. துறவிகள், தேவதைகள், விருந்தினர், உறவினர் கள், தென் புலத்தார், தாங்கள் என்னும் ஐவகை யாரை யும் தாங்கள் தேடிய பொருளைக் கொண்டே காப்பாற்று வார்கள்.

இங்கே தெய்வம் விருந்து முதலியவைகளைப் பேணு தலாகிய இல்லறத்தார்க்குரிய தொழிலைத் துறவிகளுக் குரியனவாகச் சொல்லியது ஆகமத்திற்கு மாறுபட்டதாம்.

**இடமலைவு முதலியவற்றிற்குச் சிறப்புவிதி**

123. கூறிய நெறியின் ஆறுவகை மலைவும்
நாடக வழக்கில் நாட்டுதற் குரிய

மேலே கூறப்பட்ட அறுவகை மலைவும் நாடக வழக்கிலே நிலையாகக் கொள்ளுதற்குரியனவாகும்.

நாடக வழக்காவது உள்ளவைகளோடு இல்லாதவை களையும் கூறுதலாகிய புனைந்துரை.

**1. இடமலைவு அமைதி**

மரகதச் சோதியுடன் மாணிக்கச் சோதி
இருமருங்குஞ் சேர்ந்தரிவை பாகன் — உருவ
மலைக்கு மகில் சுமந் தாரத்து வான்கோ
டலைத்து வரும்பொன்னி யாறு.

பொருள்: அகில் கட்டைகளைச் சுமந்து சிறந்த சந் தனக் கிளைகளையும் அலையினால் அசைத்துக் கொண்டு வரும் காவிரியாறானது பச்சைமணியின் ஒளியுடனே செம்மணியின் ஒளியையும் இரண்டு பக்கங் களினுஞ் சேர்ந்து, அவ்விரு நிறத்தையுங் கொண்ட உமை பாகனாகிய சிவபெருமானுடைய வடிவத்தையுங் குறை வுறச் செய்யும்.

இதனுட் பொன்னியாறு பிற மலைக்கும் பிற நாட்டிற்கும் உரிய மரகதம் முதலியவைகளை அலைத்து வருகின்றதென்றது இட விரோதமாயினும் வர்ணனை வகையால் அமைவதாயிற்று.

## 2. காலமலைவு அமைதி

மண்டபத்து மாணிக்கச் சோதியான் வாவிவாய்ப்
புண்டரிக மாலைப் பொழுதலரும்—தண்டரளத்
தாமஞ் சொரியுந் தனகநிலவான் டெல்லாம்பல்
பூவலருங் காலைப் பொழுது.

பொருள்: மண்டபத்தினுள்ள செம்மணியின் கதிரவனொளி போன்ற ஒளியினால், தடாகத்தினிடத்திலே தாமரை முகமானது அந்திப் பொழுதிலும் மலரும்; திங்களின் ஒளியை ஒத்த குளிர்ந்த முத்துமாலை பொழிகின்ற நற்றகுதி வாய்ந்த நிலவினாலே மெல்லிய ஆம்பல் மலரானது காலை நேரத்திலும் மலரும்.

இங்கே காலையிலே மலர்தற்குரிய தாமரை மாலையிலே மலரும் என்றும், மாலையிலே மலர்தற்குரிய ஆம்பல் காலையிலே மலரும் என்றும் கூறுதல் கால மாறுபாடாயினும் புனைந்துரை வகையாதலில் பொருந்துவதாயிற்று.

## 3. கலைமலைவு அமைதி

கூடம் விரவிக் குறைநிலத்தா னத்தியன்ற
பாடலமுதம் பருகினான்—ஆடுகின்ற
ஊச லயற்றோன்றி யொளியிழைக்கு நாணளித்த
ஆசில் வடிவே லவன்.

பொருள்: ஆடுகின்ற ஊசலின் பக்கத்திலே தோன்றி, ஒளி பொருந்திய அணிகலன்களையணிந்த பெண்ணிற்கு, நாணைக் கொடுத்த, குற்றமற்ற கூர்மை தங்கிய வேற்படையை உடையவன், ஆறாம் நரம்பாகிய பகையோடு

கூடிக்குறை நிலத் தானத் தானியன்ற பாடாலாகிய அமுதத்தைப் பருகினான்.

இங்கே ஆறாம் நரம்பாகிய பகையோடு கூடிக் குறை நிலத் தானியன்றதனைப் பாடலமுதம் என்றது கலை மலைவாயினும் புனைந்துரையாதலிற் பொருந்துவதாயிற்று.

### 4. உலக மாலைவு அமைதி

கடனாகம் வந்தலைக்குங் காலாளுந் தேரும்
அடல்செய் திருதுணி யாயிற்றே—உடலொன்றி
அந்தரமே யேகுவன் காண்மினோ யானியற்றும்
இந்திர சால மிது

பொருள்: நான்கு கடலையும் வந்தலைக்கின்ற காலாட்படையும் தேர்ப்படையும் போர்செய்து இரு கூறாயின. அவை உடலோடு பொருந்தி விண்ணிலே செல்வதைப் பாருங்கள். இது யான் செய்யும் இந்திர சாலம்.

### 5. நியாய மலைவு அமைதி

வானாகி மண்ணாய் மறிகடலாய் மாருதமாய்த்
தேனாகிப் பாலாந் திருமாலே—ஆனாயா
வெண்ணெய் விழுங்க நிறையுமோ மேலொருநாள்
மண்ணை யுமிழ்ந்த வயிறு.

பொருள்: விண்ணாகி, மண்ணாகி, அலைகளால் மடங்குகின்ற கடலாகி, காற்றாகி, தேனாகி, பாலுமாகும் திருமகளை மார்பில் தாங்கிய திருமாலே! ஆக்களைக் காத்த இடையனே! முன்னொருநாள் மண்ணையுமிழ்ந்த உன்னுடைய வயிறானது, இப்பொழுது வெண்ணையை விழுங்குவதால் நிறைவுறுமோ?

இங்கே வான் முதலிய எல்லாமானாய் என்பதற்கு மண்ணையுமிழ்ந்த வயிறு என்பது மாறாய் நியாய மலை வாயினும் புனைந்துரையாதலில் பொருந்துவதாயிற்று.

6. ஆகம மலைவமைதி

காய்கதி ரோனுக்குக் கன்னனையீன் றுங்கன்னி
யாகிப்பின் மூவரையு மீன்றளித்த — தோகை
தலைமைசேர் கற்பினாள் தான்வணங்கு முன்னாள்
மலையெடுத்துக் கார்காத்த மால்

பொருள்: வெப்பத்தைச் செய்கின்ற கதிரவனுக்கு முன்பே கன்னனைப் பெற்றும் கன்னியாகிப் பின்னர் தருமன், வீமன், அருச்சுனன் ஆகிய மூவரையும் யமன், வாயு, இந்திரன் ஆகிய மூன்று தேவர்களுக்கும் பெற்ற மயில் போன்ற சாயலையுடையவளும், முதன்மையான கற்பினையுடையவளுமாகிய குந்தி தேவியின் பாதங்களை, முன்னாளிலே கோவர்த்தன கிரியை எடுத்து, மழையைத் தாங்கி ஆயர்களைக் காத்த மாயோனாகிய கண்ணபிரான் வணங்கினான்.

கன்னனைப் பெற்றவளைக் 'கன்னி' என்றும், அதன் பின்னர் மூவரையும் பெற்றாள் அவள் என்றும் கூறி, அவளைக் 'கற்புடையாள்' என்றும் சொன்னதால் ஆகம மலைவு ஆயிற்று. ஆயினும், மால் வணங்கும் தகுதி பெற்றது பற்றிப் பொருந்துவது மாயிற்று.

புற நடை

124. மெய்பெற விரித்த செய்யுட் டிறனும்
எய்திய நெறியும் ஈரைங் குணனும்
ஐயெழு வகையின் அறிவுறும் அணியும்
அடியினும் சொல்லினும் எழுத்தினும் இயன்று
முடிய வந்த மூவடி மடக்கும்

கோமுத் திரிமுதற் குன்றா மரபின்
ஏமுற மொழிமிறைக் கவியீ ராறும்
இவ்வகை இயற்றுதல் குற்றம் இவ்வகை
எய்த வியம்பல் இயல்பேறன மொழிந்த
ஐவகை முத்திறத் தாங்கவை யுளப்பட
மொழிந்த நெறியின் ஒழிந்தவுங் கோடல்
ஆன்ற காட்சிச் சான்றோர் கடனே.

முத்தகம் முதலிய செய்யுள் வகைகளும், வைதருப்பம் கௌடம் என்னும் நெறிகளும், அவற்றோடு தொடர்ந்த செறிவு, தெளிவு முதலிய பத்துக் குணங்களும், தன்மை, உவமை முதலிய முப்பத்தைந்து பொருளணிகளும், மூன்றுவகை மடக்கு அலங்காரமும், கோமுத்திரி முதலிய பன்னிரு சித்திர கவிகளும், பதினைந்து வகைக் குற்றங்களும் உளப்படச் சொல்லப்பட்ட நெறிகொண்டு சொல்லாது ஒழிந்தவைகளையும் தழுவியமைத்துக் கொள்ளுதல் கடனாகும் என்பதாம்.

சொல்லணியியல் முற்றிற்று

## தண்டியலங்காரம் முற்றும்

# சூத்திர முதற்குறிப்பு அகராதி

[எண்-சூத்திர எண்]


அடி முழுது மடக்கலும் 94
அதுதான், ஓரடி 91
அதுவே, அடையும் பொருளும் 51
அதுவே, குணம் பொருள் சாதி 48
அதுவே, செம்மொழி 75
அதுவே, பொருள் குணங் காரண 42
அதுவே, பொருள் குணஞ் சாதி 28
அதுவே, பொருள் குணந் தொழில் 53
அதுவே, மாலை விருத்த 39
அதுவே, விரியே தொகையே 30
அபாவந்தானும் 59
அதற்றுள், பிரிபொருட் சொற்றொடர் 99
அவற்றுள், முத்தகச் செய்யுள் 2
அவைதாம், ஒருதிறப் 10
அவைதாம், வீர மச்சம் 68
அவையல பிறவி 58
அற்புதஞ் சிலேடை 31
அறமுத னான்கினும் 9
அன்ன போலெனும் 55
ஆகம மென்பன 122
ஆதியிடை கடை 92
ஆர்வ மொழி மிகுப்ப 66
ஆரிடத் துள்ளும் 114
இடமெனப் படுபவை 117

| | |
|---|---|
| இரண்டாம் வேற்றுமை | 116 |
| இன்னார்க் கின்ன | 86 |
| உண்ணிகழ் தன்மை | 67 |
| உதார மென்ப | 20 |
| உய்த்துணர வரும்வழி | 108 |
| உரிய பொருளின்றி | 24 |
| உருவக முவமை | 37 |
| உலகறி காரணம் | 49 |
| உலகெனப் படுவதீண் | 120 |
| உலகொழுக் கிறவா | 22 |
| உவமையும் பொருளும் | 34 |
| உறுமை யேது | 36 |
| எவ்வகைப் பொருளும் | 27 |
| எழுத்தின் கூட்டம் | 90 |
| என்று மபாவமு | 60 |
| என்னை யுடையாள் | துதி |
| ஏற்ற செய்யுட் | 25 |
| ஒப்புமை யில்லது | 88 |
| ஒரு நிரன் முன்வைத் | 107 |
| ஒரு பொரு டுணிய | 105 |
| ஒரு வகைச் சொற்றொடர் | 74 |
| ஒரு வகை நிகழ்வதற் | 83 |
| ஒருவினை பலவினை | 76 |
| ஒழு கிசை யென்பது | 19 |
| ஓரடி யொழிந்தன | 93 |
| ஓரெழுத்து மடக்கலும் | 95 |
| கருதிய குணத்தின் | 78 |
| கருதியது கிளவா | 70 |
| கருதிய பொருடொகுத்தது | 50 |
| கருதிய பொருடொகுத்தாங் | 81 |
| கருதிய பொருளை | 21 |

கலையெனப் படுபவை 119
களியானும் பித்தினும் 100
காமமும் அச்சமும் 102
காலம் பொழுதொடு 118
குணந்தொழில் சாதி 38
குணந் தொழில் முதலிய 77
குளகம் பலபாட் 3
குறிப்பு வெளிப் படுக்கும் 63
கூற்றினும் குறிப்பினும் 47
கூறிய நெறியின் 123
கூறிய வுறுப்பிற் 8
கோமூத்திரியே 96
கௌட மென்பது 14
சந்தி வழுவே 115
சிறப்பினும் பொருளினும் 73
சுபாவந் தானும் 59
செய்யுளந்தாதி 11
செய்யுளென்பவை 1
செய்யுள் வழுவேயாப் 113
செறிவெனப்படுவது 15
செறிவே தெளிவே 13
சொல்லின் கிழத்தி பாயிரம்.
சொல்லினும் பொருளினும் 18
சொல் வழுவென்பது 109
தன்மை யுவமை 26
தான் தற்புகழ்வது 69
தூர காரியமும் 61
தெரிபு வேறு கிளவாது 62
தெளிவெனப்படுவது 16
தொகையே விரியே 35
தொகை நிலைச் செய்யுள் 4

| | |
|---|---|
| நியாய மென்பது | 121 |
| நிரனிறுத் தியற்றுதல் | 65 |
| பண்புந் தொழிலும் | 29 |
| பழிப்பது போலும் | 82 |
| பாவிக மென்பது | 89 |
| பிரிபொருட் சொற்றொடர் | 97 |
| புகழ்வது போலப் | 64 |
| புகழினும் பழிப்பினும் | 79 |
| பெயர் பொருள் அல்பொருள் | 54 |
| பெருங்காப்பிய நிலை | 7 |
| பெருங்காப்பியமே | 6 |
| பொருள் பரிமாறுதல் | 85 |
| பொருளினும் சொல்லினும் | 5 |
| போல மானப் புரைய | 33 |
| மனப்படு மொரு பொருள் | 52 |
| மாறுபடு சொற்பொருள் | 80 |
| மாறுபடு பொருண்மொழி | 101 |
| மிகுதலும் குறைதலும் | 21 |
| முதல்வனும் பொருளும் | 57 |
| முந்துதான் முயல்வு றூஉந் | 71 |
| முழுவதுஞ் சொல்லும் | 46 |
| முன்வருஞ் சொல்லும் | 40 |
| முன்னத்தின் மறுப்பினது | 41 |
| முன்னொன்று தொடங்கி | 45 |
| மெய் பெற விரித்த | 124 |
| மெய் பெறு மரபின் | 12 |
| மேற் கோளேது | 98 |
| மொழிந்தது மொழிவே | 103 |
| மொழியப் பட்ட | 87 |
| யதிவழு வென்பது | 111 |
| யாதன்றிறத்தினும் | 56 |
| வகையுளியுரைப்புழி | 112 |
| வலி யெனப் படுவது | 23 |




